

உத்திரப் பிரதேசத்தில் தேர்தல் பிரசாரம் சூடு பிடித்துள்ள சமயத்தில் ராமஜென்ம பூமி பிரச்னை மீண்டும் தலை தூக்கியிருக்கிறது. மத்திய அரசு அனுமதித்தாலும் சரி, அனுமதி மறுத்தாலும் சரி, வரும் சிவராத்திரி (மார்ச் பன்னிரண்டாம் தேதி)க்குப் பிறகு எப்போது வேண்டுமானாலும், ராமர்



# அயோத்தி டெட்லைன்!

கோவில் கட்டுகிற பணி ஆரம்பித்து விடும் என்று மிரட்டுகிறார்கள் விஸ்வ ஹிந்து பரிஷத்தின் முக்கியஸ்தர்கள்!

''உ.பி சட்டசபைத் தேர்தலில் பா.ஜ.க ஜெயிப்பதற்காகத்தானே மறுபடி அயோத்திப் பிரச்னையை, இந்த சமயம் பார்த்துக் கையில் எடுத்துக் கொண்டீர்கள்?'' என்று கேட்டால் ''இல்லை. இது யதேச்சையான நிகழ்வு!'' என்கிறார் தமிழக வி.எச்.பியைச் சேர்ந்த ஆர்.பி.வி.எஸ். மணியன் ''2002 வருடம், மார்ச் மாதத்துக்குள் அரசாங்கம் தனது நிலையைத் தெளிவுபடுத்த வேண்டும். இல்லையெனில், நாங்கள் எங்களது செயல் திட்டத்தை அமுல்படுத்துவோம் என்று போன வருடமே நாங்கள் எச்சரிக்கை விடுத்தோம்... அது மட்டுமின்றி உ.பி சட்டசபைக்கு, கடந்த அக்டோபரிலேயே தேர்தல் நடந்திருக்க வேண்டும். ஆனால், கடந்த சட்டசபைத் தேர்தல் முடிந்தவுடன், எந்த ஒரு கட்சிக்கும் மெஜாரிடி பலம் இல்லாத காரணத்தால், மாநில கவர்னர், சட்டசபையை சில காலம் முடக்கி வைத்தார்.

அதன்பின் பா.ஜ.க.வும், பகுஜன் சமாஜ் கட்சியும் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டதன் பேரில், மாயாவதி முதல்வரானார். இதன் அடிப்படையில்தான், சட்டசபையின் ஆயுள் நீடிப்பு சாத்தியமானது. அதனால் கடந்த அக்டோபரில் நடந்திருக்க வேண்டிய சட்டசபைத் தேர்தல், இப்போது நடத்தப்படுகிறது. எனவே, தேர்தலை மனத்தில் வைத்து, சிவராத்திரி கெடுவை நாங்கள் தீர்மானிக்கவில்லை'' என்கிறார்.

அயோத்தியில் ராமர் கோவில் கட்டுவதற்குத் தேவையான தூண்கள், சிற்பங்களை உருவாக்கும் பணி சுமார் ஐந்து

வருடங்களுக்கு முன்பே ஆரம்பித்து விட்டன. அயோத்தியிலிருந்து இரண்டு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது கர்சேவ புரம். இங்கு நூற்றுக்கும் அதிகமான பணியாளர்கள் தினசரி வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். இது தவிர, ராஜஸ்தானிலும் ராமர் கோவில் சம்பந்தப்பட்ட பணிகள் நடைபெறும் சிற்பக் கூடங்கள் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன.

இது சம்பந்தமான பணிகளை, ராம ஜென்ம பூமி அறக்கட்டளை மேற்பார்வையிட்டு வருகிறது. அயோத்தியில், ராம ஜென்ம பூமியில் அமைக்கத் திட்டமிடப்பட்டுள்ள ராமர் கோவில் இரண்டு அடுக்குகள் கொண்டிருக்கும்; கோவிலின் தோற்றம், குஜராத் மாநிலத்தில் உள்ள 'அக்ஷயதான்' என்ற இடத்தில் உள்ள ராமர் கோவிலைப் போன்றே இருக்கும். 268 அடி நீளமும், 140 அடி அகலமும், 128 அடி உயரமும் கொண்டு, கட்டப்பட விருக்கும் இக்கோவிலுக்கென ஒன்ணே முக்கால் லட்சம் கன அடி அளவுக்கு ராஜஸ்தான் மாநிலத்திலிருந்து பிரத்யேகமாய்க் கொண்டு வரப்பட்ட பளிங்கு மற்றும் உயர்வகை கற்கள் பயன்படுத்தப்படும். கோவில் வளாகத்தில் திட்டமிடப் பட்டுள்ள 212 தூண்களில், இப்போதைக்கு நூற்றுப்பத்து தூண்கள் ரெடி! மொத்த செலவு நூற்று இருபது கோடி ஆகும் என்பது ஒரு மதிப்பீடு. அயோத்தியில் உள்ள கரசேவபுரத்தில் மட்டும் ஆண்டுக்கு ஒரு கோடி ரூபாய் மதிப்புக்குப் பணிகள் நடைபெறுகின்றன!

இதையெல்லாம் நோக்கும்போது, நீதிமன்ற தீர்ப்பு எப்படி அமைந்தாலும் ராமர் கோயிலைக் கட்டியே தீருவோம் என்று வி.எச்.பி மூர்க்கமாய்ப் பிடிவாதம் பிடிப்பது மிகத் தெளிவாகவே தெரிகிறது. சட்டத்தின் முடிவுக்குக் காத்திராமல் கோடிகளைக் கொட்டிடவும் தயாராயிருக்கிறது!

"பாபர் மசூதியை இடித்த சம்பவத்துக்குப் பின் அதனைச் சுற்றி இருந்த அறுபத்து ஏழு ஏக்கர் பரப்புள்ள இடத்தை, நீதிமன்றம் மத்திய அரசின் பொறுப்பில் வைத்துள்ளதே! அப்புறம் எப்படி சிவராத்திரிக்குப் பின், கோவில் கட்டும் பணியை ஆரம்பிப்பீர்கள். இது அத்து மீறிய செயல் ஆகாதா?'' என்று மணியனிடம் கேட்டோம்.

''அயோத்தி பிரச்னை பற்றி சில உண்மைகள் மக்களுக்குத் தெரிவிக்கப் படாமலேயே பொய்ப் பிரசாரம் இங்கே நடக்கிறது'' என்றார் அவர்!

''உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? அயோத்தி பிரச்னை சம்பந்தமாய், இதுநாள் வரை ஒரே ஒரு வழக்குக்கூட உச்சநீதிமன்றத்தில் கிடையாது! சர்ச்சைக்குரிய இடம் என்பது, இடிக்கப்பட்ட பாபர் மசூதி இருந்த எண்பதுக்கு அறுபது அடி அகலம் கொண்ட சின்ன இடம்தான். எங்கள் கோரிக்கை இதுதான்: இப்போது அலகாபாத் நீதிமன்றத்தில், அந்த எண்பதுக்கு அறுபது அடி இடம் தானே சர்ச்சைக்குரியதாக அறிவிக்கப் பட்டிருக்கிறது...? ஆனால் அதைச் சுற்றியுள்ள மத்திய அரசால் கையகப் படுத்தப்பட்ட நிலத்தில், வி.ஹெச்.பிக்குச் சொந்தமான சுமார் இரண்டே முக்கால் ஏக்கர் நிலமும் அடக்கம். எனவே, அரசு கையகப்படுத்திய, எங்களுக்குச் சொந்தமான இரண்டே முக்கால் ஏக்கர் நிலத்தை எங்களிடம் திரும்ப ஒப்படையுங்கள். நாங்கள் அந்த இடத்தில் ராமர் கோவில் கட்டடப் பணிகளை ஆரம்பித்து விடுகிறோம்'' என்கிறார் மணியன்.


• மணியன், சிங்கால்
படம்: சௌரா

தார்க்கரீதியாக இது சரியாகத் தோன்றினாலும்கூட, இது மேலும் பிரச்னையைச் சிக்கலாக்குமேயன்றி, பிரச்னையைத் தீர்க்கப் போவதில்லை என்பதே யதார்த்தம். காரணம், சர்ச்சைக்குரிய எண்பதுக்கு நாற்பது அடி நிலம் தவிர மற்ற இடத்தில் கோவில் பணி ஆரம்பித்தால், அது அடுத்த இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளில் முடிந்துவிடும். ஆனால் சர்ச்சைக்குரிய இடம் குறித்த வழக்கு அதற்குள் முடிவுக்கு வராது. கடந்த ஐம்பது ஆண்டுகளாக அலகாபாத் ஹைகோர்ட்டில் இழுத்தடித்துக் கொண்டிருக்கிறது இந்த வழக்கு.

இதற்கிடையில், வி.ஹெச்.பி தலைவர் அசோக் சிங்கால், பலதரப்பட்ட அரசியல் தலைவர்களையும் நேரில் சந்தித்து தங்கள் திட்டத்துக்கு ஆதரவு திரட்டும் முயற்சியில் கடந்த சில மாதங்களாக ஈடுபட்டிருக்கிறார். அதனடிப்படையில் முலாயம் உட்பட பல்வேறு வட இந்தியத் தலைவர்களிடமும் பேசிவிட்டு, இரண்டு மாதங்களுக்கு முன் சென்னையில் இரண்டு நாட்கள் அவர் முகாமிட்டது தெரிந்ததே.

ஜெயலலிதாவை, சிங்கால் சந்தித்த போது, இன்றைய சூழ்நிலையில் ராமர் கோவில் கட்ட ஆதரவு தருவது என்பதில் சில சிக்கல்கள் இருப்பதால், வெளிப்படையாக ஆதரித்து அறிக்கை வெளியிட இயலாது! ஆனால் ஆஸ்திக நம்பிக்கை கொண்டவர் என்ற அளவில் தமது தார்மிக ஆதரவு உண்டு என்று கூறினார். அதேசமயம், கருணாநிதியைச் சந்திக்க நேரம் கேட்டபோது, சிங்காலைச் சந்தித்துப் பேச அவர் மறுத்துவிட்டார்.

கருணாநிதியைப் போலவே சந்திரபாபு நாயுடு உட்பட தேசிய ஜனநாயகக் கூட்டணியின் பல தலைவர்கள் கருத்து கொண்டுள்ளனர். அதனால்தான் வேறு வழியின்றி பா.ஜ.க தலைவர் ஜனா கிருஷ்ணமூர்த்திகூட, '2004ம் ஆண்டு, தே.ஜ. கூட்டணியின் ஆட்சிக்காலம் முடிகிற வரை கூட்டணியின் குறைந்தபட்ச பொது திட்டம் கடைப்பிடிக்கப்படும்' என்று அறிவித்திருக்கிறார்.

''உ.பி. தேர்தலில், பா.ஜ.க.வின் இந்த நிலைப்பாடு, பாதிப்பை ஏற்படுத்தாதா?'




**''என்னப்பா ராப்பிச்சை! சாப்பாட்டுக்கு மட்டும் பாத்திரம் வைச்சிருக்கியே. தண்ணிக்கு என்ன செய்வே?''**

**''அப்பப்போ 'மினரல் வாட்டர்' வாங்கிப்பேன் தாயி!''**

**- இரா. திருமால்**

என்ற கேள்விக்கு, ''நிச்சயம் பாதிப்பு ஏற்படுத்தும். பா.ஜ.க தவிர மற்ற கட்சிகள் மைனாரிடி மற்றும் பிற்படுத்தப்பட்டவர்களின் வோட்டு வங்கியை நம்பியுள்ளன. பா.ஜ.கவுக்கு அந்த வோட்டுகள் கிடைக்காது. அயோத்தி பிரச்னையில் விட்டுக் கொடுத்தால் அந்த வோட்டுகளும் போய்விடும்'' என்கிறார் மணியன்!

ஆக, ராமரும் ராம ஜன்ம பூமியும் வெறும் வோட்டுப் பிடிக்கும் யுக்திகளாகி விட்டன! ஹிந்துத்வத்தின் காவலர்களாகத் தங்களைக் கருதுவோரே கடவுளை இந்த நிலைக்குக் கொண்டு வந்து விட்டார்கள்!

ராமர் இருக்கும் இடமெல்லாம் அயோத்தி என்ற மெய்யான ஹிந்து தத்துவம் புரியாவிட்டாலும் போகட்டும்; வெறுப்பை வளர்க்கும் நடவடிக்கைகளில் ஈடுபடுவது நாட்டுக்கே அபாயம் என்கிற அடிப்படை உண்மையைப் புறக்கணிக்கத் துணிவது சிறந்த அரசியலுமல்ல; மனிதநேயமும் அல்ல!

**- எஸ். சந்திரமௌலி**



சென்னை புறநகரில் விவேகானந்தா குருகுலத்தில் படப்பிடிப்பு! படத்தில் நடித்த ஐம்பது ஆதரவற்ற குழந்தைகளுக்குப் புத்தாடை எடுக்க வேண்டியிருந்தது. ஆனால் இல்லத்தில் இருக்கும் மற்ற குழந்தைகளின் மனம் புண்பட்டு விடக் கூடாதே! பார்த்தார் தயாரிப்பாளர், அங்கிருந்த முந்நூறு குழந்தைகளுக்கும் புத்தாடை வாங்கிக் கொடுத்துவிட்டார். அவர் நடிகர் பிரகாஷ்ராஜ். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி, வங்காளம், ஒரியா என்று இவர் நடிக்காத இந்திய மொழிப் படங்களே இல்லை. 'மக்கள் எனக்குக் கொடுத்த பணத்தை அவர்களுக்கே திரும்பக் கொடுக்க நினைக்கிறேன். அதற்காகவே படமெடுக்கிறேன்' என்று சொல்லும் இந்த மாறுபட்ட நடிகரை, அவரின் 'தயா' படப்பிடிப்பில் சந்தித்தோம்.

# "தாதாக்கள் பிடியில்

**திறமையான நடிகர், பெரிய நடிகர் என்றெல்லாம் பெயர் வாங்கியிருக்கும் நீங்கள், 'படையப்பா' படத்தில் ஒரு துண்டுக் கதாபாத்திரத்தில் நடித்தது ஏன்? இன்னும் பல படங்களில் ஒரே ஒரு காட்சியில் மட்டும் வந்து தலையைக் காட்டிவிட்டுப் போகிறீர்கள்! இமேஜ் ஜுரமெல்லாம் உங்களுக்கு வருவதில்லையா? இல்லை ரசிகன் நம்மை மறந்துவிடக் கூடாதே என்கிற பயமா?**

ரசிகன் என்னை மறப்பது பற்றியோ, புறக்கணிப்பது பற்றியோ நான் யோசிப்பதில்லை. ஆனால் இவன் இதற்குத்தான் லாயக்கு என்று, என்மீது முத்திரை எதையும் அவன் குத்தி விடக்கூடாது என்பதில் தீர்மானமாக இருப்பவன். 'நான்' என்கிற உணர்வை நசுக்கிக் கொண்டே இருக்க விரும்புகிறவன். இமேஜ் என்பது பனிமூட்டம் மாதிரியான மாயை. என்றைக்கும் அது நமக்குச் சொந்தமில்லை. அப்படிப் பட்டதை நானே உடைக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

மற்றொன்று, படத்தின் கதைப் போக்கை தீர்மானிக்கிற பாத்திரம். மூன்று காட்சிகள் தான் என்றாலும் 'உங்களை மாதிரி ஒரு பவர்ஃபுல் நடிகன்தான் அதைச் செய்ய வேண்டும்' என்று என் மீது நம்பிக்கை வைத்து வருகிறார்கள். அந்த நம்பிக்கையை நான் சிதைக்க விரும்பவில்லை.

'சொல்லாமலே' படத்தை எடுத்து முடித்துவிட்டு இயக்குனர் சசி என்னிடம்

## பிரகாஷ்ராஜ் பேட்டி



# தமிழ் சினிமா!"

**நமது ஹீரோக்கள் எல்லாம் தாதாக்களாகவும், ரவுடிகளாகவும் நடித்து வன்முறைக்குச் சமூக அந்தஸ்து தேடித் தரும் சீசன் இது! முதல்முறையாக தயாரித்து நடிக்கும் 'தயா' படத்தில் உங்கள் பாத்திரமும் ரவுடியாமே?**

தமிழ் சினிமாக் கதைகள் தாதாக்களின் பிடியில் இருப்பது என்னவோ நிஜம்தான். ஆனால் ரவுடியிஸத்தை நியாயப்படுத்தியோ, இல்லை அதைத் தூக்கிப் பிடிப்பது மாதிரியோ நான் இந்தப் படத்தை எடுக்கவில்லை. அது மாதிரியொரு படத்தை பிரகாஷ்ராஜ் ஒருபோதும் எடுக்க மாட்டான். காரணம் வெறும் நூற்று நாற்பது ரூபாயுடன் இங்கே வந்தேன். இந்தப் பணம், பொருள் மொத்தமும் மக்கள் எனக்குக் கொடுத்தது. அதை அவர்களுக்கே திருப்பிக் கொடுப்பதில் எனக்கு எந்தக் கஷ்டமும் இல்லை. பின்லேடன் தொடங்கி 'தயா' வரைக்கும் பாவம் செய்தவன் யாராக இருந்தாலும் தண்டிக்கப்பட்டே தீர வேண்டும் என்பது தான் நியதி. தயா மாதிரியான ஆட்களை அடக்குகிற ஆயுதம் அன்பு மட்டும்தான். மதர்தெரசா Vs ரவுடிதான் தயா. வலி, மனசு எல்லோருக்கும் பொதுவான விஷயம் என்பதைப் பொட்டில் அடித்த மாதிரி சொல்கிற படமாக 'தயா'வை உருவாக்கி வருகிறோம். ஒரு நடிகனாக எனக்குள் ஹீரோயிசத்தைத் திணித்துக் கொள்கிற முயற்சியில்லை இது. நடிகன் ஆன பிறகு மறுபடியும் நடிகனாக இருப்பது சரியான போர். தொடு வானத்தை நோக்கி ஓடுகிறேன். அங்கே இன்னொரு தொடுவானம் தெரிகிறது. திரும்பவும் அதை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறேன். இதுதான்

வந்தார். "இது எனக்கு முதல் படம். க்ளைமாக்ஸில் ஒரு விஷயத்தை அழுத்திச் சொல்ல வேண்டும் என்று நினைக்கிறேன். இதில் வருகிற டாக்டர் கேரக்டரை நீங்கள் தான் செய்ய வேண்டும். அந்தப் பாத்திரத்தில் வேறு யாரையும் என்னால் பொருத்திப் பார்க்க முடியவில்லை" என்றார். இப்படிச் சினிமாவை உளப்பூர்வமாக நேசிக்கிறவர்கள் கேட்கிறபோது எனக்குள் எட்டிப் பார்க்கிற ஈகோ தவிடுபொடியாகி விடுகிறது.

இன்னுமொரு சம்பவம், 'மின்சாரக் கனவு' படத்தில் வெறும் முப்பது வினாடி வந்து விட்டுப் போகிற பாத்திரம். அதில் 'தட்டி விடலாமா' என்று ஒரு சின்ன டயலாக் பேசினேன். படம் பார்த்துவிட்டு வெளியே வந்த ரசிகர்கள், "மச்சி, தட்டிவிடலாமா" என்று பேசிக் கொண்டார்கள். இதுதான் அந்தப் பாத்திரத்தின் வெற்றி.

நிஜ வாழ்க்கையில் எனது பாத்திரப் படைப்பு.

**டூயட் பாடிக் கொண்டு புதிதாக அறிமுகமாகும் ஒரு நடிகனுக்குக் கூட்டம் சேர்ந்தால், கொஞ்ச காலத்துக்கு ரொமான்ஸ் குதிரையாக்கி அவன் மீது பணம் கட்டுகிறார்கள். பிறகு அவனே தன்னை ஆக்ஷன் குதிரையாக்கிக் கொள்ள முயற்சி செய்கிறான். இப்படித்தான் திட்டமிட்டு ஹீரோயிசம் இங்கே வளர்க்கப்படுகிறதா?**

இதற்கு நடிகனை மட்டும் குறிப்பிட்டுக் குறைசொல்ல முடியாது. இங்கே ஏற்கெனவே தேவையை உருவாக்கி வைத்திருக்கிறார்கள். ஆங்கிலப் பள்ளியாகட்டும், ஜாதி அரசியலாகட்டும் எல்லாவற்றுக்கும் தேவையை உருவாக்கி, பணம் பண்ணுகிற சமுதாயத்தில் கலையும், கலைஞர்களும் கூட நிறைய தடுமாறித்தான் நிலைபெற வேண்டியிருக்கிறது. ஹீரோயிசத்துக்குத் தற்காலிகக் கவர்ச்சி மட்டும்தான் உண்டு. இது வரலாறு நமக்குச் சொல்லித் தரும் படிப்பினை. இதை நடிகன் சுயமாக உணர வேண்டுமே தவிர யாரும், யாரிடமும் எதையும் திணிக்கக் கூடாது. அது எந்தப் பலனையும் தராது! எனது கவலையெல்லாம்... இயக்குனராகத் துடிக்கிற புதியவர்கள், இப்படித்தான் இந்த ஹீரோவுக்குக் கதை பண்ண வேண்டும் போலிருக்கிறது என்ற தவறான வழிகாட்டுதலுக்கு ஆளாகிறார்களே என்பதுதான்.



திட்டமிட்ட ஹீரோயிஸம், ஒரு படைப்பின் இயல்பை, யதார்த்தத்தைச் சிதைத்துவிடும்.

**ஒரு தமிழ்ப் படத்தை கன்னடத்தில் டப் செய்தால் - இங்கிருந்து போய் யாரும் அதில் பணியாற்ற முடியாது. ஆனால் தமிழ் சினிமாவின் கதவுகள் எல்லோருக்கும் அகலத் திறந்திருக்கிறது. கன்னடப்பட உலகில் ஏன் இத்தனை பெரிய இரும்பு வேலி?**

அங்கே பக்குவம் கொஞ்சம் குறைவு! தமிழ் சினிமா, தென்னக சினிமாவின் தாய். கன்னடம், தெலுங்கு, மலையாளமெல்லாம் குழந்தைகள். குறையுள்ள மனிதனைப் பார்த்தால் நாம் கோபப்படுவதில்லை. மாறாகப் பரிதாபப் படுகிறோம். இது போன்ற வேலிகளை உருவாக்குவோரும் அதைப் பயன்படுத்தி வாழ்க்கை நடத்த நினைப்பவர்களும் வெகுசிலர். அவர்களைக் களைந்தாலே சிஸ்டம் சரியாகி விடும்...

**நீங்கள் பரந்துபட்ட வாசகர் என்பதை அறிவோம். சமீபத்தில் படித்த புத்தகம்?**

புரொடெக்ஷன், சினிமா தயாரிப்புத்தான் (உடல் அதிரச் சிரிக்கிறார்) தூக்கிய புத்தகத்தை கீழே வைக்க முடியவில்லை. திகிலும், திருப்பங்களும் நிறைந்த புத்தகத்தை விடவும் சுவாரஸ்யமாய் இருக்கிறது

**'தயா' படத்துக்குப் பிறகு சின்னச் சின்ன பாத்திரங்களில் மறுபடியும் பிரகாஷ் ராஜைப் பார்க்க முடியுமா?**

அதில் உங்களுக்கு என்ன சந்தேகம்? 'தயா' படத்துக்கு அடுத்து வெளிவரப் போகும் 'காதல் சடுகுடு' படத்தில் விக்கிரமின் மாமனாராக நடிக்கிறேன். மக்கள் மீது நம்பிக்கை இருக்கிறது. என் மீது நம்பிக்கையிருக்கிறது. தன்னை நம்புகிறவன் வீழ்ந்ததாகச் சரித்திரம் இல்லை.

சந்திப்பு : **ஆர்.சி. ஜெயந்தன்**

அட்டை மற்றும் படங்கள் : **வர்ஷா**

# திருமந்திரம்

## மூலமும் தெளிவுரையும்

**1800 பக்கங்கள்**

**3 தொகுதிகள் ரூ.450**




தமிழ் இலக்கியப் பரப்பில் பல்லாயிரம் பாடல்கள் உண்டு. அவற்றில் உள்ள எண்ணற்ற அடிகள் அனைத்தையும் யாரும் எப்போதும் நினைவில் வைத்திருப்பதில்லை. ஆனால் சில அடிகளை நாம் மறப்பதே இல்லை. 'தமிழ்' என்றவுடனே நினைவுக்கு வரும் மிகச் சிறந்த அடிகள்

"ஒன்றே குலம் ஒருவனே தேவன்"

"யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

என்பவை. இவற்றை அருளியவர் சித்தரும், சிவயோகியுமான **திருமூலர்** ஆவார். இவர், நந்தியிடம் உபதேசம் பெற்றவர். தமிழகத்தில் ஒரு ஞானப்பரம்பரையை உருவாக்கிய சிவயோகி. தில்லையில் பதஞ்சலி முனிவருடன் இறைவனின் திருக்கூத்தைக் கண்டு களித்தவர்; திருவாவடுதுறைக் கோயிலில் இருந்த ஓர் அரசமரத்தடியில் மூவாயிரம் ஆண்டு சிவ யோகத்தில் அமர்ந்து, ஆண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல் பாடியவர். இந்த 3000 பாடல்களைக் கொண்ட இத் திருமந்திரம், சைவத் திருமுறைகளுள் பத்தாம் திருமுறையாகும்.

சைவ சித்தாந்தத்தின் அரிய கருத்துக்கள் எளிய சொற்களில் விரைவாகவும், இனிமையாகவும் எப்படி வெளிவருகின்றன என்பதைக் காணுங்கள்.

திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக் கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு

இதில் அமைந்துள்ள தத்துவக் கருத்துக்கள் எண்ணி எண்ணி மகிழத்தக்கன.

திருமூலரின் தலையான கொள்கை அன்பே சிவம் என்பதாகும். இதனை அறியாதார் அறிவிலார் என்பது அவருடைய கருத்து.

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்

சிவன் அன்பு வடிவானவன் என்னும் இவ்வுண்மையை வற்புறுத்தும் இத் திருமந்திரமே சைவசித்தாந்த முதல் நூலாகும். இதனைக் கொண்டே பதினான்கு சித்தாந்த நூல்களும் எழுந்தன. சித்தாந்தம் என்ற தொடரை முதல் முதலில் வழங்கியது இந்நூல்.

இந்நூலில் அறம் பேசப்படுகிறது. தத்துவம் பேசப்படுகிறது. சமயம் பேசப்படுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக இதன் ஆசிரியர் யோகத்துக்குத் தனி இடம் கொடுத்துள்ளார். அதாவது, இந்நூலில் இல்லாத எப்பொருளும் இல்லை எனலாம்.

**தோத்திரமாகவும், சாத்திரமாகவும், வாழ்க்கை நூலாகவும் அமைந்த 'திருமந்திர' நூலினை அனைவரும் கற்றுணர வேண்டும் என்ற நோக்கில் தெளிவான உரையோடு வெளியிடுகிறோம். மகாயோகியான திருமூலரின் சிந்தனைகளைத் தாங்கிய திருமந்திரம் அனைவர் கையிலும் திகழ்வதாக!**

இந்நூலினைத் தபாலில் பெறக் கடிதம் எழுதுக. மூன்று தொகுதிகளையும் V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகை விலை, தபால் மற்றும் கட்டுச் செலவு சேர்த்து ரூ.**250** மட்டும் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். நேரில் பெற : ரூ.225 மட்டும் செலுத்தி நூலினை உடனே பெற்றுக் கொள்ளலாம். நேரம் : காலை 10 மணி முதல் இரவு 8 மணிவரை. இடைவேளையின்றி. ஞாயிறு வார விடுமுறை.

கடிதம் எழுத வேண்டிய முகவரி :
**வர்த்தமானன் பதிப்பகம்**
15, சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை-17.
(உஸ்மான் சாலை - கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)
☎ : 435 0561.

நாடக, சினிமா நடிகராக மட்டுமல்லாமல் சமூக உணர்வுள்ள பொதுஜனமாகவும் கொதிக்கிறார் எஸ்.வி. சேகர்!

# கேபிள் கொள்ளையைக் கேட்பார் இல்லையா?

- சீரியஸாகிறார் சிரிப்புக் கலைஞர்

“பால் விலை உயர்வு, பஸ், மின் கட்டணம் ஏற்றம், விபூதிப் பிரச்னை, கண்ணகி சிலை, ஆண்டிப்பட்டி ஆகியவை மக்கள் மெ(கொ)ல்லும் பிரச்னைகளில் சில. இந்தச் சந்தடி சாக்கில் வறுமைக் கோட்டுக்குக் கீழே உள்ள மக்களும், வாயைத் திறக்க யோசிக்கும் வகையில் கேபிள் டீ.வி. காரர்கள் அதிரடியாக கனெக்ஷனுக்கு முப்பது ரூபாய் ஏற்றி விட்டார்கள். நம் தமிழகத்தில் தட்டிக் கேட்கப்படாத சண்ட பிரசண்டங்களில் ஒன்று கேபிள் டீ.வி தொலைக்காட்சி என்றால் அது சத்தியம். ஏனென்றால் கேபிள் இல்லையென்றால் நாம் சுவாசிக்க முடியாதல்லவா!

சந்துமுனை அம்மன் கோயிலில் ஆடி மாத வசூலுக்குக் கூட ரசீது கொடுக்கிறார்கள், இந்த கேபிள்காரர்கள் வாங்கும் பணத்துக்கு எந்த ரசீதும் கொடுப்பதில்லை. ஒரு அட்டையில் அல்லது அவர்கள் கொண்டு வரும் நோட்டுப் புத்தகத்தில் நம் கையெழுத்தை வாங்கிக் கொள்வார்கள். நாமும் அப்பாவித்தனமாக (உண்மையிலேயே!) போட்டு விடுவோம். அவசியம் எது? ஆடம்பரம் எது? என்று தெரியாததன் விளைவுதான் இது! பே(ய்) சேனல்கள் கட்டணத்தை உயர்த்தி விட்டார்கள் என்று ஒளிபரப்பை



நிறுத்திய கேபிள் காரர்களுக்கு நாம் இந்த மாதம் பத்து ரூபாய் பிடித்தம் செய்து கொடுத்தா லென்ன.

இப்போது சொல்லப் போகும் மிகக் குறைந்தபட்ச புள்ளி விவரத்தைக் கேட்டால் உங்கள் மிச்சமிருக்கும் சிரிப்பும் வற்றிப் போகும். தமிழ்நாட்டில் ஐம்பது லட்சம் கேபிள் இணைப்புகள் உள்ளன. குறைந்த பட்சம் சுமாராக ஒரு வீட்டுக்கு 200 ரூபாய் மாத வசூல் என்றால், வருமானம் மாதத்துக்கே 100 கோடி. வருடத்துக்கு 1200 கோடி. செலவு 400 கோடி என்றால் லாபம் 800 கோடி. கொள்ளை புரிகிறதா?

'கஜானா காலி' என்று லாலி பாடும் ஆளுங் கட்சியினர் கேபிள் மீது கடைக் கண் வைத்தால், கமிஷன் போக அரசு கஜானாவுக்கு 800 கோடி ரூபாய் சேரும். இப்போது அறநிலையத்துறை உண்டியல் வசூல் தவிர அரசுக்கு வேறு வசூல் இல்லை என்ற தொல்லை தீரும். கேபிள்காரர்கள் சகட்டுமேனிக்குப் பொது இடங்களிலும் தெருக்களிலும் கம்பங்கள் நட்டு, கேபிள்களைக் கொண்டு செல்கிறார்கள்; உபயோகிப்பது அரசு மின்சாரம். ஏற்கெனவே ஏகப்பட்ட இலவச மின் விநியோகம் நடக்கிறது. மிச்ச சொச்ச மின்சாரமும் இப்படிப் போனால் மின் வாரியம் லாபம் ஈட்டுவது எப்படி? உடனே கேபிளைக் கைப்பற்றட்டும். குறுநில மன்னர்கள் போல் செயல்படும் கேபிள்காரர்களை மடக்குவோம். இப்போது கேபினால் சம்பாதிப்பவர்கள் லோக்கல் போலீஸ், ரவுடிகள் மற்றும் அரசியல்வாதிகளே!"

## திருவண்ணாமலை நகரச் சிறப்பிதழ்!

* அருணகிரி நாதரில் தொடங்கி, ரமணர், சேஷாத்ரி சுவாமிகள், யோகி ராம்சுரத்குமார் போன்ற மகான்கள் வாழ்ந்த உங்கள் புனித நகரம், இப்போதும் ஆன்மிகத்தைச் சுவாசிக்கிறதா...?

* அண்ணாமலையார் அருள்தேடி வரும் கிரிவல பக்தர்களின் அனுபவங்கள் என்ன?

* தினந்தோறும் உலகெங்கிலுமிருந்து பயணிகள் வந்துபோகும் உங்கள் ஊர் உதாரண நகரமாக உயர உங்களிடம் யோசனைகள் உண்டா?

தொடரும் சர்ச்சைகள், நடப்பு அரசியல், நிறைவேற்றப்படாத திட்டங்கள், வியப்பில் ஆழ்த்தும் வினோதங்கள், விபரீதங்கள் எதைப் பற்றியும் எங்களுக்கு எழுதுங்கள். கடைசி தேதி (28.2.2002) வரை காத்திருக்காமல் இன்றே எழுதி அனுப்புங்கள்.

"அரசுத் துறைகள் தனியார் ஆக, நீங்கள் தனியார் துறையை அரசுக்குத் தாரை வார்க்கச் சொல்கிறீர்களே? இது சரியா? அப்புறம், துஷ்பிரயோகங்கள், தொடருமே!" என்று கேட்டால் எஸ்.வி. சேகர் சொல்கிறார்:

"கண்ணுக்குத் தெரிந்து நடக்கும் கொள்ளை இது. அரசுக்கு இதைத் தடுத்து நெறிப்படுத்தும் பொறுப்பு இருக்கிறது. துஷ்பிரயோகம் இருக்க வாய்ப்பில்லை. சாட்டிலைட்டிலிருந்து வரும் தமிழ் சேனல்களைக் கொடுக்கும் பொறுப்பை மட்டும் அரசு எடுத்துக்கொண்டு, பராமரிப்பு வேலையைச் செய்யலாம். துஷ்பிரயோகம் இருந்தால் எதிர்க் கட்சிகள் பார்த்துக்கொள்ளும்!

— ப்ரியன்

அயோத்தி

ஸ்டாப் ஸ்டாப்...

வி.எச்.பி சூப்பர் ஃபாஸ்ட் எக்ஸ்பிரஸ்

STOP



2002 பிப்ரவரி 10
விஷு தை 28
மலர் : 60
இதழ் : 28

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## மிரட்டல் அரசியல்!

ஹிந்து - முஸ்லிம் ஒற்றுமைக்காக குரல் கொடுத்து உயிர்த் தியாகம் செய்த மஹாத்மா காந்தி மரணமடைந்து அரை நூறாண்டுக்கு மேல் ஆகிவிட்டது. ஆனால், இந்தியாவில் ஹிந்து - முஸ்லிம் விரோதம் இன்றும் தொடர்கிறது. ஒரு பயங்கரமான அரசியல் ஆயுதமாக மாறி, பொறுப்பற்ற அரசியல்வாதிகளின் கையில் சிக்கிக்கொண்டு, நாட்டின் பாதுகாப்பையே அச்சுறுத்துகிறது. மஹாத்மாவின் ஐம்பத்து நான்காவது நினைவு நாளன்று இஸ்லாமிய சட்ட வாரியமும் ஹிந்து அடிப்படைவாத அமைப்புகளும் ஒன்றையொன்று வார்த்தைகளால் தாக்கி, பகைமையைத் தூண்டிவிட்டிருக்கின்றன.

'ஆர்.எஸ்.எஸ்., வி.எச்.பி., பி.ஜே.பி. ஆகிய அமைப்புகள் சேர்ந்து நாட்டின் மதச் சார்பற்ற கொள்கையைக் குழிதோண்டிப் புதைத்துவிட்டன' என்கிறது இஸ்லாம் வாரியம். 'அயோத்தியில் ராமர் கோயில் கட்டும் திட்டம் உடனடியாகக் கைவிடப்பட வேண்டும்' என்று எச்சரிக்கிறது.

விச்வ ஹிந்து பரிஷத்தோ 'வந்தது வரட்டும் ; ராமர் கோயில் கட்டும் பணியை மார்ச் பன்னிரண்டுக்குப் பிறகு தொடங்கியே தீருவோம் ; நீதிமன்றத்தின் தீர்ப்புக்குக் காத்திருக்க மாட்டோம்' என்று மிரட்டுகிறது. 'இதற்காக மத்திய அரசையே காவு

கொடுக்கவும் நாங்கள் தயங்கமாட்டோம்' என்று வி.எச்.பி. தலைவர் கிரிராஜ் கிஷோர் கொட்டி முழக்குவது அகம்பாவமாக ஒலிக்கிறது!

மத்திய அரசைக் கலைக்கும் அல்லது கவிழ்க்கும் அதிகாரம் வி.எச்.பி.யின் கைகளில் எங்கே இருக்கிறது? ஆனால், பாரதிய ஜனதா கட்சியினரிடையே வி.எச்.பி.க்கு அபரிமிதமான செல்வாக்கு இருப்பதால் அவர்களைத் தனது இஷ்டப்படி இயக்க முடியும் என்று கருதுகிறது வி.எச்.பி.

"தேசிய ஜனநாயக முன்னணியின் ஒருங்கிணைந்த செயல் திட்டம், அயோத்தி ராமர் கோயிலுக்கு ஆதரவு அளிக்காததால், ஆட்சியில் இருக்கும்வரை பி.ஜே.பி. அத்திட்டத்தை ஆதரிக்க முடியாது" என்று அறிவித்திருக்கிறார் அக்கட்சியின் தலைவர் ஜனாகிருஷ்ண மூர்த்தி. ஆனால் பி.ஜே.பி.யின் தனிப்பட்ட கொள்கை ராமர் கோயிலை ஆதரிக்கிறது என்பதையும் அழுத்தமாய்க் கூறியிருக்கிறார்.

'பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் நடந்த யுத்தம்போல் எங்கள் யுத்தமும் தொடரும்' என்று மிரட்டிக் கொண்டிருக்கிறார் கிரிராஜ் கிஷோர். பிரதமரின் உடல்நலக் குறைவைக் கேலிக்குள்ளாக்கும் அநாகரிக வசனங்கள் உள்பட, தரக்குறைவான ஆவேச மொழிகள் வி.எச்.பி.யிடமிருந்து வெளிப்பட்ட வண்ணம் இருக்கின்றன.

பொருளாதார பிரச்னையும் காஷ்மீர் எல்லையில் பயங்கரவாதமும் பாகிஸ்தானுடனான நல்லுறவுக்கு நாளொரு புது சோதனையுமாக நாட்டைப் பல பிரச்னைகள் ஆட்டி வைக்கும் காலகட்டத்தில் அயோத்தியில் ராமர் கோயில் கட்ட வேண்டும் என்கிற உணர்ச்சிகரமான பிரச்னையைக் கிளப்புவது பொறுப்பற்ற சுயநல அரசியல்.

அந்த மிரட்டலுக்குப் பயந்து சட்ட அமைச்சரைக் கொண்டு சட்ட நுணுக்கங்களை



உடனடியாக ஆராய்ந்து பார்க்கும் படி பிரதமர் கேட்பது சமரச அரசியல்.

'அவ்வாறு பிரதமர் கேட்பதே வி.எச்.பி.யைத் திருப்திப்படுத்து வதற்குத்தான்; மத உணர்வுகளை மேலும் தூண்டிவிடும் இந்நட வடிக்கையை வன்மையாய்க் கண்டிக்கிறோம்' என்று காங்கிரஸ் முழங்குவது எதிர்க்கட்சி அரசியல்!

சுயநலம், சமரசம், எதிர்ப் புணர்வு ஆகிய மூன்றும் நீங்கிய தேசநல அணுகுமுறைதான் மத்திய அரசின் கொள்கையாக இருக்க வேண்டும்.

அயோத்தியில் பிரச்னைக்குரிய நிலமானது, வழக்கு முடியும்வரை மத்திய அரசின் கட்டுப்பாட்டில் இருக்க வேண்டும் என்பது நீதி மன்ற ஆணை.

சட்ட நிலைமையை ஆராய வேண்டும் என்று மத்திய அரசு கூறுவதன் மூலம் அவ்வாணையை மீற முடியுமா? என்று ஆராய இடங்கொடுத்ததாகிறது.

சட்டத்தின் அதிகாரத்தை மதித்துத் தீர்ப்புக்குக் காத்திருந் தால் மத்திய அரசின் மதிப்பு கூடும்.




பிரதமர் உறுதி காட்டினால் அத்வானி எதிர்க்கமாட்டார். மற்ற பி.ஜே.பி. எம்.பி.க்களும் தேசிய ஜனநாயக கூட்டணியின் இதர உறுப்பினர்களும் தங்கள் ஆதரவைத் தொடர்வது உறுதி. இந்தப் பிரச்னையில் காங்கிரஸின் ஆதரவும் கிட்டும்.

உ.பி.யில் வரவிருக்கும் தேர்தலில் வி.எச்.பி., ஆர்.எஸ்.எஸ். ஆகியவற்றின் ஆதரவு வேண்டுமே என்ற கட்டாயத்தில் பிரதமர் செயல்படக்கூடாது. 'அயோத்தி பிரச்னையில் சட்டபூர்வமான முடிவுக்குக் காத்திருங்கள்' என்று மிகத் தாமதமாகவேனும் இந்த 'அச்சுறுத்தல் அமைப்பு'களிடம் பி.ஜே.பி. கட்சித் தலைமை சொல்லியிருப் பதை வரவேற்கலாம். ஆனால் பிரதமரும் அவ்வாறே அழுத்தம் திருத்தமாகப் பேச வேண்டும்.

மிரட்டலுக்குப் பணிவது இந்தப் பிரச்னையில் மட்டுமின்றி பல முனைகளிலும் அராஜகத்துக்கு அடிகோலும்.

○



**மேஷம் :** நீங்கள் நன்றாக வேலை செய்தும் அலுவலகத்தில் போதிய அனுகூலம் கிடைக்கவில்லையா? கவலையே வேண்டாம். உங்கள் ஆற்றல், நிர்வாகத் திறமை குன்றின் மேல் இட்ட விளக்காகப் பளிச்சிடப் போகிறது. எதிலும் அவசரம் கூடாது; வாஜ்பாயைப் போன்று நிதானம் தேவை. ராசிநாதன் செவ்வாய் 12ல், சனி 2ல் இருப்பதால் உடல் நலத்தில் கவனம் தேவை. வீண் வாக்கு வாதம், சண்டைகளையெல்லாம் மூட்டைக் கட்டி வைத்து விடுங்கள். உடன் பிறந்தவர்களுடன் கருத்து வேறுபாடு ஏற்படும். கவனமாகக் கையாளுங்கள்.



**ரிஷபம் :** எல்லையில் ராணுவத்தைக் குவித்து வரும் வேளையில் ராணுவம், காவல், சட்டத் துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவீர்கள். மற்றவர்கள்

# நடக்குமென்பார்; நடக்கும்

வழக்கத்தைவிட அதிகமாக உழைக்க வேண்டும். மாணவர்களின் உழைப்பும் திறமையும் வீண் போகாது. பண்டிகை எல்லாம் முடிந்தாலும்கூட ஆடை, ஆபரணங்கள் வாங்குவீர்கள். சிவப்பு நிறப் பொருட்கள் ஆதாயம் கொண்டு வரும். சிறுசிறு பிரச்னைகள், இடர்பாடுகள் அவ்வப்போது ஏற்பட்டாலும் கவலை கொள்ள வேண்டியதில்லை. வீட்டில் சுபகாரியங்களுக்கான பேச்சு அடிபடும்.



**மிதுனம் :** உங்களுக்குப் பிரச்னைகள், எதிர்ப்புகள் எத்தனை வந்தாலும் செல்வி ஜெயலலிதா போல் சமாளிக்கும் திறமை உண்டாகும். பெண்களுக்கு நினைத்த காரியம் கைகூடும். புதிய சொத்துகள் வந்து சேரும். அரசு விவகாரங்களில் பிரச்னைகள் உண்டாகும். கவனம் தேவை. வழக்கு, போட்டி, பந்தயங்களில் வெற்றி கிட்டும், உஷ்ணம் சம்பந்தமான உபாதைகள் ஏற்படலாம். அதனால் உடல் நலத்தில் அக்கறை தேவை. வெளிநாட்டுத் தொடர்பால் அதிக நன்மை கிடைக்காது.



**கடகம் :** தமது உழைப்பாலும் திறமையாலும் மாநிலத்தையே முன்னுக்குக் கொண்டு வந்துள்ள சந்திரபாபு நாயுடு போல் உங்கள் உழைப்புக்கும் உரிய பலன் கிடைக்கும். மேதா பட்கர் போன்று பொது நலப் பணிகளில் ஆர்வம் அதிகமாகும். விவசாயிகளுக்கு லாபம் அதிகமாகும். கணவன் மனைவி உறவில் சிறு கருத்து வேறுபாடு ஏற்படும், விட்டுக் கொடுத்தால் பிரச்னைகளைத் தவிர்க்கலாம். எதையும் ஒன்றுக்கு இரண்டு முறை யோசித்துச் செயல்படுங்கள். செலவு அதிகமாகும், பர்ஸ் பத்திரம்.



**சிம்மம் :** நான்காவது ஒரு தின கிரிக்கெட் போட்டியில் வீரேந்திர சேவக்கின் திறமையும் உழைப்பும் பளிச்சிட்டது போல் உங்கள் திறமையும் வெளி உலகுக்குத் தெரியவரும். பதவி உயர்வு, அந்தஸ்து தேடி வரும். சனியின் பலத்தால் உழைப்புக்குப் பலன் கிடைக்கும். வெளியூர், வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை ஏற்படும். குருவின் சஞ்சாரத்தால் பொருளாதாரம் மேன்மையடையும். நீங்கள் நினைத்து, நினைத்து மகிழும்படியான இனிய சம்பவங்கள் ஏற்படும். புதிய முயற்சிகளைத் துவக்கலாம். மொத்தத்தில் கலக்கலான வாரம்தான் போங்க!



**கன்னி :** பூகம்பத்தால் கடுமையாகப் பாதிக்கப்பட்ட குஜராத் ஓராண்டான நிலையில் மனத்தில் தைரியமும் உற்சாகமும் கொண்டு பார்ப்பவர்களை வியக்க வைக்கும் நிலையில் நிமிர்ந்துள்ளது. அதே போல் நீங்களும் உற்சாகத்துடனும் தைரியத்துடனும் காணப்படுவீர்கள். பெண்களுக்கு உல்லாசம் உற்சாகத்துக்குக் குறைவிருக்காது. இடமாற்றம், வீடு மாற்றம் போன்றவை ஏற்படும். கையில் இருக்கும் பொருட்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். பொருளாதாரம் சம்பந்தப்பட்ட விஷயங்களில் எச்சரிக்கை அவசியம்.



**துலாம் :** பதினான்கு ஆண்டுகளுக்குப் பின் ஸ்வீடனுக்கு ஆஸ்திரேலிய ஓபன் பட்டத்தை வென்று கொடுத்த ஜோகன்சன் போல் துணிச்சலும் நம்பிக்கையும் மனத்தில் தோன்றும். தொட்டதெல்லாம் வெற்றி கிடைக்கும். விருந்து, விளையாட்டு, உல்லாசம் போன்றவற்றில் நாட்டம் ஏற்படும். புதிய பொருட்கள் வந்து சேரும். உடல் நலத்தில் கவனம் தேவை. அம்மாவின் நலனில் அக்கறை செலுத்துங்கள். எதிரிகள் காணாமல் போவார்கள்.



**விருச்சிகம் :** பில்கேட்ஸ் இன்று கொடி கட்டிப் பறப்பது போல் பிஸினஸில் நீங்களும் உயரே... உயரே... செல்வீர்கள். உங்கள் வசதிகள் அதிகரிக்கும். சிறுசிறு இடையூறுகள் வரும். பெண்களுக்கு நினைத்தது நிறைவேறும். இயந்திரப் பணியாளர்கள் எச்சரிக்கையுடன் வேலை செய்ய வேண்டும். பாதுகாப்பான பயணம் அவசியம். புதியவர்களிடம் அதிக நெருக்கம் கூடாது. நல்ல எண்ணமும், நல்லவர்களுடன் தொடர்பும் கொள்வது நன்மை தரும்.



**தனுசு :** எட்டு ஆண்டுகளாக முக வசீகரத்தாலும் பேச்சாற்றலாலும் ரசிகர்களைக் கவர்ந்திருக்கும் பெப்சி உமா போல் உங்கள் ஆற்றலும், வசீகரமும் பளிச்சிடும். குடும்பத்தில் நல்ல காரியங்கள் நடக்கும். குதூகலமும் அமைதியும் நிறைந்து காணப்படும். இதுவரை இருந்து வந்த பிரச்னைகள் விலகிப் போகும். வெளிநாடு போகும் வாய்ப்பு சிலருக்கு ஏற்படும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கிட்டும்.



**மகரம் :** எதிர்ப்புகளைக் கடந்த துணிச்சலுடன் திருமணம் செய்து இல்லறத்தை நல்லறமாக நடத்தி வரும் தேவயானி ராஜகுமாரன் போல் கணவன் - மனைவி உறவு நன்றாகவே இருக்கும். பெயர், புகழ், ஆதாயம் அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்துங்கள். ஆசிரியர்கள், ஆன்மிகவாதிகள், அரசியல்வாதிகளுக்குச் சங்கடங்கள், பிரச்னைகள் ஏற்படும். நிதானமாகவும், பக்குவமாகவும் சமாளிப்பது அவசியம். சிந்தித்துச் செயல்படுவது நல்லது.



**கும்பம் :** நம் நாட்டுக்குப் பக்கத்து நாட்டால் பிரச்னை இருப்பது போல் உங்கள் பக்கத்து வீட்டுக்காரர்களால் பிரச்னைகள் ஏற்படும். பேச்சில் கடுமையைக் குறைத்து சாதுர்யமாகக் கையாள வேண்டும். வம்பு, சண்டை பக்கம் தலை வைத்துப் படுக்க வேண்டாம். வாழ்க்கைத் துணையாலும், தந்தையாலும் செலவு ஏற்படும். பொருளாதார நிலை நன்றாக இருக்கும். டும்... டும்... நடக்க சந்தர்ப்பம் அமையும். புதிய முயற்சிகள் தேடி வரும்.



**மீனம் :** நிம்மதிப் பெருமூச்சு விடும் ஆப்கானிஸ்தான் மக்கள் போன்று உங்கள் எதிரியும் ஓடிப் போய், நன்மை அடைவீர்கள். உழைப்பிற்கேற்ற ஊதியம் கிடைக்கும். பக்திமார்கம், ஞானமார்கம், ஆன்மீகம் ஆகிய துறைகளில் உள்ளவர்கள் மனத்தெளிவு பெறுவார்கள். உடன் பிறந்தவர்களிடம் அதிக பயனை எதிர்பார்க்க வேண்டாம். எதிலும் அவசரம் வேண்டாம். மாணவர்கள் மேன்மையடைவார்கள். பயணத்தில் கவனம் தேவை.

**பிப்ரவரி 6 முதல் 12 வரை**



சென்னை, அடையாறில் புது ஃபிளாட் வாங்கியிருக்கும் செய்தி வாசிப்பாளர் வரதராஜன் (சிம்மம்) புதிய முயற்சிகள் துவக்கலாம்.



# அல்லி அர்ஜுனா

'எனக்கெல்லாம் கதைப் பஞ்சம் கிடையாது' என்று சின்ன டாபிகல் சமாசாரத்தை வைத்துக்கொண்டு தில்லாக திரைக் கதை அமைப்பதும், அதைப் புத்தம் புதிய பேக்டிராப்பில் படமாக்குவதும்தான் சரண் ஸ்டைல். இந்தப் படத்திலும் நல்ல கதை, கதைக்களம் எல்லாம் இருக்கிறது.... ஆனால் நிறைய காட்சிகள் அள்ளித் தெளிக்கப்பட்ட அவசரக் கோலம்.

அப்பர் மிடில்கிளாஸ் பெற்றோரின் பொறுப்பின்மையால் முரடனாகும் இளைஞன். ஒரு பெண்ணை ஈவ்டீசிங் செய்துவிட, அவள் தீக்குளித்துச் சாகிறாள். இறுதியில் அதைத் தெரிந்து கொள்ளும் அவன், திருந்துவதுதான் கதை.

'கடல்பூக்களி'ல் நல்ல நடிகர் என்று நிரூபித்த மனோஜ், இமேஜ் பார்க்காமல் ஆன்டி ஹீரோ ரோலில் தைரியமாக நடித்திருப்பதை பாராட்டலாம். ஆனால் காதல் வயப்பட்ட பிறகும் முறைத்துக்கொண்டே லவ் பண்ணுவது எடுபடவில்லை.

முதல் படம் என்று சொல்லவே முடியாது. ரிச்சாவின் நடிப்பு எல்லா காட்சிகளிலும் ரிச். தொண்டை கிழிய கத்திப் பேசும் வினுச்சக்கரவர்த்தி, ஜீன்ஸ், டீ ஷர்ட் அணிந்து, ஐம்பது வயது 'முதிர்கண்ணனாய்' அமைதியாக வந்து அசத்துகிறார். வாய் பேச முடியாத சார்லிக்கு, வையாபுரி டப்பிங் கொடுப்பதும், இறுதியில் அது நாயகிக்குத் தெரிந்திருப்பதுமான, பழைய சோற்றுத் தனத்தையெல்லாம் சரண் மறந்துவிடுவதே நல்லது. ப்ரீதா தீக்குளித்துச் சாகும் காட்சி, தங்கையின் சாவுக்கு மனோஜ்தான் காரணம் என்று தெரிந்ததும், அவரைப் பிடித்து நையப் புடைத்து, கொளுத்த முயற்சிக்கும் இறுதிக்காட்சி, இரண்டையும் குலை நடுங்குகிற மாதிரி படம் பிடித்திருக்கிறார் சரண் கூர்மையான வசனங்கள் பளிச். ரகுமானின் சராசரிக்கும் கீழான இசையால் சரணின் ரசனை மிகுந்த 'டச்சஸ்' பாடல் காட்சிகளில் மிஸ்ஸிங். அல்லி அர்ஜுனாவில் ரிச்சாவின் அல்லி ராஜ்யம் மட்டும்தான் மனத்தில் நிற்கிறது.

— விஷுவல்தாசன்

● ஆவரெஜ்

• படம் உதவி: ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்



# கொடி காத்த குமரன்

## திருப்பூர் கிருஷ்ணன்

உள்ளார்ந்த வியப்போடு நான் சிவாஜி கணேசனைப் பார்த்துக்கொண்டிருந்தேன். முதுமையின் கனிவிலும் ஒரு தனி எழில். பார்க்கப் பார்க்கத் திகட்டாத தோற்றம். இந்த ஒரே உருவம் தான் எத்தனை உருவங்களாகத் தன்னை நடிக்கும்போது மாற்றிக் கொள்கிறது! கூடு விட்டுக் கூடு பாயும் அற்புத ரசவாதத்துக்குத்தான் நடிப்பு என்று பெயரா!

நடிப்பதற்கென்றே இயற்கை படைத்த அந்தக் கண்களிலும் முகத்திலும்தான் என்ன வசீகரம்! கலையுலகின் இமயமலை ஒரு நாற்காலியில் அமைதியாக அமர்ந்து என்னைக் கனிவோடு பார்த்துக்கொண்டிருந்தது போல் தோன்றியது.

ஒரு நேர்காணலுக்காக நேரம் கேட்டு அவரைச் சந்திக்கச் சென்ற தருணம். அவரது வீட்டின் மாடி. விசாலமான கூடம். நானும் அவரும் மட்டும். பணியாளிடம் காப்பி கொண்டு வரப் பணித்தார். பணியாளர் அதன் பொருட்டு உள்ளே சென்றதில் நாங்கள் இருவரும் தனித்திருந்தோம்.

அவர் மெல்ல எழுந்து, அந்தக் கூடத்தின் ஒரு கோடியில் இருந்த மின் விசிறியின் பொத்தானை அழுத்திவிட்டு வந்து அமர்ந்தார். வந்த விருந்தினரை அன்போடு உபசரிக்கும் அவரது பிரியத்தின் குளுமை என்மேல் காற்றாய்ச் சுழன்றது. புகழ்ப் போதையில் மயங்காத எளிமையின் பொலிவு அவர் மேல் ஏற்கெனவே நான் வைத்திருந்த மரியாதையை இன்னும் அதிகப்படுத்தியது.

'இப்போது இங்கே இரண்டு விசிறிகள்' என்று பேச்சைத் தொடங்கினேன். அவர் என்ன என்பதுபோல் கூர்மையாய் என்னைப் பார்த்தார்.

"நானும் உங்களுடைய நிரந்தர விசிறிதான்" என்றேன்.

சப்தம் போட்டு சந்தோஷமாய்ச் சிரித்தார்.

அதற்குள் பணியாள் கொண்டு வந்த காப்பியை இருவருமாக அருந்த எங்கள் பேச்சு மேலும் தொடர்ந்தது.

"உங்க ஊர் திருப்பூர்ங்கறீங்களே தம்பி! திருப்பூர்ல குமரன் பொஞ்சாதி ராமாயி அம்மாள் நலமா இருக்காங்களா?"

"நலமா இருக்காங்க. அது மட்டுமில்லே. உங்களைப் பற்றி அடிக்கடி விசாரிப்பாங்க" என்றேன்.

திருப்பூரில் 'ராஜபார்ட் ரங்கதுரை' சினிமா ஓடிக்கொண்டிருந்த காலம். அதில்தான் கடைசிக் காட்சியில் சற்று நேரம் திருப்பூர் குமரனாக நடித்திருந்தார் சிவாஜிகணேசன். ஆச்சரியகரமான வேடப் பொருத்தம் அது.

அந்தக் காட்சியைப் பார்ப்பதற்கென்றே அந்த சினிமாவுக்குப் போனார் குமரனின் மனைவி ராமாயி அம்மாள். திருப்பூர் குமரனாக வரும் பாத்திரம் கொலையுண்டு இறப்பதைப் போல் அமைந்த கடைசிக் காட்சியைப் பார்த்தார். பார்த்துக் கொண்டிருக்கும்போதே கீழே மயங்கி விழுந்தார் அந்த மூதாட்டி. பிறகு

தண்ணீர் தெளித்து மயக்கம் தெளிவிக்கப்பட்டு பத்திரமாக திருப்பூர் ஓடக்காட்டிலிருந்த அவரது இல்லத்துக்கு அனுப்பி வைக்கப்பட்டார்.

நான் பிறகொருமுறை ராமாயி அம்மாளைச் சந்தித்தபோது கேட்டேன்.

"சிவாஜியின் நடிப்பு எல்லோரையும் மயங்க வைக்கக் கூடியதுதான் அம்மா. ஆனாலும் நீங்கள் ஏன் அவர் குமரனாக நடித்ததைப் பார்த்து அப்படி மயக்கம் போட்டு விழுந்தீர்கள்?"

அப்போது ராமாயி அம்மாள் சொன்ன பதில் நெஞ்சை உலுக்கும் ஒரு துயரக் காவியம்.

"தம்பி, பத்து வயசுலே எனக்குக் கலியாணம். வயசுக்கு வர்றதுக்கு முன்னாடியே பதினேழு வயசுலே தாலியறுத்தேன். புருசனோட வாழ்ந்த வாழ்க்கை ஏழு வருசம். அவர் போலீஸ்லே அடிபட்டு சாகறப்பகூட நான் திருப்பூர்லே இல்லே. எத்தினி வருசம் ஓடிப் போச்சு. 'இதோ என் புருசன்'னு அந்தப் பாத்திரத்தையே என் புருசனா நினைச்சுப் பாத்தேன். அந்தப் பாத்திரம் செத்து விழுந்தப்ப, உண்மையிலேயே என் புருசன் அப்பத்தான் செத்ததா நினைச்சு மயக்கம் போட்டு விழுந்திட்டேன் ராசா. அடடா! என்னமா நடிச்சிருக்காரு!"

சொல்லிவிட்டு விழிகளைத் துடைத்துக் கொண்டார் ராமாயி அம்மாள்.

இந்தச் சம்பவத்தை நான் சொல்லக் கேட்டு சிவாஜி கண் கலங்கினார்.

# சிவாஜி

'எப்படிப்பட்ட தியாகத்தையெல்லாம் பண்ணி இந்த சுதந்தரத்தை நாம் வாங்கியிருக்கிறோம்' என்று சொல்லிச் சொல்லி மனம் நெகிழ்ந்தார். முன்னெல்லாம் திருப்பூர் போக நேர்ந்தால் தாம் தவறாமல் ராமாயி அம்மாளைச் சென்று சந்தித்து ஆசி பெற்று வந்ததையும் நினைவு கூர்ந்தார்.

குமரன் காலமான ஒரு மாதத்தில் மகாத்மா காந்தி குமரன் மனைவியை வந்து பார்த்து ஆறுதல் தெரிவித்தது, ஜெயப்பிரகாஷ் நாராயண், பெருந்தலைவர் காமராஜ், எம்.ஜி. ராமச்சந்திரன் போன்றோரெல்லாம் அந்த அம்மையாரை வந்து சந்தித்தது போன்ற விவரங்களை நான் சிவாஜியுடன் பகிர்ந்துகொண்டேன்.

கல்கி, ர.சு. நல்லபெருமாள், சி.சு. செல்லப்பா, தீபம் நா. பார்த்தசாரதி, ஜோதிர்லதா கிரிஜா என்று இலக்கியத்தில் சுதந்தர காலத்தைப் பதிவு செய்தவர்கள் பலர் உண்டு. நடிப்புத் துறையில் அதிக பட்சம் அந்தக் காலத்தைப் பதிவு செய்தவர் சிவாஜி கணேசன்தானே! வீரபாண்டிய கட்டபொம்மன், வ.உ. சிதம்பரம் பிள்ளை, மகாகவி பாரதியார் உள்பட எத்தனை எத்தனை வேடங்கள்... எல்லாவற்றிலும் மிகச் சரியாய்த் தன்னைப் பொருத்திக்கொண்டு நடித்த அவரது கலையின் கம்பீரம்..

திருப்பூர் குமரனின் மனைவி தொண்ணூறு வயது வாழ்ந்து, சில ஆண்டுகள் முன்னால் காலமாகிவிட்டார். எழுபத்து மூன்று ஆண்டுகள் கணவனை இழந்த கைம்மை வாழ்வு.

தம் புதல்வனைப் போல் அவர் பிரியம் செலுத்திய சிவாஜி கணேசனும் அண்மையில் காலமாகிவிட்டார்.

செவாலியர் சிவாஜி கணேசனுக்கு நடிகர் திலகம் பட்டம் உள்பட எத்தனையோ விருதுகள் வந்ததுண்டு. அவர் இல்லம் இருக்கும் வீதிக்கே அவர் பெயரும் வைக்கப்பட்டிருக்கிறது. இன்னும் எத்தனையோ பெருமைகள் அவருக்கு உண்டுதான்.

ஆனால் அவரது நடிப்பைக் கண்டு மயக்கம் போட்டு விழுந்த ராமாயி அம்மாளின் பாராட்டு அவர் பெற்ற எல்லா விருதுகளிலும் உயர்வானது என்று எனக்குத் தோன்றுகிறது. நாட்டுக்காகத் தன் திலகத்தைச் சின்ன வயதிலேயே தியாகம் செய்த பெண்மணியின் பாராட்டை நடிகர் திலகம் பெரிதாய் மதித்தார் என்பது சிவாஜியின் கனிந்த மனத்துக்கு ஓர் அத்தாட்சி.



• ராமாயி அம்மாள்

# ரசிகர் திலகம்

நான் பஸ்ஸில் ஏறி அமர்ந்தபோது மணி ஆறு நாற்பத்தைந்து. ஏழு மணிக்கு சினிமா ஆரம்பித்துவிடும். இந்த ஏழு மணி காட்சிதான் கடைசி காட்சி.

காலையில் 'மலையாள மனோரமா' படித்தபோது, நடிகர் பார்த்திபன் நடிக்கும் முதல் மலையாள சினிமா வெளியாவதாக, வந்திருந்த விளம்பரத்தைப் பார்த்ததும் இந்த படத்தை இன்றே பார்த்துவிட வேண்டும் என்று முடிவு செய்துவிட்டேன்.

வேலைக்குப் போய் வந்து குளித்து தயாராகக் கொஞ்சம் நேரமாகிவிட்டது. படத்தில் மலையாள சூப்பர் ஸ்டார்கள் யாரும் இல்லையென்றாலும் பிரபல இயக்குனர் படம் என்பதால் குறித்த நேரத்தில் தியேட்டருக்குப் போகவில்லை என்றால் டிக்கெட் கிடைக்காது.

நான் பார்த்திபன் ரசிகன். பார்த்திபன் நடிக்கும் கதாபாத்திரங்களைவிட 'மனிதநேய முள்ள' நிஜப் பார்த்திபனைத்தான் எனக்கு ரொம்ப பிடிக்கும். மனித நேயம் பற்றி அவர் கொண்டுள்ள உயர்ந்த எண்ணங்கள் என்னைக் கவர்ந்தவை. அவர் '..க்கும்மா' ஏதாவது கிறுக்கலாக எழுதுவதைக் கூட ரசிப்பேன்.

எனது மானஸீக குருவாக பார்த்திபனை நினைத்துக் கொண்டிருக்கும் நான் அவர் நடித்த முதல் மலையாளப் படத்தை ரிலீஸ் அன்றே பார்க்காவிட்டால் எப்படி? அதுதான் உடனே கிளம்பி விட்டேன்.

பஸ்ஸில் எனக்கும் பின்னால் உள்ள ஸீட்டில் அமர்ந்திருப்பவர், "டிரான்ஸ் போர்ட் பஸ் ஸ்டாண்ட் வந்துவிட்டதா?" என்று யாரிடமோ கேட்டார்.

பக்கத்தில் கண்டக்டர் சொன்னார்.

"இந்த பஸ் டிரான்ஸ்போர்ட் பஸ் ஸ்டாண்டுக்குப் போகாது. இந்த வழியா போற எந்த பஸ்ஸும் போகாது. ஜிஎச் பாலம் இறங்கி கொஞ்சம் தூரம் நடக்கணும். இல்லைன்னா ஆட்டோ பிடிச்சுப் போகலாம்."

"ஆட்டோ.." என்று இழுத்தார் கேட்டவர்.

நான் சினிமா பார்க்கப்போக உள்ள தியேட்டருக்கு எதிரேதான் உள்ளது. டிரான்ஸ்போர்ட் பஸ் ஸ்டாண்ட். போகும்



வழியில் டிரான்ஸ்போர்ட் பஸ் ஸ்டாண்ட் இருக்கும் இடத்தை இவருக்குக் காட்டலாம்...

"நான் அந்த வழியாகத்தான் போறேன். உங்களுக்கு டிரான்ஸ்போர்ட் பஸ் ஸ்டாண் டைக் காட்டறேன்."

"அப்புறம் என்ன? இவர்கூட போங்க. காட்டுவார்" என்றார் கண்டக்டர்.

ஒவ்வொரு பஸ் ஸ்டாப்பிலும் பஸ் நின்றதும் "இங்கே இறங்கணுமா ஸார்?" என்று பின்னாலிருந்து அவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

நான் சொன்னேன்.

"இறங்க வேண்டிய இடம் வந்ததும் நானே சொல்றேன்."

ஜி. எச். பாலம் வந்ததும் நான் எழுந்து "எழுந்திருங்க. இங்கேதான் இறங்கணும்" என்றேன்.

அவர் தடுமாறி எழுந்ததும்தான் கவனித்தேன். கையில் வாக்கிங் ஸ்டிக்கும் ஒரு பேக்கும் வைத்திருந்தார். அவர் கண்களைப் பார்த்தபோது பார்வை இல்லாதவர் போல் தோன்றியது.

"இறங்குங்க..."

அவர் எழுந்து இறங்க வழி தெரியாமல் தடுமாறியதும், அவர் பார்வையற்றவர் என்பது உறுதியானது. அவர் கையிலிருந்த பையை வாங்கிக் கொண்டு அவர் கையைப் பிடித்துக் கீழே இறக்கினேன்.

"வாங்க" என்று அவர் கையைப் பிடித்தபடி நடக்க ஆரம்பித்தேன். இரண்டு இடங்களில் சாலையைக் கடக்க வேண்டியிருந்தது. இருந்தாலும் அவர் எந்தச் சிரமும் இல்லாமல் நடந்து வந்து கொண்டிருந்தார்.

நடந்தபடியே நான் கேட்டேன்.

"நீங்க எந்த ஊருக்குப் போகணும்?"

"கோட்டயம்."

"உங்க பேரு என்ன?"

"ஜான்"

"இங்கே என்ன



கல்யாண ஓடை இளங்கோ

பண்றீங்க?"

"படிக்கிறேன், தொழில் கல்வி."

ஒரு குறுக்கு வழிக்குள் அழைத்துக் கொண்டு போனபோது ஒரு சிறு பயம் தோன்றியது. ஒரு சிலர் குருடன் மாதிரி நடித்துக் கொள்ளையடிப்பதாகவெல்லாம் பத்திரிகைகளில் செய்தி வருகிறதே... ஒரு வேளை இந்த ஆளும்...?

'ஓ– இந்த ஆளுக்கு என்னிடம் கொள்ளை அடிக்க என்ன இருக்கிறது? ஐம்பது ரூபாய் பணமும் கொஞ்சம் சில்லறை காசுகள் தவிர.'

"ஸார், எங்கோ அவசரமா போற மாதிரி தெரியுது.." என்றார் ஜான்.

அப்போதுதான் உணர்ந்தேன். அவரைப் பிடித்து இழுத்துக் கொண்டு நடக்கிறேன் என்று.

"ஸாரி... கொஞ்சம் அவசரம்தான்" என்று சொன்ன பிறகு மெதுவாக நடக்கத் தொடங்கினேன்.

"ஸார், ஒரு உதவி செய்யணும்."

"என்ன?"

"என்னை கோட்டயம் இல்லேன்னா எர்ணாகுளம் பஸ்ஸில் ஏத்திவிடணும்."

"சரி."

"ஒண்ணும் சிரமம் இல்லையே...?"

"இல்லை... இல்லை..."

'ஓ... பார்த்திபனை மானசிக குருவாக நினைத்துக் கொண்டிருக்கும் நான் இந்தச் சிறு உதவியைச் செய்யவில்லை யென்றால் எப்படி?'

"ஸார், பஸ் ஸ்டாண்ட் வந்திருச்சா?"

"இதோ, இன்னும் ஒரு நிமிஷம் நடந்தால் போதும்."

கேரள அரசு போக்குவரத்துக் கழகம். பஸ் ஸ்டாண்டுக்குள் ஜானை மெல்ல அழைத்துக் கொண்டு போனேன். மணி பார்த்தேன். ஆறு ஐம்பத்தைந்து.

'சினிமா ஆரம்பிக்க இன்னும் ஐந்து நிமிஷங்கள்தானிருக்கிறது'.

"எந்த ஊருக்குப் போகணும்னு சொன்னீங்க?"

"கோட்டயம் ஸார்.. கோட்டயம் பஸ் கிடைக்கலைன்னா எர்ணாகுளம் பஸ் கிடைத்தாலும் போதும். ஸார், எர்ணாகுளம் போய் அங்கேயிருந்து பஸ் மாறிப் போயிடுவேன்."

நிறுத்தியிருந்த பேருந்துகளில் கண்களை ஓடவிட்டேன். இல்லை. கோட்டயம் பஸ்ஸும் இல்லை. எர்ணாகுளம் பஸ்ஸும் இல்லை.

"பஸ் ஒண்ணும் இல்லையே" என்றேன்.

"வரும் ஸார். இந்த நேரத்தில் நிறைய பஸ் இருக்கு. இன்னொரு விஷயம் ஸார்."

"என்ன?"

"சூப்பர் பாஸ்ட் - சூப்பர் டீலக்ஸ் பஸ்களில் நான் ஏற முடியாது."

"ஏன்?"

"எனக்குப் பாஸ் இருக்கு. ஆர்டினரி பஸ்ஸில் மட்டும்தான் போக முடியும்."

மணி ஏழாகிவிட்டது. சினிமாவில் டைட்டில் போட ஆரம்பித்திருப்பார்கள்.

மதத்தின் பெயரால் சண்டை போட்டுக் கொள்ளும் இந்தக் காலத்தில், மதமாச்சரியங்களுக்கு அப்பாற்பட்டு, இந்துக் கோயில் கட்டி வழிபட்டு வருகிறார் இருதயராஜ். கிறிஸ்தவரான இவர், புதூர் சூர்யா நகரில், 'ஸ்ரீ நாராயண முத்தப்ப பெரிய கருமாரியம்மன் கோயில்' கட்டியுள்ளார். அதில் 41 அடி உயர ஆஞ்சநேயர் சிலை ஒன்று தவக் கோலத்தில் காணப்படுகிறது.





தகவல், படம் : எஸ். குமார்



"ஒரு ஆணின் வெற்றிக்கு முன்னால ஒரு பெண் இருப்பாள்னு, படிக்கிற காலத்துலயே எனக்குத் தெரியும்."

"எப்படி?"

"பரிட்சை ஹால்ல எப்பவும் எனக்கு முன்னாடி ஒரு பொண்ணுதான் இருந்தாள்!"

- சீர்காழி ரேவதி

"இது பாடல் பெற்ற தலமா?"

"ஆமா. நிறைய சினிமா பாடல் காட்சிகள் இங்கே ஷூட் பண்ணியிருக்காங்க."

- எல்.மோகன்



மேலும் ஐந்து நிமிடம் ஓடியது. பஸ் ஒன்றும் வரவில்லை. தகவல் மையத்தில் சென்று விசாரிக்கலாம் என்று நினைத்த போது ஒரு எர்ணாகுளம் பஸ் வந்து நின்றது.

"எர்ணாகுளம் பஸ் ஒண்ணு வந்திருக்கு. அதில் போறீங்களா?"

"போயிடலாம் ஸார். சூப்பர் பாஸ்ட் இல்லையே...?"

"இல்லை."

பஸ்ஸில் ஏற நிறைய ஆட்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

"பஸ்ஸில் சீட் கிடைக்காது போலிருக்கே."

"ஊனமுற்றோர் இருக்கை இருக்கும் ஸார்"

"ஓ...!"

எல்லா மாநில அரசுகளும் மனித நேயத்துடன் பேருந்துகளில் ஊனமுற்றோர் இருக்கை ஒதுக்கியிருப்பதைப் பாராட்ட வேண்டும்.

ஊனமுற்றோர் இருக்கையில் போலீஸ்காரர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவரிடம் விவரம் சொன்னேன். அவர் சில விநாடிகள் யோசித்து பிறகு எழுந்தார்.

நான் ஜானை ஊனமுற்றோர் இருக்கையில் உட்கார வைத்து, கையில் பையைக் கொடுத்தேன்.

"ரொம்ப நன்றி ஸார்..." என்று மலையாளத்திலும் இங்கிலீஷிலும் மாறி மாறிச் சொல்லிக் கொண்டிருந்தார்.

"நான் வர்றேன்" என்று ஜானிடம் சொல்லிவிட்டு பஸ்ஸை விட்டு இறங்கும் போது "உங்க பேரு என்ன ஸார்?" என்று ஜான் கேட்டார்.

நான் பேர் சொல்லாமல் நடக்க ஆரம்பித்தேன். பெயர் சொன்னால் 'நீங்க மலையாளியா? தமிழனா? எந்த ஊரு?' என்கிற கேள்விகள் தொடரும். அதற்கெல்லாம் நேரமில்லை. இப்பவே சினிமா ஆரம்பித்திருக்கும்.

வேகமாக சாலையைக் கடந்து தியேட்டருக்கு வந்தபோது, பெரிய எழுத்தில் 'ஹவுஸ்புல்' போர்டு தொங்கிக் கொண்டிருந்தது.

அண்ணாந்து அந்தப் படத்தின் போஸ்டரைப் பார்த்தேன். கையில் ஒரு துணிப்பையுடன் வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டு வாயில் சிகரெட்டுடன் நின்று கொண்டிருந்தார் பார்த்திபன்.

'சினிமாவை நாளையும் பார்க்கலாம். ஆனால் அந்தப் பார்வையற்றவருக்கு உதவ மறுபடி வாய்ப்பு கிடைக்காது' என்று புன்னகையுடன் சொல்வது போல் இருந்தது.

திடீரென்று என் மனசுக்குள் ஓர் எண்ணம் தோன்றியது. இன்னும் சற்று நேரம் காத்து நின்று, கோட்டயம் பஸ்ஸிலேயே ஜானை ஏற்றிவிட்டிருக்கலாம். அர்த்த ராத்திரியில், எர்ணாகுளத்தில் இறங்கி, கோட்டயம் பஸ்ஸில் ஏற அந்த ஜான் எவ்வளவு கஷ்டப்படுவாரோ என்கிற கவலையுடன் என் அறையை நோக்கி நடக்க ஆரம்பித்தேன். ●

பார்ப்பதற்கு எளிமையா, இருப்பாங்க. ஆனால் உள்ளுக்குள்ளே ஆற்றல் கொட்டிக் கிடக்கும். நிறைய நல்லது செய்வாங்க; ஆனால் கொஞ்சம் கூட பந்தா இருக்காது. எதற்கு வளர்த்துக்கிட்டு... நம்ப நெல்லிக்கனி மாதிரினு சுருக்கமாச் சொல்லிட்டுப் போயி டலாம்.

மலை நெல்லி, அருநெல்லி, நெல்லி முள்ளி, மிருதுபலா, அம்லா என நிறைய பெயர்கள் இருப்பது போல இதன் பயன்களும் ஏராளம்.

நெல்லிக்காய், வெடியாக்கனி வகையைச் சேர்ந்தது. அற்புதமான காயகல்ப மூலிகை. தன்னுள் சிலபல ஆரஞ்சுப் பழங்களுக்குச் சமமான 'வைட்டமின் சி' சத்தை வைத்துக் கொண்டு, இளமைக்கு நிரந்தர விஸா வழங்கு கிறது.

பச்சை நெல்லிக்காய், மலிவாகக் கிடைக்கும் நாட்களில், முரப்பா, லேகியம், தைலம், வற்றல் போன்றவற்றைத் தயார் செய்து வைத்துக் கொள்ளலாம்.

நெல்லி முரப்பா.... ஆஹா! சொல்லும்போதே வாயில் நீர் சுரக்குதே!

அரை டஜன் நெல்லிக்காயை, வாங்கி, சுத்தமாகக் கழுவித் துடைக்கவும். ஊசியால், ஐந்து அல்லது ஆறு இடத்தில் துளையிட்டுக் கொள்ளவும். அத்தனைப் பழமும் மூழ்கி, ஊறும் அளவுக்கு அதன் மீது எலுமிச்சைச் சாறு பிழிந்து ஊற்றி, ஒரு நாள் முழுக்க ஊற விடவும். பிறகு நெல்லிக்காயை மட்டும் எடுத்து, சுத்தமான துணியால் துடைத்துக் கொள்ளவும். இரண்டு கோப்பை நீரில், ஒரு கோப்பை சர்க்கரையிட்டு, கம்பிப் பாகு காய்ச்சவும். பாகு நுரைத்து வந்ததும், சூடாக இருக்கும்போதே, நெல்லிக் காய்கள் மீது ஊற்றி, வெயிலில் வைக்கவும். காய்ந்து, சுருங்கியதும் பயன் படுத்தலாம்.

இந்த முரப்பா தங்கத்துக்குச் சமம் என்பதால், தினமும் ஒரு தேக்கரண்டி அளவு சாப்பிட, தேகத்தில் பொன்னிறப் பூச்சு ஏற்படும். ஒரு வியாதி அண்டாது.

இதே நெல்லிக்காயில், சர்க்கரைக்குப் பதிலாக உப்பு போட்டு உலர்த்தி, குலுக்கி வைத்துக் கொண்டால், தேவைப்படும்போது ஊறுகாய் போடலாம். சர்க்கரையுடன், உப்பும் சேர்த்து காயவைத்தால், தேவைப்படும் போது பிசைந்து எடுத்து, பூரி, சப்பாத்தி, தயிர் சாதத்துக்குத் தொட்டுக் கொள்ளலாம். சுவையாகவும் இருக்கும். உடம்புக்கும் ஆரோக்கியம்.

நெல்லிக்காயின் கொட்டையை நீக்கிவிட்டு, சிறு சிறு துண்டுகளாக்கிக் கொண்டு, உப்பு கலந்த எலுமிச்சைச் சாற்றில் ஊறவிடவும். வெயிலிலிட்டு நன்றாகக் காயவிட்டு எடுத்து வைத்துக் கொள்ளவும். இதுதான் நெல்லி வற்றல். கைவசம் நெல்லி வற்றல்



# உன்னையே... வெடியாக்கனியே!

இருந்தால், மருந்து மாத்திரைகளுக்கு ஏது வேலை?

இளம் கர்ப்பிணிகளுக்கு, காலையில் எழுந்ததும் வாந்தி, வாய் நீர்ச்சுரப்பு, தலை சுற்றல் இருக்கும். சுவையே இருக்காது. இத்தகைய பிரச்னை உள்ளவர்கள், தினமும் ஒன்றிரண்டு நெல்லி வற்றலைப் போட்டு மென்று வர, மசக்கைத் தொல்லை குண

மாகும். நெல்லி வற்றலைத் தேனில் ஊறவிட்டுச் சாப்பிட்டு வந்தால் மாதவிடாய்க் கோளாறுகள் இருக்காது. நல்ல பசி எடுக்கும். பித்தம், கபம், சம்பந்தமான நோய்கள் தீரும்.

நெல்லி இலைகளைக் கொத்தாக, கொழுந்தாகப் பறித்து, அரைத்துக் கொண்டு, இள மோரில் கலந்து குடிக்க, எப்பேர்ப்பட்ட பேதியும் 'பிரேக்' போட்டது போல சட்டென்று நிற்கும்.

நெல்லிக் கொட்டை, சம அளவு நாவல் கொட்டை எடுத்து தூள் செய்து சலித்துக் கொள்ளவும். இந்தப் பொடியை ஒரு தேக்கரண்டி அளவு எடுத்து தினமும் அதிகாலையில் வெறும் வயிற்றில், ஒரு தம்ளர் நீரில் கலந்து குடிக்க, இரத்தக் கொதிப்பு, நீரிழிவு நோய் கட்டுப்படும்.

ஏகாதசி விரதம் இருப்பவர்கள், மறுநாள் துவாதசி சமையலில், நெல்லித் துவையல் சேர்த்துக் கொள்வது சம்பிரதாயம். அதிலும் முதல் கவளமாகப் பிசைந்து சாப்பிடுவார்கள். ஒருநாள் முழுக்க பட்டினி கிடந்த குடலுக்கு முதல் உணவே சத்தானதாக, எளிதில் ஜீரணம் ஆவதாக இருக்க வேண்டும் என்பதற்குத்தான், இந்த ஏற்பாடு. வீட்டில் நெல்லிக்காயை அடிக்கடி பயன்படுத்துங்கள். துவையல், சட்னி, பச்சடி, ரசம், கோசுமல்லி என ஏதாவது ரூபத்தில் நெல்லிக்காயைப் பயன்படுத்துங்கள். இதனால் நோயற்ற வாழ்வு உத்தரவாதம்! இயலாதவர்கள், ஷ்யவனப்ராஷ் போன்ற லேகியம் வாங்கிச் சாப்பிடலாம்!

## ராஜம் முரளி

நெல்லிக்காயில் அருமையான கூந்தல் தைலம் தயார் செய்யலாம். நெல்லிக்காய் இடித்த சாறு, சம அளவு தேங்காய் எண்ணெய் இரண்டையும் சேர்த்து, இரும்பு வாணலியில் இட்டு, மிதமான தணலில் புகை வர காய்ச்சவும். ஆறவிட்டு, வடிகட்டி சேர்க்கவும். இளநரை, முடி உதிரல், கண் எரிச்சல் போன்ற பலவகைப் பிரச்னைக்கு முடிவு கட்டும் அற்புதமான கூந்தல் தைலம் தயார்!

நெல்லிக்காய்த் தூளுடன், சம அளவு மருதாணித் தூள் சேர்த்து ஒரு சொம்பு வெதுவெதுப்பான நீரில் கலக்கவும். தலைக்குக் குளிக்கும்போது இந்தத் தண்ணீரைக் கடைசி சொம்பு நீராக உபயோகித்து, தலை முடியை அலசுங்கள். சிறந்த ஸ்கேல்ப் கண்டிஷனராக, அரும்பணி நடந்திருக்கும் என்பதால் தலைமுடி பளிச்சென்று மின்னும்.

சிலருக்கு மூக்கு, முழி எல்லாமே ஆர்டர் கொடுத்து செய்தது போல அழகாக இருக்கும். ஆனால் சிரித்தால் போச்சு! மஞ்சள் நிறத்தில், காவி ஏறி, கறுப்பு விழுந்து, காரை பெயர்ந்து என பல் வரிசை அழகைக் குலைக்கும். கடுக்காய் தோல், தான்தோன்றிக் காய், நெல்லித் தூள் மூன்றையும் சம அளவு எடுத்து, வெயிலில் உலர்த்தி பொடி செய்து கொள்ளவும். இதைப் பற்பொடியாகப் பயன்படுத்தி வந்தால், டாலடிக்கும் புன்னகைக்குச் சொந்தக்காரர் ஆவீர்கள்.

'ஏற்கெனவே அழகான பல் வரிசைதான். ஆனால் ஈறுகளில் ரத்தம் வடிகிறது. பற்கள் வீக்காக இருக்கின்றன' என்ற புகார் இருந்தால், அரை டீஸ்பூன் உப்பு, அரை டீஸ்பூன் சர்க்கரை, ஒரு டீஸ்பூன் நெல்லிப் பொடி கலந்து ஈறுகளின் மீது மிதமாகத் தேய்த்து மசாஜ் செய்து விடுங்கள். அப்புறமென்ன... 'பல்'லாண்டு... 'பல்'லாண்டு... சிரித்து வைக்கலாம் தைரியமாக!

படங்கள் : ஸ்ரீஹரி




✉ நம்முடைய அரசியல்வாதிகள் அரசியல் பண்பாடு, அணுகுமுறை இல்லாமல் வோட்டு மட்டும் சேகரிக்கும் பிச்சைக்காரர்களாக மாறிப்போனதாலேயே, சிறிய பிரச்னையான காஷ்மீர் பிரச்னை இன்று மிகப் பெரிய பூதாகார வடிவம் எடுத்துவிட்டது. கொஞ்சம் இறங்கி வந்து பேச்சை நாமே தொடங்கலாம் என்ற உங்கள் கவன ஈர்ப்பு மிக மிக நியாயமான ஒன்றே!

சென்னை – 92. கிருஷ்ணராஜ்கோபால்.

✉ 'காந்தி கொடுத்த மாலை' என்ற கட்டுரை மகாத்மா மறையவில்லை, இன்னும் பூமாலையாக மணம் வீசிக் கொண்டுதான் இருக்கிறார் என்பதைக் காட்டியது.

பாவட்டக்குடி, ராசு

✉ 'மகரஜோதியா? மரண ஜோதியா? படித்தேன். கூட்டநெரிசல், பாதுகாப்பு இன்மை, போதிய தண்ணீர், உணவு வசதி இன்மை, திருட்டு பயம், வன விலங்குகளின் தொல்லை, போலீஸ்காரர்களின் கெடுபிடி இதையெல்லாம் மீறித்தான் சபரிமலைக்குச் செல்கிறார்கள். இதை சபரிமலை தேவஸ்தானமும், கேரள அரசும் உணர்ந்து செயல்பட வேண்டும்.

இலால்குடி, எம். இராஜேந்திரன்.

✉ 'சினிமா டைட்டில் சென்டிமெண்ட்' பற்றி ஒரு வார்த்தை. ஆங்கிலத் தலைப்பு, இயக்குனர் ஷங்கராலா ஏற்பட்டது? 'டவுன்பஸ்', 'ஹலோ பார்ட்னர்', ஸ்கூல் மாஸ்டர்' காலம் உங்களுக்குத் தெரியாதா?

வேலூர்–9, எஸ். வெங்கட்ராமன்.

✉ சினிமாக்காரர்கள்தான் விவஸ்தையே இல்லாமல் கண்டமேனிக்குப் படத்துக்குப் பெயர்களை வைக்கிறார்கள் என்றால், அதையெல்லாம் ஆராய்ச்சி செய்து கொண்டு நீங்களும் கல்கியின் பொன்னான நான்கு பக்கங்களை வீணடித்திருக்கிறீர்களே! அந்த இடத்தில் அறிஞர்களின் பொன்மொழிகளை வெளியிட்டிருந்தால் கூட பயனுள்ளதாக இருந்திருக்கும்! உங்க புத்தி போகுதே!

மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.

✉ உஸ்தாத் பிஸ்மில்லாகானிடம் சந்திரபாபு நாயுடு மன்னிப்புக் கேட்டது பாராட்டுக்குரிய செயல்.

மயிலாடுதுறை - 1, ஜி.ஜி. சரவணன்.

✉ 'சிவனே' என்று இருக்கின்ற சூப்பர் ஸ்டார் ரஜினியை, மூன்றாவது அணிக்குத் தலைமை தாங்கிட வேண்டும் என்று சொல்லியிருப்பது, 'பிறக்காத பிள்ளைக்குப் பெயர் சூட்டித் தகப்பனாய் இரு' என்பது போல்தான்.

பெங்களூர் - 72, ப. மூர்த்தி.

✉ 'லஞ்சம் தவிர், நெஞ்சம் நிமிர்' செய்தி படித்தேன். இது போன்ற பொது நலன் விழிப்புணர்வு இயக்கச் செய்திகளை வெளியிடும்போது அவ்வியக்கம் பற்றிய தகவல், முகவரி வெளியிட்டால் மிகவும் பயனுள்ளதாக இருக்குமே! கல்கி 'பாலம்' அமைக்குமா?

ராணிப்பேட்டை, பேப்பர்கார்த்திக்.

✉ அபத்தமான சினிமா தலைப்புகளை விமர்சித்த கட்டுரையாளர் 'ஹே ராம்', 'பார்த்தாலே பரவசம்', 'பாண்டவர் பூமி', 'மனதைத் திருடிவிட்டாய்' போன்ற பொருள் பொதிந்த தலைப்புகளைப் பாராட்டியிருக்கலாம்.

வந்தவாசி, சேரன் பா. ஜெயக்குமார்.

✉ கார்ட்டூன்கள் அனைத்தும் அருமை. அதிலும் அந்த 'கிரிக்கெட் கார்ட்டூன்' வெகுநேரம் சிரிக்க வைத்தது.

திருப்புங்கூர், வே. தாமோதரன்.

## வட்டமேஜை

# தனக்குத்தானே கின்னஸ்!

உலக சாதனைகள் அடங்கியுள்ள கின்னஸ் புத்தகம், தனக்குத்தானே ஒரு கின்னஸ் சாதனை படைத்துள்ளது. உலகிலேயே மிக அதிகமாக திருட்டுப் போவது கின்னஸ் புத்தகம்தான்!

— *எம்.வினோத், விருதாச்சலம்*

நமது வருமானங்கள் நமது காலணிகளைப் போன்றதே. சிறியதாக இருக்குமானால் நம்மைக் கடிக்கிறது. மிகப் பெரியதாக இருக்குமானால் தடுக்கி விழச் செய்கிறது.





- *கால்டன்*

— *நெ.இராமன், சென்னை*

நல்ல அரசியல்வாதியாக உங்கள் மகனை உருவாக்க வேண்டுமா? நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் 'ஜார்கண்ட்' மாநிலத்திலுள்ள 'நேதாகிரி வித்யாலாயா'வில் அவனைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட வேண்டியதுதான். மற்றவற்றை அவர்கள் பார்த்துக் கொள்வார்க்ள். 'ராஜ்ரஞ்சன்' என்ற அரசியல்வாதி நடத்தும் இப்பள்ளியில் முதலில் 26 மாணவர்கள் சேர்ந்துள்ளனர். மூன்று மாத படிப்புக்கு வெறும் ஐம்பது ரூபாய்தான் கட்டணம். பத்தாவது படித்த, பதினாறு வயதுக்கு மேற்பட்ட அனைவரும் சேர்ந்து பயனடையலாமாம். வித்தியாசமான பள்ளிக்கூடம்தான்!

— ஆர்.மார்க்கண்டன், சென்னை

ஒருவரது கை ரேகையைப் போல் இன்னொருவருக்கு இருப்பதில்லை என்ற உண்மையைக் கண்டு பிடித்தவர் கால்ரன் என்ற இங்கிலாந்து நாட்டுக்காரர் ஆவார். இவர் ஒரு சமயம் ஒரு பத்திரிகையைப் படித்துக் கொண்டிருந்தபோது, அதிலிருந்த கைரேகை பற்றிய ஒரு கட்டுரை அவரைச் சிந்திக்க வைத்தது. அவர் பத்து ஆண்டுகள் கைரேகை பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டார். அவரது ஆராய்ச்சியின்






பயனால் இன்று பல [illegible] கைரேகையின் மூலம் குற்றவாளிகள் கண்டுபிடிக்கப்படுகிறார்கள்.

— *மு. பெரியசாமி, விட்டுக்கட்டி*

பாரீஸ் நகரில் இது போல் மோட்டர் பைக்கில் வந்து, வீதிகளில் நாய்கள் பண்ணும் அசுத்தங்களை ஒரு நாளைக்கு பன்னிரண்டு டன் அளவில் நகராட்சி ஊழியர்கள் எடுத்துச் செல்கின்றனர். இதற்காக நாற்பத்து இரண்டு கோடி ரூபாய் வருடத்திற்குச் செலவாகிறது. இதனைத் தவிர்க்க, இனிமேல் வீதிகளில் நாய்கள் அசுத்தம் செய்தால், அதன் உரிமையாளருக்கு எட்டாயிரம் ரூபாய் அபராதம் விதிக்கப்படுமாம்.

— *பார்த்தசாரதி, பாரீஸ்*

வீரப்பனைப் பிடிக்கும் முயற்சியில் எவ்வளவு செலவாகியிருக்கிறது? கடந்த ஒரு வருஷத்தில் ஆன செலவு :

சாப்பாடு, காப்பி, டீ செலவுக்கு ரூ.4,32,00,000.

வீரப்பனைப் பற்றி துப்பு கொடுப்பவர்களுக்குக் கொடுத்த பணம் ரூ.3,60,000.

பயணப்படி, கிராக்கிப்படி 1200 சிறப்பு காவல்படை வீரர்களுக்கு தலைக்கு ரூ.200 வீதம் ரூ.8,64,00,000.

தேடுவதற்கு வேண்டிய கருவிகள், பொருட்கள், இதர செலவுகளுக்கு ரூ.3,60,000.

குரூப் இன்ஷூரன்ஸ் பாலிசி எடுப்பதற்கு ஒருவருக்கு 5 ரூபாய் வீதம் ரூ.21,60,000.

தகவல் தொடர்புக்காக ரூ.25,20,000.

_ அனிதா ராமச்சந்திரன்





## புத்தர் சொன்ன கதை

ஒரு வீட்டில் தீப் பிடித்துக் கொண்டது. வீட்டில் இருந்த எல்லோரும் வெளியே வந்து விட்டனர். ஆனால் வீட்டுக்குரியவர் மட்டும் வெளியே வரவில்லை. எல்லோரும் பதறியடித்துக் கொண்டு, "வெளியில் ஓடி வா, உயிருக்கு ஆபத்து'' என கத்தினார்கள்.



ஆனால் அந்த மனிதனோ சாவதானமாக, "இந்தத் தீ என்ன காரணத்தினால் ஏற்பட்டது? என் எதிரிகளால் இது நடந்ததா? இன்னும் எத்தனை நேரத்தில் இத்தீ இந்த வீட்டை முழுதுமாக எரிக்கும்? இதே இடத்தில் பிறகு ஒரு வீட்டைக் கட்ட முடியுமா? எத்தனை வீடுகளுக்குத் தீப் பிடித்துக் கொண்டது?" என்று கேட்டுக் கொண்டிருந்தான். இப்படிப்பட்டவனைப் பற்றி என்ன நினைப்பீர்கள்?

வாழ்க்கையெனும் நமது வீடும் எரிந்து கொண்டிருக்கிறது. தீயை அணைப்பதை நோக்கமாகக் கொள்ளாமல், தேவையில்லாத கேள்விகளைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். பல்வேறு தத்துவார்த்தமான கேள்விகளையும், விடையளிக்கவே முடியாத, விளக்கவே முடியாத பல கேள்விகளையும், வெறும் விவாதத்தை வளர்க்கும் கேள்விகளையும் கேட்பதைவிட வாழ்க்கையை ஒழுங்குபடுத்த முயலுங்கள். அது போதும்.

- ஆதித்யன், கோவை

**தென்கூடு**

இரண்டு கைகளிலும் கறிகாய்களும், கீரைக் கட்டுகளுமாகச் சுமந்துகொண்டு, கனமான பைகளுடன் வந்துகொண்டிருந்தார் மரிய ஜோதி, தெரு முனையில்.

மெலிதான உடல்வாகு. அதிக உயரமில்லை. தலையை முடிந்திருக்கவில்லை. வயது சுமார் முப்பது, முப்பத்து இரண்டு இருக்கலாம்.

"இவங்கதான்... இவங்கதான்" என்று அடையாளம் காட்டினார்கள், மரியஜோதியின் பக்கத்து வீட்டு - எதிர்வீட்டுப் பெண்கள்.

திருவொற்றியூரைத் தாண்டி நாலு கிலோமீட்டர் தூரம் இருந்த எர்ணாவூரில், பாரத் நகர் இரண்டாம் தெருவில், நாம் மரிய ஜோதியின் சிறிய கடை - மற்றும் வீட்டுக்கு முன்னால் நின்றுகொண்டிருந்தோம்.

பத்திரிகையிலிருந்து என்றதும் அவருக்குக் கொஞ்சம் வியப்பு. ஆனால் எந்தப் பரபரப்பும் அவரிடம் தென்படவில்லை.

யார் இந்த மரியஜோதி?

சைதாப்பேட்டையில் கருணை டிரஸ்ட் நடத்தி வரும் மனவளர்ச்சி குன்றியவர்கள் பள்ளிக்கு, கடந்த மூன்று வருடங்களாக வருடம்தோறும் ஐந்தாயிரம் ரூபாய் நன்கொடை தந்து கொண்டிருக்கிறார் என்றதும் நம்பத்தான் முடியவில்லை - முதலில்.



பன்னிரண்டு அடிக்கு எட்டடி கூட இல்லாத சிறிய கட்டடம். மேலே தடுப்புக் கீற்றுக்கூரை. முன்னால் வீட்டுச் சாமான்களும், மிட்டாய்களும், காய்கறிகளும் விற்கக் கடை. ஒரு சின்னத் தடுப்புக்குள் இரண்டே இரண்டு அலுமினியப் பாத்திரங்கள். ஒரு கெரஸின் ஸ்டவ். தடுப்புக்கு வெளியே, பின்புறம் சுவரில் உள்ள ஷெல்ஃபில் தோய்த்து மடித்து வைக்கப்பட்ட அவரது உடைகள்; சேலைகள்.

ஒரே ஒரு கட்டில். ஓரத்தில் விறகுக் குச்சிகள் - விற்பனைக்கு. ஒரு சிறிய டீ.வி.

# பொன் மனம்!



"எப்படி அந்தப் பள்ளிக்கூடத்துக்குப் பணம் கொடுக்கணும்னு தோணுச்சு?" என்று கேட்டோம். நிதி வசதி உள்ளவர்கள் கொடுத்தால் அது வேறு. ஆனால் மரிய ஜோதியின் நிலைமை அப்படி இல்லை.

"நல்லா நடத்தறாங்கன்னு, இங்கே பக்கத்துலே இருக்கிற சீனு வந்து சொன்னான். கொடுக்கணும்னு தோணுச்சு. முதல்ல, பக்கத்துல பொன்னியம்மன் கோயிலுக்குச் சாமி கும்பிடப் போகும்போது, அங்க உண்டியல்லே போட்டுட்டு இருந்தேன். மூணு வருஷமா இந்தப் பள்ளிக்கூடத்துக்குக் கொடுத்துட்டு வர்றேன்."

"அப்ப, சாமிக்குப் போடலையேன்னு வருத்தமா இல்லியா?"

"இங்கேயே ஒரு சின்ன உண்டியல்லே சாமிக்குன்னு



அப்பப்ப போட்டுக்கிட்டுத்தான் வரேன். சாமி குத்தம் வரக்கூடாது இல்லீங்களா?"

மரியஜோதிக்கு அண்ணன், தங்கை எல்லாம் இருக்கிறார்கள். "அப்பா இங்கேதான் எங்கூட இருப்பாரு. இப்போ தங்கச்சி வீட்டுக்குப் போயிருக்காரு!"

"அப்ப ஏன் உங்க உறவுக்காரங்களுக்கு உதவக் கூடாதா?" என்று நாம் கேட்ட உடனேயே, சுவரில் எறிந்த பந்து போல் பதில் வருகிறது:

"உறவுக்காரங்களுக்குக் கொடுத்தா நமக்குப் பதிலுக்குச் செஞ்சிடுவாங்க. திரும்பக் கிடைக்கற மாதிரி உதவி செய்ய எனக்குப் பிடிக்காதுங்க!"

சைதாப்பேட்டை போய் மேற்படி பள்ளிக்கூடத்தை மரியஜோதி பார்த்ததுகூட இல்லையாம். "நல்லா நடக்குதுன்னாங்க. எனக்கு அது போதும். நம்பிக்கைதான். அங்கே போய்ப் பாத்துட்டு வரதுக்கு எனக்கு நேரம் இல்லீங்க!" என்கிறார்.

ஒரு வேளைச் சாப்பாடுதான். அவரே சமைத்துக் கொள்கிறார். கடையில் யாரும் வராதபோது, அள்ளி அள்ளிப் போட்டுக் கொள்கிறார். (சில நாளைக்கு அது கூடச் சாப்பிடாதுங்க! டீ, காபி, குடிச்சிட்டே பொழுதை ஓட்



டிடும்!" என்கிறார்கள் எதிர் வீட்டுப் பெண்கள்.)

"ஏன் அந்தப் பணத்தை எடுத்து காஸ் கனெக்ஷன் வாங்கிக்கலாம். கலர் டீவி வாங்கிக்கலாம். வீட்டைக் கொஞ்சம்கூட பெரிசா கட்டிக்கலாம்..." என்று நாம் சொன்னபோது,

"அதெல்லாம் வேண்டாங்க. ஆடம்பரமாயிடும். இதுலேயே படம் தெரியுதே! இதுக்கு மேலே தேவையில்லீங்க!" என்றார் மரியஜோதி.



மரியஜோதி ஜெய் கோபால் கரோடியா பள்ளியில் பத்தாவது வகுப்பு வரை படித்திருக்கிறார். பத்திரிகை எதுவும் படிப்பதில்லையாம். டீ.வியில் செய்தி மட்டும்

# த.மா.கா நடத்தும் உழவர் சந்தை!

**கா**ய்கறி பயிர் செய்பவர்களுக்கும், அவற்றை நேரடியாகக் கொள்முதல் செய்ய விரும்புபவர்களுக்கும் ஒரு பாலமாக, தமிழ் மாநில காங்கிரசின் அறிவியல் - தொழில்நுட்பப் பிரிவின் தலைவர் வி. நாராயணன், ஓர் இணைய தளத்தை உருவாக்கியிருக்கிறார்.

இதில் இளநீர் இரண்டரை



ரூபாய்க்கு மொத்த விலையில் கிடைக்கிறது! வாழைத்தார் என்ன விலை, எவ்வளவு கிடைக்கும் என்று தூத்துக்குடி விவசாயி ஒருவர் இதில் தகவல் சொல்லியிருக்கிறார். இதுபோல் பிற உற்பத்தியாளர்களும் தங்கள் விளைச்சலையும் விலையையும் இந்தத் தளத்தில் விலாசத்தோடு அறிவிக்கிறார்கள். இடைத்தரகர்கள் இல்லாவிட்டால் விலைகள் எத்தனைக் குறைச்சலாக இருக்க முடியும் என்பதை இந்த இணைய தளம் எடுத்துச் சொல்கிறது. கலைஞரின் உழவர் சந்தை மாதிரி இதைக் கலைத்து விட முடியாது!

இந்த இணைய தளத்தின் ஐடி, இதோ:

tmc.moopanar.org

- எஸ்.வி.என்

பார்ப்பாராம். சின்னஞ்சிறு வீடு கூட அவரே சம்பாதித்துக் கட்டியதுதானாம். நேரம் கிடைத்தால் கோயிலுக்குப் போவாராம்.

தையல் மெஷினில் தமக்கு வேண்டியதைத் தைத்துக் கொள்கிறார். கடைக்கு வேண்டியவற்றைத் தாமே போய் வாங்கி வந்து விடுகிறார். சில வேளைகளில் அனுப்பச் சொல்லிவிட்டு ரிக்ஷா வாடகை கொடுத்து விடுவாராம்.

காலை 6 மணிக்குக் கடை திறந்தால், இரவு பத்தரை மணி வரை வியாபாரம் பார்க்கிறார். ஏழு நாளும் கடை உண்டு.

திருமணம் ஆகி ஒரே மாதத்தில் கணவருடன் ஏற்பட்ட மனவேறுபாடு காரணமாக, தனியே இருப்பதென்று தீர்மானித்து விட்டவர் மரியஜோதி. "வருத்தம் இல்லையா?" என்று கேட்டபோது, "வருத்தப்பட்டுக்கிட்டு உட்கார்ந்திருந்தா தொழில்லே கவனம் குறைஞ்சு போயிடுமே!" என்கிறார், வெகு இயல்பாக. ஏதாவது வேண்டுமென்றால் அண்ணன்-அண்ணி எல்லாம் உதவுவார்களாம்.

**ந**ம்முடன் வந்திருந்த கருணை டிரஸ்ட்டைச் சேர்ந்த ராதாகிருஷ்ணன் என்பவரிடம் ஐந்தாயிரம் ரூபாயான தமது சேமிப்பை டக்கென்று எடுத்துக் கொடுத்து விட்டு, "அடுத்த வருசம் இன்னும் கூடக் கொடுக்கிறேன் ஐயா! நல்ல நிறுவனத்துக்குப் போய்ச் சேரணும்ங்கிறது ஒண்ணுதான் என்னோட நினைப்பு!"

"உங்க எதிர்காலத்துக்கு ஏதேனும் சேமிச்சு வச்சுக்கக் கூடாதா?"

"அப்பப் பார்த்துக்கலாம்!" - பளிச்சென்று வருகிறது பதில்.

மரியஜோதிக்குப் பழையதை நினைக்கவும் நேரமில்லை. வருங்காலத்தைப் பற்றிய கவலையும் இல்லை. இன்றைய நிமிடம் போதும் அவருக்கு.

**ப**ல்லாவரத்தில், சைதை துரைசாமி கொடுத்த நிலத்தில் கருணை டிரஸ்ட் மன வளர்ச்சி குன்றிய, ஆடிஸம் பாதித்த, குழந்தைகளுக்காகக் கட்டி வரும் தங்குமிடம் மற்றும் பள்ளிக்கூட வேலைகள் நடந்து வருகின்றன. ஃப்ரன்ட்லைன் என். ராமும், அவர் மனைவியும் ஈடுபாட்டுடன் தங்கள் உதவிகளையும் அளித்து வருகிறார்கள் என்றார் ராதாகிருஷ்ணன்.

சந்திப்பு, கட்டுரை: **சாருகேசி**
புகைப்படம்: **வெங்கடேஷ்**

# நேரு நாத்திகரா?

பிற பத்திரிகைகளில் வெளியான சில கடிதங்கள் - சற்றே சுருக்கமாக.

“பதினேழு ஆண்டுகள் நாட்டின் பிரதமர் பொறுப்பில் இருந்த நேரு, தாம் ‘நாத்திகர்’ என்று அறிவித்தபோது பதற்றம் அடையவில்லை. அதையே நான் சொல்லும்போது ஒருவித வெறுப்போடு பேசுகின்றனர்'' என்று வருத்தப்பட்டுள்ளார் கருணாநிதி.

தம்மை நாத்திகன் என்று சொல்லிக்கொண்ட நேரு, ஒரு போதும் ஆத்திகர்களின் மனம் நோகும் செயலையோ பேச்சையோ வெளியிட்டதில்லை.

இஸ்லாமியர்களுக்கு மத்தியில் பேசும்போது தானும் ஒரு முஸ்லிம் போலவும், கிறித்துவர்களுக்கு மத்தியில் பேசும்போது தானும் ஒரு கிறிஸ்தவர் போலவும், இந்துக்கள் மத்தியில் பேசும்போது மட்டும் தாம் ஒரு பகுத்தறிவுவாதி என்பதாகவும் இடத்துக்கேற்றாற்போல் பேசுகிறார் கருணாநிதி.

மாற்றான்தோட்டம்



ஆனால் நேரு என்றும் அப்படி காட்டிக் கொண்டதில்லை. அதனால் அவர் தம்மை நாத்திகன் என்றபோது யாரும் பதற்றப் படவில்லை. தம்மை நாத்திகன் என்று சொல்லிக் கொண்ட அந்த நேருதான் இந்த நாத்திகர்களை ஒருமுறை 'இடியட்ஸ்' என்றார்.

அப்படிச் சொன்னதற்காக இவர்கள் பதற்றமடையாமல் இருந்தனரா? மாறாக, அவருக்கெதிராக வெறுப்பைக்காட்ட கறுப்புக்கொடி தூக்கிப் போராட்டம் நடத்தினர்.

(தினமலர் - ஆர்.ராம்மோகன்,
என்.மேட்டுப்பட்டி)

மூதியவர்கள் பலரும் திகைப்பில் மூழ்கியிருக்கிறார்கள். மிகவும் சிரத்தையோடு, வேலையிலிருந்து ஓய்வு பெற்றபிறகு தேவைப்படும் என்பதற்காக தாங்கள் மேற்கொண்ட சேமிப்புப் பழக்கம் சரியானதுதானா என்ற கேள்வி எழுந்திருக்கிறது அவர்களுக்கு. இப்போதெல்லாம் சேமிப்பு என்பது காலாவதியாகிப்போய், கடன்வாங்கிய பணத்தில் வாழ்வதுதானே நாகரிகம் என்றாகிவிட்டது!

(அவுட்லுக் - டி.பி.என்.மூர்த்தி,
பெங்களூர்)

1965 இந்தி எதிர்ப்புப் போராட்டம் தமிழகம் தழுவிய தமிழ்ப் பாதுகாப்பு இயக்கமாக அமைந்தது. இந்தி என்றால் என்ன என்று அறியாத படிப்பறிவற்றவர்களும் தமிழுக்கு ஆபத்து என்ற கோஷத்தால் ஈர்க்கப்பட்டு ஒரு ஆட்சி மாற்றத்தையே கொண்டு வரக் காரணமாக, எழுச்சிமிகு போராட்டத்தில் பங்கேற்றார்கள்.

கண்ணகி சிலை அப்படியொரு எழுச்சியை உண்டாக்கவில்லை. கட்சி அரசியல் என்ற கண்ணோட்டத்திலேயே இப்பிரச்னை எழுப்பப்படுகிறது என்று மக்கள் கருதுவதால் 'தமிழ், தமிழ்ப் பண்பாடு, தமிழரின் தன்மானம் ஆகியவற்றுக்கு வந்த இழுக்கு' என்ற வாதம் எடுபடவில்லை.

கடந்த முப்பது ஆண்டுகளில் தமிழ் படிக்காது இந்தியை முதல் மொழியாகப் படிப்பவரின் எண்ணிக்கை பெருமளவில் வளர்ந்தது. பெரியாரைத் துறந்ததால், பகுத்தறிவு இயக்கம் வலுவிழந்து, மூட நம்பிக்கைகளில் திராவிடக் கட்சியினரே திளைக்கின்ற சூழ்நிலை ஏற்பட்டுள்ளது.

தமிழ் புறக்கணிக்கப்பட்டால், தமிழ் உணர்வை மையப்படுத்தி மக்களை ஒன்று திரட்ட இயலவில்லை. காலம் தரும் படிப்பினை இது.

(தினமணி - எஸ்.எஸ்.இராசகோபாலன்,
சென்னை - 93)

உங்கள் நாளிதழில் வெளியான மூன்று சுவையான, வெவ்வேறு (ஆனால் ஒன்றுக்கொன்று தொடர்புடைய) நிகழ்ச்சிகளைப் படிக்க நேர்ந்தது. சத்யசாய்பாபா, சென்னை நகரின் தண்ணீர்ப் பஞ்சத்தைத் தீர்ப்பதாக அறிவித்துள்ளது அவற்றில் ஒன்று. கோதாவரி மற்றும் கிருஷ்ணா நதிகளில் பாயும் அதிகப்படி நீரை சென்னைக்குத் திருப்பிவிடுவதன் மூலம் இதைச் செய்ய முடியும் என்றிருக்கிறார். இரண்டாவது செய்தி வரும் மார்ச் மாதத்தில் சென்னை மாநகரத்தில் தண்ணீர்ப் பஞ்சம் நீங்கிவிடும் என்பது. இதைவிட முக்கியமாக, தண்ணீர் லாரிகள் நகரில் உலாவருவது கொஞ்சம் கொஞ்சமாக நிறுத்தப்படும் என்பதுதான். கல்லூரி மாணவி ஒருத்தி வேகமாக வந்த தண்ணீர் லாரி ஒன்றினால் மோதப்பட்டு இறந்த சோகச் செய்தி வேறு. தண்ணீர் லாரிகள் சாலைகளில் இல்லாமல் போவது மிக அவசியம்.

(தி நியூ இண்டியன் எக்ஸ்பிரஸ்
எஸ்.வேணுகோபாலன்,
சென்னை)

தொகுப்பு : **ஜி.எஸ்.எஸ்.**



**"எங்க வீட்டுக்காரர் சேமிப்புக்காக உண்டியல்லே பணம் போடும்போது கையாலே போட மாட்டார், வாயாலேதான் போடுவார்!"**

**"ஏன்?"**

**"பணத்தை, குருவி சேர்க்கற மாதிரி சேர்க்கிறாராம்!"**

**— கபிஸ்தலம் எஸ். இரா**




# புக் பேங்க்

**நூறு கோடி நூறாண்டு வரலாறு — என். இளங்கோ**

முக்கியமான அரசியல் நிகழ்வுகள், தேசத் தலைவர்களைப் பற்றிய குறிப்புக்கள் சுவைபடத் தொகுக்கப்பட்டுள்ளன.

பாபுஜியின் கடைசி நிமிடங்களைப் பற்றிய படப்பிடிப்பு அருமையானது.

நூறாண்டுக்கும் முன்னால் வாழ்ந்த தீரன் சின்ன மலை, பூலித்தேவன், வேலு நாச்சியார், போன்றவர்களைப் பற்றிய செய்திகளும் தரப்பட்டிருக்கின்றன.

வாழ்த்துரைகள், ஆசிரியருடன் தனிப்பட்ட ஆசைகள் போன்ற பகுதிகள் நூலுக்கு மெருகூட்டவில்லை. ஒரு 'சுவனீர்' போலத் தோற்றத்தை ஊட்டுகின்றன.

என்சாஸ் பப்ளிக்கேஷன்ஸ், 36ஏ, வள்ளலார் குடியிருப்பு, லாயிட்ஸ் ரோடு, சென்னை _ 5. விலை ரூ. 250/-

சு.பா.

**கவிதையின் அரசியல் — இந்திரன்**

படைப்பிலக்கியத்தில் ஈடுபட்டிருந்தாலும் ஓவியம், சிற்பம் குறித்த கலை விமர்சகராக அறியப்பட்ட இந்திரனின் பதினைந்து ஆண்டு கால, கவிதை மீதான கவனிப்பு பிரமிக்க வைக்கிறது. கவிதையின் அரசியல் என்று தலைப்பிருந்தாலும் அரசியல் கவிதைகளைப் பற்றி ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை புத்தகம். கவிஞர்களுக்குள் நடக்கும் அரசியல் தான் முழுவதும். கவிதை பற்றி ஆழ்ந்து சிந்திக்கிறவர்கள் அவசியம் படிக்க வேண்டிய நூல்.

அலைகள் வெளியீடு. 25, தெற்குச் சிவன் கோயில் தெரு. கோடம்பாக்கம். சென்னை 24, விலை ரூ. 40/-

**நதியின் குதர்க்கம் — கோலாகல ஸ்ரீநிவாஸ்.**

ஒரு
பூவின் வீழ்தலில்
கலைகிறது
'நான்'.

பத்து வருடங்களுக்கு முன்பே நின்றுபோய்விட்ட சிற்றிதழ்களில் தாம் எழுதிய கவிதைகளைத் தொகுத்திருக்கிறார் ஆசிரியர். நதியைக் குதர்க்கமாக பார்க்க வேண்டியச் சூழல் இப்போது ஏற்பட்டிருக்கிறது என்பதை இத் தொகுப்பின் தலைப்பு சொல்கிறது.

குமரன் பதிப்பகம், நெ.3, முத்துகிருஷ்ணன் தெரு, தி. நகர், சென்னை - 17 விலை ரூ. 30/-

**எப்படிக் கதை எழுதுவது? — ரா.கி. ரங்கராஜன்**

சில வருடங்களுக்கு முன்பு வார இதழ் ஒன்றில் தொடராக வந்த இந்தக் கட்டுரைகள் இப்போது புத்தகமாக வந்திருக்கிறது. ஒரு கதை எப்படி ஆரம்பிக்கப்பட வேண்டும், சுவாரஸ்யத்தை எப்படிக் கூட்டுவது, அதன் நடு, கடைசி பகுதிகள் எப்படி அமைய வேண்டும் என்பது போன்ற விவரங்களை இப்புத்தகம் சொல்கிறது.

மதி நிலையம், 4, (39) தணிகாசலம் சாலை, பிருந்தாவன் அபார்ட்மென்ட்ஸ், தி. நகர்,சென்னை _ 17 விலை ரூ. 75/-

— கார்க்கி

நியூயார்க் நகரின் பிரபல திரையரங்கான கலோனியில் பிற்பகல் காட்சி தொடங்க கால தாமதம் ஆனது. காரணம் 'அரங்கு நிறைந்தது' என்ற அறிவிப்புப் பலகையைக் கண்டு கொதித்துப் போனார்கள், டிக்கெட் கிடைக்காத ரசிகர்கள். விளைவு! திரையரங்கின் ஜன்னல்கள் உடைக்கப்பட்டன. கையில் கிடைத்ததை வீசி களேபரத்தில் இறங்கினார்கள். போலீஸ் வந்த பிறகே காட்சி திரையிடப் பட்டது. இது ஏதோ ஒரு ஹாலிவுட் ஹாட் செக்ஸ் படத்தின் முதல் நாள் நடந்த கலாட்டா அல்ல. அதுவும் நேற்றோ, அதற்கு முதல் நாளோ நடந்த நிகழ்ச்சியும் அல்ல. 1928–ஆம் ஆண்டு நவம்பர் இருபத்து ஐந்தாம் தேதி நடந்த சம்பவம். இந்தச் சம்பவம் நடந்த ஏழு தினங்களுக்கு முன்பு (நவம்பர் பதினெட்டு) இந்த திரையரங்கில் திரையிடப் பட்ட உலகின் முதல் சவுண்ட் டிராக் கார்டூன் படமான 'ஸ்டீம் போட் வில்லி'தான் அன்றைய நியூயார்க் நகரின் டாக் ஆஃப் த டவுன். ஏற்கெனவே அமெரிக்கர்கள் மத்தியில் ஓரளவு பிரபலமாகியிருந்த வால்ட் டிஸ்னியின் – மிக்கி மவுஸ் (குட்டி எலி) கதாபாத்திரம்) மனிதர்களைப் போல பேண்ட் சட்டை அணிந்து வந்து, மனிதர்களைப் போல அல்லது அவர்களைவிட ஒருபடி அதிக புத்திசாலித்தனத்துடன் பேசி அந்த படத்தில் நடித்திருந்தால் தியேட்டரில் கூட்டம் நெருக்கியடிக்காமல் என்ன செய்யும்? அன்றைக்குத் தொடங்கியதுதான், எந்த வயதினரும், எந்த தேசத்தைச் சேர்ந்தவர்களும், மொழி குறித்த கவலையின்றி பார்த்து, ரசித்து, சிரித்துவிட்டு வருகிற கார்ட்டூன் மற்றும் அனிமேஷன் படங்களின் ஏகபோக சாம்ராஜ்யம்.

அன்றைய ஆப்ரகாம் லிங்கனில் தொடங்கி இன்றைய மைக்கேல் ஜாக்ஸன் வரையில், ஒரு சிலருக்கே தங்கள் இதயங்களில் இடம் கொடுத்திருக்கிறார்கள் அமெரிக்கர்கள். ஆனால் வால்ட் டிஸ்னி என்று அழைக்கப் படும், அனிமேஷன் படங்களின் தந்தை 'வால்டர் எலியஸ் டிஸ்னியை 'எங்களவர்' என்று பெருமை பொங்கச் சொல்லிக் கர்வப் படுகிறார்கள்.

டிசம்பர் ஐந்தாம் தேதி 1901–ல் சிகாகோவில் 'பிறந்த டிஸ்னி வரையத் தொடங்கியது ஏழுவயதில். வரைந்த கேலிச் சித்திரங்களை அக்கம் பக்கத்துச் சிறுவர் சிறுமியரிடம் விற்கவும் செய்த கில்லாடி. சிகாகோவில் பள்ளி கல்வியை முடித்து, ஓவியக் கல்லூரியிலும் சேர்ந்து பயின்றார். 1918–ல் முதல் உலகப் போரின்போது கட்டாய ராணுவச் சேவை ஆற்றும் மன உறுதியோடு சென்றவரை "நீ பொடிப்பையன். இன்று போய் நாளை வா" என்று அனுப்பிவிட்டார்கள்! அப்படியும் டிஸ்னி விடவில்லை. எப்படியும் போர்க் களத்திற்குப் போயே தீருவது என்ற ஆவலில் செஞ்சிலுவைச் சங்கத்தில் சேர்ந்தார். அங்கே அவருக்குக் கிடைத்தது ஆம்புலன்ஸ் ஓட்டும் வேலை! அங்கேயும் கூட தமது ஆம்புலன்ஸ் முழுக்க, தாம் வரைந்த கார்ட்டூன்களை ஒட்டி வைத்திருந்தார். போர் முடிந்த பிறகு கான்சாஸ் நகருக்கு வந்த டிஸ்னி ஒரு விளம்பர நிறுவனத்தில் கார்ட்டூனிஸ்ட்டாகச்

# டிஸ்னி 100







சேர்ந்தார். அங்கேதான் தமது அசையும் (Animated) கார்ட்டூன்களை முதன் முதலாக உருவாக்கினார். அதன் பிறகு 'நாம் இன்னும் நிறைய சாதிக்க வந்திருக்கிறோம். ஒரு விளம்பரக் கம்பெனியின் ஓவிய அறையில் முடங்கிக் கிடப்பதாவது' என்று ஹாலிவுட்டுக்கு ஓட்டம் பிடித்தார். அங்கே அவரது அண்ணன் ராய், ஹாலிவுட் படங்களில் பணியாற்றி வந்தார். அவர் கொடுத்த இருநூற்று ஐம்பது டாலர்கள், கடன் வாங்கிய ஐந்நூறு டாலர்கள் இரண்டையும் வைத்துக் கொண்டு, தங்கள் மாமாவின் கார்ப்பட்டறையின் ஒரு ஓரத்திலேயே கார்ட்டூன் ஸ்டூடியோவைத் தொடங்கினார்கள். விரைவிலேயே நியூ யார்க்கிலிருந்து ஆர்டர் கிடைத்தது. 'ஆலிஸ் இன் கார்ட்டூன்லேண்ட்' என்ற முழுநீள கார்ட்டூன் அசையும் சித்திரங்களை உருவாக்கிக் கொடுத்ததில் டிஸ்னி கவனிக்கப்பட, ஆர்டர்கள் குவிந்தன. அதன் பிறகு ஹாலிவுட் வளாகத்திற்கு ஸ்டூடியோவை இடம் மாற்றினார்கள்.

டிஸ்னி ஹாலிவுட்டுக்கு வந்த பிறகு எலிகளும், வாத்துகளும், நாய்களும், கோட், டை, ஷூ அணியத் தொடங்கின! மனிதர்களால் செய்ய முடியாத வால்தனங்களைச் செய்து உலகப் புகழ் பெற்றன. டிஸ்னி உருவாக்கிய மிக்கி மவுஸ், மின்னி மவுஸ், டொனால்ட் டக், கூஃபி, புளூடோ ஆகிய கார்ட்டூன் கதாபாத்திரங்கள் 'புகழ் பெற்ற ஐவர்' என்று அழைக்கப்படுகின்றன. 1937 டிசம்பரில் டிஸ்னி வெளியிட்ட ஸ்நோ ஒயிட் அன்ட் செவன் ட்வார்ஸ் என்ற படம்தான் உலகின் முதல் முழு நீள கார்ட்டூன் படம்.

டிஸ்னி மொத்தம் நாற்பத்து எட்டு ஆஸ்கார் விருதுகளைப் பெற்றுச் சாதனை படைத்தது மட்டுமல்ல, வாழ் நாளில் தொள்ளாயிரத்து ஐம்பது விருதுகளையும், கௌரவ டாக்டர் பட்டங்களையும் பெற்ற ஒரே கலைத்துறைச் சாதனையாளர்.

1955ல் கலிபோர்னியாவில் டிஸ்னி லேண்ட் பொழுதுபோக்கு மையம் துவங்கப்பட்டது. டிஸ்னியின் கதாபாத்திரங்களை மையமாகக் கொண்டு தயாரிக்கப்பட்ட பொருட்களுக்கும் பொம்மைகளுக்கும் இன்று உலகம் முழுவதும் கவர்ச்சிகரமான சந்தை இருக்கிறது. உலக மக்களை ஒரு சமுதாயமாக இணைக்க முடியும் என்பதற்கு டிஸ்னியின் படைப்புகள் வாழும் உதாரணம்.

— ஜெ.










• அர்ஜுன்சிங்


• ஜெனரல்.பி.


• தேவகெளடா

விமானப் படைத் தளபதியான அர்ஜுன்சிங்குக்கு, மிக அரிய ஏர் சீஃப் மார்ஷல் கௌரவம் அளிக்கப்பட்டுள்ளது. இரண்டாம் உலகப் போரின்போது, பிரிட்டிஷ் விமானப்படையில் இருந்த அர்ஜுன்சிங், பர்மா பகுதியில் ஆற்றிய தீரச் செயலுக்காக பிரிட்டிஷ் ஆட்சியாளர்களால் 'பிளையிங் கிராஸ்' என்ற விருது வழங்கி கௌரவிக்கப்பட்டவர். இப்போது இவருக்கு வயது 82. 1965ல் பாகிஸ்தான், இந்தியா மீது போர் தொடுத்தபோது, மிகக் குறுகிய நேரத்தில், சாமர்த்தியமாக வியூகம் வகுத்து போர் புரிந்ததற்காக பத்மவிபூஷன் தரப்பட்டது. ஏர் சீப் மார்ஷல் கௌரவம் அளிக்கப்பட்டதன் காரணமாக, ஓய்வு பெற்றபோதிலும் ஐந்து ஸ்டார், நான்கு பட்டை கொண்ட விமானப்படை யூனிபாரம் அணிந்து கம்பீரமாக வலம் வரலாம். "முப்பத்து இரண்டு வருடங்களுக்குப் பின், மறுபடி அணியப் போகிறேன் என்ற நினைப்பே எனக்குப் பெரும் சந்தோஷத்தைக் கொடுக்கிறது" என்கிறார் அர்ஜுன்சிங்.



● எல்லையில் டென்ஷன் நிலவும் சூழ்நிலையில், இந்தியா, அக்னி ஏவுகணையைச் செலுத்தியது இந்திய மக்களின் புருவங்களை உயர்த்தியது என்றாலும், உலகின் பெரிய நாடுகளுக்கு இந்த விஷயம் முன்கூட்டியே தெரியும். எப்படி? உலக அளவில், இந்த நடவடிக்கைக்கு, நெகடிவ் ஆக ரியாக்ஷன் வந்து விடக்கூடாது என்று ராஜதந்திரத்துடன் மத்திய அரசு ஒரு காரியம் செய்தது. ஆம்! ஐ.நா. சபையின் பாதுகாப்புக் கவுன்சில் உறுப்பினர்களான அமெரிக்கா, பிரிட்டன், சீனா, பிரான்ஸ், ருஷ்யா ஆகிய ஐந்து நாடுகளுக்கும் முன்கூட்டியே தகவல் தெரிவித்து விட்டது. அது மட்டுமில்லை, பாகிஸ்தான் அதிபர் முஷ்ராபுக்கும் முன்கூட்டியே சொல்லிவிட்டது.

● ஓய்வு பெற்ற

● பாகிஸ்தானிலும், அதன் கட்டுப்பாட்டில் உள்ள காஷ்மீர் பகுதியிலும்தான் பாகிஸ்தானின் உளவு அமைப்பான ஐ.எஸ்.ஐ தீவிரவாதிகளுக்குப் பயிற்சி முகாம்களை நடத்தி வருகிறது என்று நினைத்துக் கொண்டிருந்த மத்திய உள்துறை

# "ஆண்டிப்பட்டியா... எங்கே இருக்கு...?"

அமைச்சகத்துக்கு அண்மையில் கொல்கத்தாவில் அமெரிக்க மையத்தின் மீதான தாக்குதல் கண்ணைத் திறந்திருக்கிறது. மே. வங்காளத்தை ஒட்டிய பங்களாதேஷின் எல்லைப்புறப் பகுதிகளில் ஐ.எஸ்.ஐ ஆசி பெற்ற பதினெட்டு தீவிரவாதி முகாம்கள் இயங்கி வருவதாக, 'ரா'வின் ரகசிய அறிக்கை மோப்பம் பிடித்துள்ளது. அதன் அடிப்படையில், மத்திய அரசு, பங்களாதேஷ் அரசுடன் சில ரகசிய அதிரடி



யார் யாருக்கு வழங்குவது என்று மத்திய அரசின் உள்துறை அமைச்சகம் அமைக்கும் கமிட்டி முடிவு செய்தாலும் பாரத ரத்னாவைப் பொறுத்தவரை, பிரதமர்தான் முடிவு செய்ய வேண்டும். அதிகபட்சம் மூவரைத் தேர்ந்தெடுத்து, ஜனாதிபதியிடம் விருதுக்குச் சிபாரிசு செய்ய வழி உண்டு. இந்த வருடம் என்.டி. ராமராவ், தேவி லால், தாதா சாகிப் பால்கே, வி. சாந்தாராம், ஜம்மு - காஷ்மீர் முதல்வர் பரூக் அப்துல்லா, உலகப் புகழ் பெற்ற இசைக் கலைஞர் ஜுபின் மேத்தா, வெள்ளைப் புரட்சிக்கு வித்திட்ட வி. குரியன் என்று சுமார் அரை டஜன் பெயர்கள் பரிசீலிக்கப்பட்டாலும், வாஜ்பாய், யார் பெயரையும் தேர்ந்தெடுக்கவில்லையாம்.

● பா.ஜ.கட்சிக்கு ஆதரவாக, வரும் உபி சட்டமன்றத் தேர்தலில், பா.ஜ.க தயவில் தேசிய திரைப்பட வளர்ச்சிக் கழகத்தின் தலைவராக இருக்கும் நடிகை ஹேமமாலினி பிரசாரம் செய்யப் போகிறார். அவரிடம் "பா.ஜ.கவின் கூட்டணி கட்சியான தி.மு.கவுக்கு ஆதரவாக, ஆண்டிப்பட்டியில் பிரசாரம் செய்வீர்களா?" என்று கேட்டபோது, அவரது பதில் "தமிழ்நாட்டு வரைபடத்தில் ஆண்டிப்பட்டி எங்கே இருக்கிறது என்றே எனக்குத் தெரியாது."

நடவடிக்கைகள் குறித்துப் பேசியுள்ளது.

● இந்த வருடம் வழக்கம் போல, பத்மஸ்ரீ, பத்மபூஷன், பத்ம விபூஷன் விருதுகள் ஏராளமானவர்களுக்கு வழங்கப்பட்டன என்றாலும் பாரத ரத்னா விருதுகள் அறிவிக்கப்படவில்லை. காரணம், மற்ற விருதுகளை

● ஆண்டிப்பட்டியில் இடைத்தேர்தல் நடக்கிறபோது, கர்நாடகாவில், கனகபுரா எம்.பி தொகுதியிலும் இடைத்தேர்தல் நடக்கிறது. அதில் போட்டியிடும் வேட்பாளர்களில் ஒருவர் முன்னாள் முதல்வர் தேவகௌடா. காங். கட்சியும், பா.ஜ.க.வும் தனித்தனியே வேட்பாளர்களை நிறுத்தியுள்ளன. தேசிய ஜனநாயக முன்னணியில் அங்கம் வகிக்கும் ஐக்கிய ஜனதாதளம், மறைமுகமாக தேவகௌடாவுக்கு ஆதரவு தருகிறது. காரணம் தே.ஜ. கூட்டணி தலைமைக்கும் ராமகிருஷ்ண ஹெக்டேவுக்கும் இடையிலான பனிப்போர்தான்.

— மானஸா

எங்கு ஜோதிடம் பார்த்தாலும் P.R. ஜுவல்லரிக்கு வந்து ரூ. 400/-க்கு ராசிக்கல் மோதிரம் வாங்கி பயன்பெறுங்கள். கல் ஒரிஜினல் என முழு உத்திரவாதம் தருகிறோம்.



# P.R. JEWELLERY

GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH : 434 4442 & 432 7764 - TUESDAY HOLIDAY
**(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)**
**PROPRIETOR : P. RAVINDHIRAN**



| ராசி | | ராசிக்கல் |
|---|---|---|
| மேஷம், விருச்சிகம் | • | பவழம் |
| ரிஷபம், துலாம் | • | வைரம் |
| மிதுனம், கன்னி | • | மரகதபச்சை |
| கடகம் | • | முத்து |
| சிம்மம் | • | மாணிக்கம் |
| தனுசு, மீனம் | • | புஷ்பராகம் |
| மகரம், கும்பம் | • | நீலம் |

**திருஷ்டியைப் போக்கி, சகல செல்வங்களையும் தரும் அதிர்ஷ்ட விளாயகர் ரூ. 50/-க்குக் கிடைக்கும்.**

நகைக் கடைக்கு நிறைய அனுபவம் தேவை. 1986ல் ஆரம்பிக்கப்பட்ட எங்கள் கடைக்கு நிறைய வாடிக்கையாளர் கள் உள்ளனர். 20 வருடங்களுக்கு மேலாக நகைக் கடைத் துறையில் அனுபவம் உள்ளதால் வாடிக்கையாளர்களுக்கு குறித்த நேரத்தில் சிறந்த முறையில் வைர நகைகள் தங்க நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள், கவச வேலைகள், ராசிக்கல் மோதிரங்கள் குறைந்த விலையில் உத்திரவாதத்துடன் செய்து தருகிறோம்.

ராஜாக்கள் காலத்தில் இருந்தே வைரங்கள், வைடூரியங்கள், நவரத்தினங்கள் உபயோகத்தில் உள்ளன. தற்போது 7 வருடமாக அனைவரும் ராசிக் கற்களை விரும்பி வாங்குகிறார்கள். எந்த ஜோதிடராக இருந்தாலும் ஒருவருக்கு இராசிக்கல் தேர்ந்தெடுக்க அவரது ராசிப்படியும், நடப்பு திசைப்படியும், என் படியும்தான் எழுதித் தருகிறார்கள். இதில் ராசிப்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. உதாரணமாக நாம் கோவிலுக்குச் சென்று அர்ச்சனை செய்யும் பொழுதும், வீட்டில் நடைபெறும் திருமணம், பெயர் வைப்பது, பூஜைகள், ஹோமங்கள் அனைத்திற்குமே ஜென்ம நட்சத்திரம் ராசி சொல்லித்தான் அர்ச்சனை செய்கிறோம். அதனால் அதன்படி அணிவதுதான் மிகச் சிறந்தது. அனைவரும் நவரத்தின மோதிரம் அணியலாம். மிகவும் நல்லது. 9 கிரகங்கள் பலனைத் தரும். **5 CENT** வைரம் வைத்து 8 கிராம் தங்கத்தில் விலை 8,000/-

## நவரத்தினங்கள் பயன்கள், விலை விபரங்கள்

**1.** சூரியன் - மாணிக்கம் **(RUBY)** அறிவு விருத்தியாகும். நல்ல உயர்ந்த நிலைக்குக் கொண்டு செல்லும். தைரியத்தையும் துணிச்சலையும் தரும். செல்வம் தரும். சிம்மராசிக்காரர்கள், சூரியதசை நடப்பவர்கள் 1,10,19,28 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. **20 CENT** கல் வைத்து வெள்ளியில் மோதிரம் விலை ரூ. 400/-

**2.** சந்திரன் _ முத்து **(PEARL)** ஞாபக சக்தி, செல்வம், வாக்கில் வலிமை, பலவித வசதிகள் ஏற்படும். கடக ராசிக்காரர்கள், சந்திர தசை நடப்பவர்கள் 2,11,20,29 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. 2 CARAT முத்து வைத்து வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

**3.** குரு _ புஷ்பராகம் **(PUSHPHARAGAM)** வசதி, சுபகாரியங்கள், நன்மதிப்பு செல்வம் ஆகியவை பெருகும். தனுசு ராசி, மீனராசிக்காரர்கள், குருதசை நடப்பவர்கள் 3,12,21,30 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளை, மஞ்சள் ஆகிய கலர்களில் கிடைக்கும். தங்கத்திலும், வெள்ளியிலும் அணியலாம். வெள்ளியில் விலை ரூ. 400/-, 1000/-ம். தங்கத்தில் **1800/-** முதல் **5000/-**ம் வரை உடனடியாகக் கிடைக்கும்.

**4.** ராகு _ கோமேதகம் **(GOMEDAGAM)** தடைபடும் காரியங்கள் நிறைவேறும். ராகு தோசம் உள்ளவர்கள், ராகு தசை நடப்பவர்கள், **4,13,22,31** தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. **50 CENT** வைத்து வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

**5.** புதன் _ மரகதபச்சை **(EMARALD)** கல்வி, செல்வம், ஞானம், ஆரோக்கியம், அதிர்ஷ்ட வாய்ப்புகள் ஏற்படும். மிதுன ராசி, கன்னி ராசிக்காரர்கள், புதன் தசை நடப்பவர்கள், 5,14,23 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. **20 CENT** வைத்து வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

**6.** சுக்கிரன் _ வைரம் **(DIAMOND)** புகழ், செல்வம் அனைத்துக் காரியங்களிலும் வெற்றி கிடைக்கும். ரிஷபராசி, துலாம் ராசி, சுக்ரதசை நடப்பவர்கள், 6,15,24 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். தங்கத்திலும் வெள்ளியிலும் அணியலாம். **5 CENT** வைரம் வைத்து 4 கிராம் தங்கத்தில் **4500/-** வெள்ளியில் **2250/-**

**7.** கேது _ வைடூரியம் **(CAT'S EYE)** வியாபாரம் பெருகும், நிறைய வருமானங்களைக் கொடுக்கும். கேது தோஷம் உள்ளவர்கள், கேது தசை நடப்பவர்கள், 7,16,25 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. **20 CENT** வைத்து வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

**8.** சனி _ நீலம் **(SAPPHIRE)** அறிவு, மன அமைதி, பெயர், புகழ், செல்வம் ஆகியவை தரும். மகர ராசி, கும்ப ராசிக்காரர்கள், சனி தசை நடப்பவர்கள் 8,17,26 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. **20 CENT** வைத்து வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

**9.** செவ்வாய் _ பவழம் **(CORAL)** மனதில் துணிவு, திருஷ்டியைப் போக்கும், செல்வம் மேலும் பல நன்மைகள் கூடும். மேஷராசி, விருச்சிக ராசி, செவ்வாய் தோஷம், செவ்வாய் தசை நடப்பவர்கள் 9,18,27 தேதியில் பிறந்தவர்கள் அணியலாம். வெள்ளியில் அணிவது சிறந்தது. **2 CARAT** பவழம் வைத்து வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

அனைவரும் அணியக்கூடியது கார்னெட் வெள்ளி மோதிரம் விலை ரூ. **400/-**

இதை அணிவதால் படிப்பு, ஞாபகசக்தி, வேலை வாய்ப்பு, வியாபாரம் செல்வ வளம் பெருகும். நம்பிக்கை, உழைப்பு, முயற்சி செய்தால் ராசிக்கல் மோதிரம் அணிந்து 100 சதவீத வெற்றிபெறலாம். எங்களிடம் ஜாதகம் கொண்டு வந்தால் என்ன கல் போட வேண்டும் எனச் சொல்கிறோம். கட்டணம் கிடையாது. ஜாதகம் இல்லாதவர்கள் பிறந்த தேதி, ஊர் கொண்டு வந்தால் ஜாதகம் கணித்து தருகிறோம். ரூ. 50/- பதிவுத் தபால் மூலம் ஜாதகம் பெற ரூ. 60/- அனுப்பவும். தபால் எழுதினால் முழு விவர பாம்லட் இலவசமாக அனுப்புகிறோம்.

# சிவகாமியின் சபதம்

## ஐந்தாம் அத்தியாயம்

## காதற்புயல்

சிற்ப வீட்டின் வாசலில் வந்து நின்ற சிவகாமியைக் கண்டதும், பரஞ்சோதியின் கண்கள் அவளை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தரையை நோக்கின. ஆயனச் சிற்பியின் மகள் சாதாரண மானிடப் பெண் அல்ல, - தெய்வாம்சம் உடையவள் என்ற எண்ணம் முதன் முதலில் அந்த வீட்டுக்கு வந்திருந்தபோது பரஞ்சோதியின் உள்ளத்தில் தோன்றியிருந்தது. சிவகாமிக்கும் மாமல்லருக்கும் ஏற்பட்டிருந்த இருதய பாசத்தைப் பற்றி முன்பே அவர் ஒருவாறு ஊகித்துத் தெரிந்துகொண்டிருந்தார். நேற்றிரவு பல்லவ குமாரரின் வாய்மொழியினாலேயே அது உறுதிப்பட்டது.

அரண்மனை நிலா மாடத்தில் சரத்கால சந்திரனின் அமுதகிரண போதையை அனுபவித்துக்கொண்டு, சிநேகிதர்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்தபோது, மாமல்லர் தம்முடைய இருதயத்தையே அவருக்குத் திறந்து காட்டி விட்டார். இத்தனை நாளும் மாமல்லரின் உள்ளத்தில் அணை போட்டுத் தடுத்து வைத்திருந்த பிரேமைப் பிரவாகமானது அவருடைய இருதய அந்தரங்கத்தை வெளியிடக் கூடிய உற்ற தோழன் ஒருவன் கிடைத்த உடனே, அணையை ஒரே மோதலில் இடித்துத் தள்ளி விட்டு அமோக வெள்ளமாகப் பாய்ந்தது. பரஞ்சோதி அந்த வெள்ளத்தில் அகப்பட்டுக் கொண்டு திக்குமுக்காடிப் போனார். இந்த மாதிரி காதல் வெறி அவருக்கு

அமரர் கல்கி

முற்றிலும் புதுமையாயிருந்தது. திருவெண்காட்டில் நமசிவாய வைத்தியர் வீட்டில் அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த நங்கை ஒருத்தியும் இருக்கத்தான் இருந்தாள். ஆனால், அவளுடைய நினைவானது பரஞ்சோதிக்கு அமைதி கலந்த இன்பத்தையே உண்டாக்கியது. மாமல்லருடைய காதலோ அவருடைய உள்ளத்தை, கடும் புயல் சுழன்று சுழன்று அடிக்கும் மலை சூழ்ந்த பிரதேசமாகவும், திடீர் திடீர் என்று தீயையும் புகையையும் கக்கும் எரிமலையாகவும், பிரம்மாண்டமான அலைகள் மலை மலையாக எழுந்து மோதும் குடாக் கடலாகவும் செய்திருப்பதைப் பரஞ்சோதி கண்டார்.

மாமல்லருடைய காதல் வேகம் பரஞ்சோதிக்குப் பெரு வியப்பை உண்டாக்கிற்று; அதோடு, பயத்தையும் உண்டாக்கிற்று.

அவர்களுடைய காதல் பூர்த்தியாவதற்கு எத்தனை எத்தனை தடைகள் இருக்கின்றன என்பதை எண்ணியபோது பரஞ்சோதியின் மனம் கனிந்தது.



எல்லாவற்றிலும் பெரிய தடை. மகேந்திர சக்கரவர்த்தியின் விருப்பம் வேறு விதமாயிருந்ததேயாகும். அந்தப் பெருந் தடைக்குப் பரிகாரம் உண்டா? அது எப்போதாவது நிவர்த்தியாகக் கூடுமா?

சென்ற எட்டு மாதத்தில் சக்கரவர்த்தியிடம் நெருங்கிப் பழகி, அவருடைய அன்புக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமாகி, அநேக விஷயங்களில் அவருடைய அந்தரங்கக் கருத்துக்களையெல்லாம் அறிந்திருந்த பரஞ்சோதி, மாமல்லரின் காதலைப் பற்றி சக்கரவர்த்திக்குத் தெரியுமென்றும், அதை அவர் விரும்பவில்லையென்றும் திட்டமாய்த் தெரிந்துகொண்டிருந்தார்.

எனவே, இப்போது அவருடைய நிலைமை மிகவும் தர்மசங்கடமாய்ப் போயிருந்தது. ஒரு பக்கத்தில், அவருடைய மனப்பூர்வமான பக்திக்குப் பாத்திரமானவரும், தந்தையின் ஸ்தானத்தை வகிப்பவருமான மகேந்திரர், குமார சக்கரவர்த்தியின் உள்ளத்தைச் சிவகாமியிடமிருந்து திருப்ப விரும்புகிறார் என்பதை அவர் அறிந்திருந்தார். மாமல்லரோ, தம்முடைய இருதய அந்தரங்கத்தையெல்லாம் வெளியிடுவதற்குரிய உற்ற துணைவராக அவரைப் பாவித்து, தம் மனோரதத்தை நிறைவேற்றிக் கொடுப்பதற்கு அவருடைய ஒத்தாசையை எதிர்பார்க்கிறார். சக்கரவர்த்திக்கு உகந்ததைச் செய்தால், தம்மை நம்பிய சிநேகிதருக்குத் துரோகம் செய்வதாகும். சிநேகிதருக்கு உகந்ததைச் செய்தாலோ சக்கரவர்த்திக்கு விருப்பமில்லாததைச் செய்ததாக முடியும்.

இந்தத் தர்ம சங்கடம் ஒருபுறமிருக்க, சிவகாமியின் நிலைமை என்ன? அவளுக்கு நன்மையானது எது? இந்தப் பொருத்தமில்லாத காதலினால், அவளுக்கு உண்மையில் நன்மை உண்டாகுமா? இது விஷயத்தில், ஆயனருடைய அபிப்பிராயந்தான் என்ன?

இத்தனை மனக் குழப்பங்களுக்கிடையே ஒன்று மட்டும் மிகத் தெளிவாயிருந்தது. சிவகாமி என்று எண்ணியதுமே, அவருடைய மனத்தில் பயபக்தியும் மரியாதையும் அன்பும் அபிமானமும் சங்கோசமும் வாத்ஸல்யமும் கலந்த புனிதமான தெய்வீக உணர்ச்சி தோன்றிற்று. சிவகாமி விஷயத்தில் அவருடைய மனநிலைமைக்குத் தகுந்த உதாரணம் சொல்ல வேண்டுமானால், சீதா தேவி விஷயத்தில் லக்ஷ்மணனுடைய மனநிலைமையைத்தான் சொல்ல வேண்டும்.

ரதத்தில் இருந்தது மாமல்லர் அல்ல என்று கண்டதும், வருகிறவர்கள் வேறு யார் என்று தெரிந்து கொள்ளக்கூடச் சிவகாமி ஆசைப்படவில்லை. உடனே அவளுடைய கவனம் ரதத்தை ஓட்டிக் கொண்டு வந்த கண்ணபிரான் மீது சென்றது.

கண்ணபிரான் ரதத்தின் முகப்புத் தட்டிலிருந்து குதித்து முன்னால் வர, பரஞ்சோதி அவனைத் தொடர்ந்து பின்னால் வந்தார். அவர்கள் நெருங்கி வந்ததும், சிவகாமி கண்ணபிரானை நோக்கி, ''அண்ணா! வீட்டில் எல்லாரும் சௌக்கியமா?'' என்று கேட்டாள். அவளுடைய குரலில் தீனமும் ஏமாற்றமும் நன்கு தொனித்தன.

"இல்லை, தாயே! இல்லை! வீட்டில் ஒருவரும் சௌக்கியம் இல்லை. கமலிக்குத் தலைவலி, அப்பாவுக்கு முழங்கால் வலி. எனக்கும் உடம்பு சரியாகவே இல்லை..."

''உங்களுக்கு என்ன அண்ணா?'' என்று சிவகாமி கேட்டாள்.

"அதுதான் தெரியவில்லை. வயிற்றில் ஏதோ கோளாறு. கமலி, 'உன் வியாதிக்கு மருந்து பூனைதான்!' என்கிறாள்."

''பூனை மருந்தா? இது என்ன கூத்து?'' என்றாள் சிவகாமி.

''ஆமாம், தாயே! இப்போதெல்லாம் எனக்கு அசாத்தியமாகப் பசிக்கிறது. நேற்று ராத்திரி கமலி சுட்டு வைத்திருந்த ஒன்பது அப்பம், ஏழு தோசை,





பன்னிரண்டு கொழுக்கட்டை அவ்வளவையும் தின்றுவிட்டு, 'இன்னும் ஏதாவது இருக்கிறதா கமலி!' என்று கேட்டேன். 'உன் வயிற்றில் எலி இருக்கிறது; ஒரு பூனையைச் சாப்பிடு. அப்போதுதான் உன் பசி தீரும் என்றாள்!''

இதைக் கேட்ட சிவகாமி 'கலீ'ரென்று சிரித்தாள். பரஞ்சோதியினாலும் சிரிக்காமலிருக்க முடியவில்லை.

பரஞ்சோதியின் சிரிப்புச் சப்தத்தைக் கேட்ட சிவகாமி அவர் பக்கம் திரும்பிப் பார்த்தாள். ஆஹா! இது யார்?

பரஞ்சோதி தைரியமடைந்து, ''அம்மணி! என்னைத் தெரியவில்லையா?'' என்று கேட்டார்.

''யார்? திருவெண்காட்டிலிருந்து...''

''ஆம், நான்தான்! திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து அப்பாவுக்கு ஓலை கொண்டு வந்த பரஞ்சோதிதான்...''

அப்போது, கண்ணபிரான் குறுக்கிட்டு, ''மன்னிக்க வேண்டும்! கல்யாணச் சந்தடியில் மாப்பிள்ளையை மறந்துபோனேன். தாயே! இவர் யார் என்று நான் சொல்கிறேன். காஞ்சிக் கோட்டையின் பிரதம தளபதி இவர். கோட்டைக் காவலுக்காகச் சக்கரவர்த்தியே இவரை அனுப்பியிருக்கிறார். இனிமேல் காஞ்சிக்கோட்டையைப் போல் ஒளிந்து கொள்வதற்குப் பத்திரமான இடம் பூலோகத்திலேயே கிடையாது. இவருடைய கட்டளை இல்லாமல் யமன்கூட இனிமேல் கோட்டைக்குள் நுழைய முடியாது!'' என்றான்.

கண்ணபிரான் ஒரு மாதிரி விதூஷகன். இந்த மாதிரியெல்லாம் மாமல்லரிடமே பேசுவதற்கு உரிமை பெற்றவன் - என்று பரஞ்சோதி அறிந்திருந்தார். எனவே, அவனுடைய பேச்சைப் பொருட்படுத்தாமல், சிவகாமியை நோக்கி, ''அப்பா எங்கே? உள்ளே இருக்கிறாரா?'' என்று கேட்டார்.

கண்ணபிரானுடைய வேடிக்கைப் பேச்சு அந்தச் சமயம் சிவகாமிக்கும் பிடிக்கவில்லை என்று அவளுடைய முகக் குறி காட்டிற்று. ''அப்பா அதோ வருகிறார்!'' என்றாள்.

பரஞ்சோதி திரும்பிப் பார்த்தார். ஆயனர் மரத்தடியிலிருந்து வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தார்.

அவர் அருகில் வந்ததும் தளபதி பரஞ்சோதி, ''ஐயா! என்னை அடையாளம் தெரிகிறதா?'' என்று கேட்டார்.

உடனே ஆயனர் ஆவலுடன், "யார்? பரஞ்சோதியா?" என்று விரைந்து வந்து அவரைத் தழுவிக்கொண்டார். பிறகு, சற்றுத் தாழ்ந்த குரலில், "தம்பி! போன காரியம் எப்படி? காயா, பழமா?" என்று கேட்டார்.

அப்போது அவருடைய கண்களில் தோன்றிய வெறியையும், குரலில் தொனித்த பரபரப்பையும் கவனித்த பரஞ்சோதிக்குக் கண்ணில் நீர் துளித்தது. தழு தழுத்த மெல்லிய குரலில், "இந்தத் தடவை காரியம் ஜயமாகவில்லை. வெறுங் கையுடனேதான் திரும்பி வந்திருக்கிறேன். ஆனால், என்றைக்காவது ஒருநாள் நிச்சயமாக அஜந்தா இரகசியத்தை அறிந்து வந்து உங்களுக்குத் தெரிவிப்பேன்" என்று கூறினார்.

"வேண்டாம், தம்பி! வேண்டாம். நீ வழியில் பல்லவ சைனியத்தில் சேர்ந்து விட்டதாக நானும் கேள்விப்பட்டேன். ஒருவேளை பொய்யாயிருக்குமோ என்று நினைத்தேன். அதனால் பாதகமில்லை. என்றும் அழியா வர்ண இரகசியத்தை நானே சீக்கிரத்தில் கண்டு பிடித்து விடுவேன். தம்பி! சில புதிய சோதனைகள் செய்து கொண்டிருக்கிறேன். வருகிறாயா காட்டுகிறேன்!" என்று ஆயனர் தாம் உட்கார்ந்திருந்த மரத்தடியை நோக்கினார்.

இதற்குள், சிவகாமி, "அப்பா! அண்ணன் எட்டு மாதங்கள் கழித்து வந்திருக்கிறார். உள்ளே வந்து உட்காரச் சொல்லுங்கள். எல்லாம் விவரமாகக் கேட்கலாம்" என்றாள்.

"ஆமாம், ஆமாம்! வா, தம்பி!" என்று கூறி, ஆயனர் பரஞ்சோதியை வீட்டுக்குள் அழைத்துச் சென்றார்.



## ஆறாம் அத்தியாயம்

# கலை வெறி



யனர் வீட்டுச் சிற்ப மண்டபமானது கிட்டத்தட்டத் தாம் எட்டு மாதத்துக்கு முன்பு பார்த்தது போலவே இருப்பதையும், ஆயனர் அப்போது அரைகுறையாக வேலை செய்து விட்டிருந்த சிலைகள் இன்னும் அரைகுறையாகவே இருப்பதையும் பரஞ்சோதி பார்த்தபோது, அவருடைய மனத்தில் இன்னதென்று சொல்ல முடியாத ஒரு சோர்வு உண்டாயிற்று. "இந்த யுத்தம் என்னத்திற்காக வந்தது?" என்ற எண்ணமும் அவருடைய வீர உள்ளத்தில் தோன்றியது. தாழ்வாரத்தின் முனையில் ஆயனரும் பரஞ்சோதியும், உட்கார்ந்திருந்தார்கள். சிவகாமி முன்னொரு சமயம் நின்றது போலவே இப்போதும் அருகிலிருந்த தூணைப் பிடித்துக்கொண்டு நின்றாள்.

"உங்களுக்குத் தெரியுமா, அப்பா! இவர்தான் இப்போது காஞ்சிக் கோட்டையின் தளபதி!" என்றாள் சிவகாமி.

"அப்படியா! தம்பியின் முகக் களையைப் பார்த்து, இவன் பெரிய பதவிக்கு வருவான் என்று அப்பொழுதே நாகநந்தியடிகள் சொன்னார்..." என்று கூறிய ஆயனர், சட்டென்று நினைத்துக்கொண்டு, "தம்பி! ஓலையை என்ன செய்தாய்?" என்று கேட்டார்.

"ஐயா, அது விஷயத்திலேதான் ஏமாந்து போய்விட்டேன். தாங்களும் நாகநந்தியும் எவ்வளவோ எச்சரித்திருந்தும் பயனில்லாமல் போய்விட்டது. ஓலை..."

"அடாடா! அதைச் சக்கரவர்த்தியிடம்...!"

"ஆம் ஐயா! ஓலை சக்கரவர்த்தியிடம் சிக்கிவிட்டது!"

"ஆஹா!" என்றார் ஆயனர். பிறகு, "மகேந்திரவர்மர் அதைப் பற்றி என்ன சொன்னார்?" என்று கேட்டார்.

"மகேந்திரவர்மரா? நான் பல்லவ சக்கரவர்த்தியைச் சொல்லவில்லையே; வாதாபி சக்கரவர்த்தியையல்லவா சொன்னேன்? வழியில் என்னை வாதாபி வீரர்கள் பிடித்துக்கொண்டு போய்ப் புலிகேசியின் முன்னால் நிறுத்தினார்கள். ஓலையையும் அவர்கள்தான் பலாத்காரமாய்க் கைப்பற்றிக் கொண்டார்கள்..."

ஆயனர் வாயிலிருந்து மீண்டும், 'ஆ!' என்னும் வியப்பொலி எழுந்தது. அதே சமயத்தில் எங்கேயோ, யாரோ, பெருமூச்சு விடுவது போல் சப்தம் கேட்டது.

பாம்பின் சீறல் போன்ற அந்தச் சப்தத்தைப் பரஞ்சோதி கவனித்தார். ஆனால் ஆயனராவது சிவகாமியாவது கவனிக்கவில்லை.

சிவகாமி அப்போது வாசற் பக்கத்தை உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அங்கே உள் வாசற்படியண்டை நின்ற கண்ணபிரான் சிவகாமியை நோக்கி ஏதோ சமிக்ஞை செய்துகொண்டிருந்தான்.

"தம்பி! உண்மையாகவே நீ வாதாபி புலிகேசி சக்கரவர்த்தியைப் பார்த்தாயா?" என்று ஆயனர் வியப்புடன் கேட்டார்.

"ஆம், ஐயா! அதோ, அந்த புத்த விக்கிரகம் உள்ள தூரத்தில் வாதாபி சக்கரவர்த்தி இருந்தார்..."

"சக்கரவர்த்தி என்ன சொன்னார்?"

''யாருக்குத் தெரியும்? நான் அறியாத பாஷையில் அவர் பேசினார்... தங்களுக்கு இருக்கும் ஆவலைப் பார்த்தால், வாதாபி சக்கரவர்த்தியைப் பார்க்க விரும்புவதாய்த் தோன்றுகிறதே!''

''ஆம், தம்பி! உன்னை அனுப்பாமல், நானே ஓலையை எடுத்துக்கொண்டு போயிருக்கக் கூடாதா என்று கூடத் தோன்றுகிறது!''

''ஏன் அவ்வளவு ஆர்வம், ஐயா?''

''வாதாபி சக்கரவர்த்தி இளம்பிராயத்தில் அஜந்தா மலையில் இரண்டு வருஷம் இருந்தாராம். ஆகையால் அவருக்கு அஜந்தா வர்ணத்தின் இரகசியம் தெரிந்திருக்குமல்லவா?''

வஜ்ரபாஹு கலைகளை இகழ்ந்து கூறியதெல்லாம் பரஞ்சோதிக்கு அப்போது நினைவு வந்தது. அது எவ்வளவு உண்மை? ஆயனரின் கலை வெறி அவரை எப்படிப் பைத்தியமாக அடித்திருக்கிறது? புலிகேசி பகை அரசன் என்பதைக் கூட மறந்து அவனைப் பார்க்கும் ஆவலை உண்டாக்கியிருக்கிறதல்லவா?

''ஐயா! நான் முக்கியமாக எதற்காக வந்தேனோ, அந்தக் காரியத்தை இன்னும் சொல்லவில்லை. சக்கரவர்த்தி தங்களிடம் ஒரு செய்தி தெரிவிக்கச் சொல்லி எனக்கு ஆக்ஞாபித்தார்...''

''எந்தச் சக்கரவர்த்தி?'' என்றார் ஆயனர்.

''மகேந்திர பல்லவர்தான்!''

''ஆ! மகேந்திர பல்லவர்! அவரைப் பற்றி நான் என்னவெல்லாமோ நினைத்திருந்தேன். ஒரு சமயம் இந்தப் பல்லவ இராஜ்யத்திலுள்ள சிற்பிகள் எல்லாம் சேர்ந்து சபை கூடி மகேந்திர பல்லவருக்கு 'விசித்திர சித்தர்' என்று பட்டம் கொடுத்தோம். அதைக் காட்டிலும் 'சபல சித்தர்' என்று அவருக்குப் பெயர் கொடுத்திருக்கலாம்.''

''ஏன் இப்படிச் சொல்கிறீர்கள். ஐயா?''

''பார், தம்பி! இங்கிருந்து என்னை மாமல்லபுரத்துக்குப் போகச் சொன்னார். 'ஐந்து மலைக் கோயில்களும் ஆறு மாதத்தில் முடிய வேண்டும்' என்றார். ஒரு மாதத்திற்குள்ளாக, 'கோயில் வேலையை நிறுத்து!' என்று கட்டளையிட்டார். சக்கரவர்த்தி முன்போல் இல்லை. தம்பி; ரொம்பவும் மாறிப் போய்விட்டார்!''

''அப்படியொன்றும் அவர் மாறவில்லை ஐயா! யுத்தம் காரணமாகச் சிற்சில காரியங்கள் செய்ய வேண்டியிருக்கிறது...''

''யுத்தம்! பாழும் யுத்தம்! இப்போது நடக்கிற யுத்தம் போதாதென்று பழைய பாரத யுத்தத்தை வேறே கட்டிக்கொண்டு அழ வேண்டுமாம். ஒவ்வொரு ஊரிலும் பாரத மண்டபங்கள் கட்ட வேண்டுமாம். நான் ஒரு விஷயம் சொல்லட்டுமா, தம்பி! உண்மையில் மாமல்லபுரத்துச் சிற்ப வேலையைச் சக்கரவர்த்தி நிறுத்தியது பாரத மண்டபம் கட்டுவதற்காக அல்ல. சிற்பிகளுக்கும் சிற்றாள்களுக்கும் படி கொடுத்து வந்த அரிசி, பருப்பு, மிச்சமாகட்டும் என்றுதான்! துறைமுகப் பண்டகசாலைகளில் இருந்த அவ்வளவு தானியங்களையும் காஞ்சிக்குக் கொண்டு போய்விட்டார்களாம்!''

''யுத்தம் நடத்துவதற்கு இவையெல்லாம் அவசியமான காரியங்கள். ஐயா! காஞ்சிக்கோட்டை ஒரு வருஷமோ, இரண்டு வருஷமோ கூட முற்றுகைக்கு ஆயத்தமாயிருக்க வேண்டும். வாதாபியின் சமுத்திரம் போன்ற சைனியம் திரண்டு வருவதை நீங்கள் மட்டும் பார்த்திருந்தால்...''

''வாதாபி சைனியம் வருகிறது. வருகிறது என்று எட்டு மாதமாய்த்தான் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்...!''

''ஆனால், இன்னும் ஏன் அந்தப் பிரம்மாண்டமான சைனியம் இங்கே வந்து சேரவில்லை. தெரியுமா? மகேந்

திர பல்லவர் மட்டும் அப்போது போர்க்களத்துக்குப் போயிராவிட்டால், இதற்குள் காஞ்சிமாநகர் இருந்த இடம் புல் முளைத்துப் போயிருக்கும். ஐயா! வாதாபி சைனியத்தில் வரிசை வரிசையாக, மலை மலையாக, நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் நின்ற ஆயிரக்கணக்கான போர் யானைகளை என் கண்ணாலேயே நான் பார்த்தேன். பல்லவ சைனியத்திலோ மொத்தம் நூறு யானைகளுக்கு மேல் கிடையாது. அப்படியிருந்தும் எட்டு மாத காலம் வாதாபி சைனியத்தை வடபெண்ணைக் கரையிலேயே நிறுத்தி வைத்திருந்தோம். இது எதனால் சாத்தியமாயிற்று. தெரியுமா? பாரத யுத்தத்தில் பஞ்ச பாண்டவர்களின் வெற்றி ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய அறிவு பலத்தினாலும் அர்ச்சுனனுடைய வில்லின் வீரத்தினாலும் சாத்தியமாயிற்று. இந்த நாளில் கிருஷ்ண பகவானும் அர்ச்சுனனும் ஒரே உடம்பில் மகேந்திர பல்லவராக அவதரித்திருக்கிறார்கள் ஐயா!''

''தம்பி! சக்கரவர்த்தியிடம் உன்னுடைய பக்தியைக் குறித்து மிகவும் சந்தோஷம். எனக்குச் சக்கரவர்த்தி என்ன சொல்லி அனுப்பினார்? அதைச் சொல்லு!'' என்று ஆயனர் கேட்க, பரஞ்சோதி கூறினார்:

''புலிகேசியின் படைகள் வடபெண்ணையைக் கடந்து விட்டன ஐயா! வேங்கியை வென்ற புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் படைகளும் சேர்ந்துகொண்டிருக்கின்றன. இனி, அவற்றை வெகுகாலம் தடுத்து நிறுத்துவது அசாத்தியம்! ஆகையினால் தான், காஞ்சிக் கோட்டையை முற்றுகைக்கு ஆயத்தம் செய்ய என்னைச் சக்கரவர்த்தி அனுப்பி வைத்தார். ஒரு வருஷமோ இரண்டு வருஷமோ முற்றுகை நீடித்திருக்கலாம். ஆகையால், கோட்டைக்குள்ளிருந்து அநாவசியமான ஜனங்களையெல்லாம் வெளியேற்றப் போகிறோம். கோட்டையைச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்தும் ஜனங்கள் வெளியேறும்படி இருக்கும். இது பற்றித்தான் தங்களுடைய விருப்பத்தைத் தெரிந்துகொள்ளும்படி சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிட்டார். எதிரி சைனியம் வரும் சமயம் தாங்கள் இங்கே இருப்பது உசிதமாயிராது...''

''ஆஹா! இந்த அரண்ய வீட்டிலேயிருந்தும் சக்கரவர்த்தி என்னைத் துரத்தி விடப் பார்க்கிறாரா? எந்த ராஜா எந்தப் பட்டணத்துக்கு வந்தாலென்ன, போனாலென்ன? இந்தக் காட்டுக்குள்ளே வந்து என்னை யார் எட்டிப் பார்க்கப் போகிறார்கள்? பார்த்தால்தான் இங்கிருந்து என்னத்தை எடுத்துக்கொண்டு போகப் போகிறார்கள்? இந்தக் கற்சிலைகளையும் கல்லுளிகளையும் வேணுமானால் கொண்டு போகட்டும். சுவரிலே எழுதிய சித்திரங்களை வேணுமானாலும் சுரண்டிக் கொண்டு போகட்டும்...!

''ஐயா! தாங்கள் ஏதோ கோபத்தில் பேசுகிறீர்கள். பல்லவ இராஜ்யத்துக்கு எப்பேர்ப்பட்ட ஆபத்து வந்திருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ளாமல் பேசுகிறீர்கள்...''

''சக்கரவர்த்தி எங்களுக்கு என்னதான் கட்டளையிடுகிறார்?''

''தாங்களும் தங்கள் குமாரியும் காஞ்சிக் கோட்டைக்குள்ளேயே வந்து இருந்தாலும் இருக்கலாம்! அல்லது சோழ நாட்டுக்குப் போய்த் தங்கள் சிநேகிதர் நமச்சிவாய வைத்தியருடன் சிலகாலம் தங்கியிருந்தாலும் இருக்கலாம். திருவெண்காட்டுக்குப் போவதாயிருந்தால், தக்க பாதுகாப்புடன் தங்களை அனுப்பி வைக்கும்படி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். தங்கள் விருப்பம் எதுவோ, அப்படிச் செய்யலாம்'' என்றார் பரஞ்சோதி.

''சிவகாமி! நீ என்ன அம்மா சொல்லுகிறாய்? என்று கேட்டார் ஆயனர், திரும்பிப் பார்த்து.

ஆனால், சிவகாமி நின்ற இடத்தில் அவளைக் காணவில்லை.

(தொடரும்)

# பவானி இல்லம்

**ப**ஸ்ஸை விட்டு இறங்கிய பவானி நடக்கத் தொடங்கினாள். அண்ணன் வீடு கொஞ்ச தூரம்தான் என்றாலும் கையில் குழந்தையுடன் நடப்பது சிரமமாயிருந்தது. அண்ணன் பையனுக்குக் கடலை உருண்டை பிடிக்கும் என்பதால், ஒரு பெட்டிக் கடையில் ஐந்து ரூபாய்க்கு வாங்கி, பையில் போட்டுக் கொண்டாள்.

ரோடு சேறும் சகதியுமாக இருந்தது. மழையோ விட்டு விட்டுப் பெய்துகொண்டிருந்தது. பார்த்து நடக்க வேண்டியிருந்தது. தவறி விழுந்தால் தற்போதுள்ள நிலையில் வைத்திய செலவுக்குக் கூட காசில்லை. எல்லாவற்றையும் விடு முழுங்கிக் கொண்டிருக்கிறது. ரப்பர் செருப்பு பின்பக்கம் முழுவதும் சேற்றை வாரியடித்துக் கொண்டிருந்தது. மனசு? அண்ணனிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்று யோசனை செய்து கொண்டிருந்தது.

"இந்த மழைல நேரா வரணுமா? ஃபோன் பண்ணலாமே!" அண்ணி கேட்பாள்.

'உதவி என்று கேட்கும்போது, ஃபோன்ல கேட்டா மரியாதையா இருக்குமா...? சுலபமா தட்டிக் கழிக்கலாமே' என்று பதில் கூற முடியாது!

"உங்களை எல்லாம் பார்க்கணும்னு தோணிச்சு. அதான் வந்தேன்" சொல்ல வேண்



பெருங்களத்தூர் வாசன்



டியதை நினைவு படுத்திக்கொண்டாள். பொய்தான்! வேறென்ன செய்ய... வீடு கட்டறதுன்னா சும்மாவா...? பிளான் ஒண்ணு. ஆனா செலவு இழுத்துக்கிட்டே போகுது... இது என்ன பொம்மை வீடா... விளையாட்டாகக் கட்டுவதற்கு?

அப்போது பவானி ஐந்தாவது படித்துக்கொண் டிருந்தாள். அரைப் பரீட்சை லீவு. டீ.விக்களின் தாக்கம் இல்லாத காலம். அண்ணன் ஏழாவது படித்துக் கொண் டிருந்தான். பக்கத்து நிலத்தில் வீடு கட்டுவதற்காக கொட்டிக் கிடந்த மணலில் பவானி கோபுரம் செய்து கொண்டிருந்தாள். "என்ன பவானி... மணல்ல விளையாடறே?"

"கோபுரம் கட்டறேன்."

"சாமிக்கு எங்க போவே...? நகரு... நான் உனக்கு வீடு கட்டித் தர்றேன்!"

பவானி வழி விட்டாள். அண்ணன் குவித்திருந்த மணலைக் கலைத்தான். மணல் பரப்பைக் கைகளால் நிரவிச் சமன் செய்தான்.

"ஐயோ...!"

"என்னண்ணே?"

"கல்லு, குத்திடிச்சு..."

"பார்த்து கட்டேன்ணா!"

"வீடு கட்டறதுன்னா சும்மாவா...?"

நான்கு புறமும் அழுத்தி கோடு போட்டான். விளக்குமாற்றுக் குச்சிகளைக் கொண்டு வரச் சொல்லி, சின்னச் சின்னதாக ஒடித்து அந்தக் கோட்டின் மீது நட்டான். காம்பவுண்ட் சுவர் ரெடியானது.

பவானி கண்களை விரித்தாள். 'ஹைய்யா' - கூவினாள். "பவானி வீடு பங்களா மாதிரில்ல இருக்கணும்..." அண்ணன் சொன்னான்.

"அதோ அந்த செங்கல்லை எடு..."

எடுத்தாள்.

"லீவு விட்டாலும் விட்டது..." அம்மாவின் குரலை இருவரும் சட்டை செய்யவில்லை. செங்கல்லைச் சுவர்களாக்கினான். மேலே மூட வேண்டும்.

"பவானி. நம்ம வீட்டுக்குப் பின்னாடி, ஒரு அட்டைப் பெட்டி இருக்கு. போய் சீக்கிரம் கொண்டா."

பவானி சிட்டாகப் பறந்தாள்.

இன்று மெதுவாக நடந்து கொண்டிருக்கிறாள்.

"பவானி... மேஸ்திரிக்கே ஆச்சரியமா இருக்கு. டக் டக்குன்னு பொருளோட விலை ஏறுது. போட்ட பட்ஜெட்டை விட எல்லாம் கூடுது... இன்னும் எண்பதாயிரமாவது வேணும். அப்பதான் சுற்று மட்டும் பூசிட்டு, குடி போக முடியும்... சீக்கிரம் போனாத்தான் இப்ப தர்ற வாடகையாவது மிஞ்சும்... எங்க சைடு எல்லா இடத்திலேயும் கை நீட்டியாச்சு!" - கணவனின் வார்த்தை. உண்மையிருந்தாலும், உன் வீட்டுப் பக்கம் போய்க் கேட்டுப் பார் என்ற வேண்டுகோளும் இருந்தது. வேறு வழியில்லை. ஏதாவது செய்துதான் தீர வேண்டும்.

அண்ணனுக்குத் தபால் அலுவலகத்தில் வேலை. அண்ணியும் பணக்கார இடம். கல்யாணமான சில மாதங்களிலேயே வேலை மாற்றம் வந்தது. தனியாகச் சென்றார்கள்.புது வீடு கட்டிக்கொண்டார்கள். அப்பா அம்மாவுக்கு ஊரில் காய்கறி கடையையும், சொந்த வீட்டையும் விட்டு வர முடியாத நிலை. அப்பாவுக்குப் புரிந்தது... தன் வீட்டை விற்றார். வந்த பணத்தில் பவானிக்குச் சுமாரான இடத்தில் கல்யாணம் முடித்தார். கடைக்குப் பின்புறம் சிறிய ரூம் போட்டு தன் வாழ்க்கையைத் தொடர்ந்தார். அண்ணனுக்குச் சிரமம் கொடுக்க விருப்பமில்லை. வரவுக்கும் செலவுக்கும் சரியாய்ப் போகும் நிறுவனம். பவானியின் கணவன் கெட்டிக்காரன். தனியார் கம்பெனியில் செக்யூரிட்டி வேலை... புது வீடு கட்ட நினைத்து வேலையைத் தொடங்க, முடியும் தருவாயில் பற்றாக்குறை.

"ஹை... அத்தை!" அண்ணன் மகன் சுரேஷ் கத்திக்கொண்டே கதவைத் திறந்தான். கடலை உருண்டையைக் கொடுத்தாள். 'தேங்க்ஸ்' என்று குழந்தையை வாங்கிக் கொண்டான்.

"வா... பவானி..." அண்ணன் சொல்ல, 'வாங்க' ஒற்றை வார்த்தையில் வரவேற்ற அண்ணி "டேய் சுரேஷ்... குழந்தை ஜாக்கிரதை" தேவையில்லாமல் கத்திக் கொண்டே சமையலறைக்குள் சென்றாள்.

"அண்ணி..." கூப்பிட்டுக் கொண்டே பவானியும் பின்தொடர்ந்தாள்.

"அப்பா அம்மா சௌக்கியமா அண்ணி?" பவானி கேட்டாள். "ம்... ம்... நல்லாத்தான் இருக்காங்க... அப்பறம் வீடு முடிஞ்சாச்சுப் போல இருக்கு... எப்ப கிரஹப்பிரவேசம்?" சாமர்த்தியமாகக் கேட்டாள்.

"இதுவரைக்கும் எல்லாம் நல்லபடியா

---

**"ஒரு மணி நேரத்திற்கு முன் என்னிடம் பரிசு வாங்கிக்கொண்டு போன புலவரை எங்கிருந்தாலும் தேடிப் பிடித்து வாரும் தளபதியாரே!"**

**"ஏன் அரசே?"**

**"அவர் பாடிப் பரிசு பெற்ற பாடல் கலிங்கத்துப்பரணியில் வருதுங்கிற விஷயம் இப்பத்தான் நினைவுக்கு வந்தது."**

**- உ. ராஜாஜி**

---

இருக்குது... கடைசி கட்டம்... கொஞ்சம் கஷ்டமா இருக்கு. அதான் அண்ணன்கிட்ட நீங்க சொல்லி..." பவானி முடிப்பதற்குள்,

"ஐயோ... வேண்டாம் சாமி... ஏற்கெனவே அவரைப் பிரிச்சு கூட்டிக்கிட்டு வந்தேன்னு பேரு... அண்ணனும் தங்கையும் பேசிக்குங்க... முதல்லே இந்தக் காப்பியைக் குடிங்க..." நழுவிக் கொண்டே காப்பி போடத் தயாரானாள். அண்ணி சப்தமாகப் பேசியது அண்ணனுக்கு ஓர் எச்சரிக்கையாகக் கூட இருக்கும்.

பவானி வெளியில் வந்தாள். அண்ணன் ஈஸிசேரில் சாய்ந்தபடி உட்கார்ந்திருந்தார். "என்ன விஷயம் பவானி...?" கேட்டார்.

"ஒன்றுமில்லையே! உங்களுக்குக் கஷ்டம் தரக் கூடாதுன்னுதான் நினைச்சேன்" பவானி தயங்கினாள்.

"பரவாயில்லை... சொல்லும்மா."

இடையில் அண்ணி காப்பியை வைத்து விட்டு, வாசலுக்குச் சென்று 'டேய்... சுரேஷ்' என்று கத்த ஆரம்பித்தாள்.

"ஆமாண்ணே! கொஞ்சம் பணம் வேணும்... அப்பாகூட ஏதோ கொஞ்சம் புரட்டிக் கொடுத்

தாரு... உங்களாலே முடிஞ்சது... எப்படியும் திருப்பிக் கொடுத்திடுவாரு..." சங்கோஜத்தில் நெளிந்தாள்.

பதில் சொல்லாமல் அண்ணன் மேலே பார்த்துக் கொண்டிருந்தார்.

"பார்த்தியா... எப்படி இருக்கு வீடு?" அண்ணன் கட்டிய வீட்டைப் பார்த்து அதிசயித்தாள் பவானி.

"இருண்ணே. அப்பாகிட்ட காண்பிக்கறேன்" குதித்தோடினாள். அப்பா அம்மாவை அழைத்துக் காண்பித்தாள்.

"பரவாயில்லையே... பெரிய இன்ஜினியரா வந்தாலும் வருவேடா..." அப்பா புகழ்ந்தார்.

"வீட்டுக்கு என்ன பேர் வைக்கப் போறே?" அம்மா கேட்க,

"வேறே என்ன பேரு? 'பவானி இல்லம்'னு வைக்கப் போறேன்."

"டேய்... நாளைக்கு பவானி பெரிய பொண்ணானதும் நீதான்டா அவகூட இருந்து



ஒரு நல்ல வீடு கட்டித் தரணும். என்ன?"

அப்பா விளையாட்டாக கேட்டதும்,

"ஒரு வீடு என்னப்பா...? தோட்டம் துரவோட நாலைஞ்சு பங்களா வாங்கித் தருவேன்" அண்ணனும் சொன்னான். பவானிக்குச் சந்தோஷமாக இருந்தது... அண்ணனை மணல் கையோடு சேர்த்துக் கட்டிக் கொண்டாள்.

"பவானி...! அண்ணன் மெதுவாகக் கூப்பிட்டார்... பிறகு கொஞ்சம் தயங்கினார்.

"பரவாயில்லை, அண்ணே! சொல்லுங்க... நீங்க தராட்டாக்கூட உங்களைத் தப்பாவா நினைக்கப் போறேன்..!"

"அதுக்கில்லை பவானி... இப்ப நான் இருக்கிற வீட்டுக்கே மாசம் நாலாயிரம் லோன் கட்டறேன். சேவிங்ஸ் எல்லாம் எடுத்தாச்சு... ஆபீஸ்ல ஒரு லோன் பாக்கி இல்லை. நகைல முக்கால்வாசி அடமானத்துலே இருக்கு. சம்பளம் பத்தாயிரம் பேரு... ஆனா வரவுக்கும் செலவுக்கும் கரெக்டா இருக்கு... மாப்பிள்ளைக்கிட்டே சொல்லு... ரொம்ப அவசியம்னா, யாராவது தெரிஞ்சவங்ககிட்டே குறைச்ச வட்டிக்கு ஏற்பாடு பண்றேன். இதைச் சொல்றதுக்கு வெட்கமாகத்தான் இருக்கு... ஆனா நான் வேறென்ன செய்ய முடியும்?" அண்ணனின் கண்கள் கலங்கியிருந்தன.

பவானி யோசித்தாள். அண்ணன் நினைத்தால், எப்பாடு பட்டாவது ஏதாவது கொஞ்சம் பணமாவது ஏற்பாடு பண்ண முடியும்... ஆனால் அண்ணன், இப்போது கணவன் மற்றும் தந்தை என்ற பொறுப்புகளுக்குச் சொந்தக்காரன். அவர் நிலைமை எப்படியோ..! பவானிக்குப் புரிந்தது... இது விளையாட்டுப் பருவமல்ல... உலகின் யதார்த்தங்களுக்கு அடிமையாகி, நினைத்ததைப் பேச முடியாமல் போலி வாழ்க்கை வாழும் பருவம்.

"பரவாயில்லை... நீங்க வருத்தப்படாதீங்க... அவரு எப்படியும் சமாளிச்சுடுவாரு..."

"இல்லை பவானி... மாப்பிள்ளைக்கு வருத்தமா இருக்கும். கூடப் பிறந்தவன்னு பேரு..! இது மாதிரி நேரத்துல கூட உதவி செய்யலைன்னா என்ன உறவு...? என்ன புண்ணியம்...?"

"அப்படி வருத்தப்பட்டா படட்டும்! உங்ககிட்டே இருந்தா நான் கேக்கற வரைக்கும் விட்டு வைப்பீங்களா...? காலப்போக்குலே எல்லாம் சரியாயிடும்... சரி... சுரேஷ் நல்லாப் படிக்கிறானா?"

பவானி பேச்சை மாற்றினாள். அண்ணன் பேசாதிருந்தார். அண்ணி முகம் மலர்ந்திருந்தது... பேசியவற்றைக் கேட்டிருப்பாள்...

"வாங்க... சாப்பிடலாம்." கூப்பிட்டாள்.

"இல்லை அண்ணி. அவர் காத்துக்கிட்டு இருப்பாரு... நான் கிளம்பறேன்... அப்புறம் இருட்டிடும். முடிஞ்சா நடுவுலே ஒரு தடவை வந்து வீட்டைப் பாத்துட்டுப் போங்க அண்ணி..."

"பரவாயில்லை. முதல்லே முடிங்க.. கிரஹப் பிரவேசத்துலே ஜமாய்க்கலாம்" அண்ணி சொல்லி விட்டுச் சிரித்தாள்.

"அப்ப வர்றேண்ணே!" வாசலுக்கு வந்தாள் பவானி. குழந்தையை சுரேஷிடமிருந்து வாங்கிக் கொண்டாள்.

"டேய் சுரேஷ்... போய் பஸ் ஏத்திட்டு வா!" அண்ணி சொன்னாள்.

"வேணாம் சுரேஷ்... நீ போய்ப் படி... பஸ் ஸ்டாப் கிட்டேதான் இருக்கு."

பவானி நடக்க ஆரம்பித்தாள். அண்ணன் முதல் மாசம் சம்பளம் வாங்கியவுடன் அப்பா அம்மா கையில் கொடுக்காமல் தன் கையில் கொடுத்தது ஞாபகத்துக்கு வந்தது. பாவம் அண்ணன்! அவரிடம் பணம் கேட்டிருக்கக் கூடாது. பவானிக்கு இலேசாக அழுகை வந்தது... காலம் செய்யும் மாற்றங்களை ஏற்க முடியாமல் வந்த அழுகை. கண்டிப்பாக வேறு காரணம் இல்லை! ○

● சின்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை

? 'பதற்றம் நிலவும் இந்தச் சூழ்நிலையில் அக்னி சோதனையை இந்தியா நடத்தியது சரியல்ல' என்று பாகிஸ்தான் குற்றம் சாட்டியிருப்பது நியாயமா?

! பதற்றத்தை ஏற்படுத்தியதே பாகிஸ்தான்தானே. அதனால் நியாயம் நம் தரப்பில்தான் உள்ளது.

● சௌம்யா நாகராஜன், குருசாமிபாளையம்

? தேசிய கீதத்துக்கு எழுந்து நிற்காமல் அமர்ந்திருந்த பீஹார் முதல்வர் ராப்ரி தேவி, லாலுபிரசாத் யாதவ் பற்றி...?

! ஏற்கெனவே உள்ள வழக்குகளுக்கு மேல் இன்னும் ஒரு வழக்கு போடலாம். வேறென்ன செய்ய..! எதன் மீதோ மழை பெய்த கதைதான்.


• டபுள் குற்றம்!

● விக்கி விக்னேஷ், மயிலாடுதுறை

? ஆண்டிப்பட்டியில் எதிர்க்கட்சிகள் ஒன்றிணைந்து செயல்பட முடியாததற்கு என்ன காரணம் என்று நினைக்கிறீர்கள்?

! 'ஜெ'யின் அதிர்ஷ்டம்!

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

? குடியரசு தினத்தை முன்னிட்டு பிரதமர் வாஜ்பாய்க்கு பாக் அதிபர் முஷரஃப் எழுதிய வாழ்த்து கடிதம்...?

! தொழுத கையுள்ளும் படையொடுங்கும்.

● ஆர். இரவிகுலரகுவர்மன், கபிஸ்தலம்

? டி.வி.யினால் சினிமா பாதிக்கப்படுகிறது என்பது உண்மையா..?

! சினிமா நிகழ்ச்சிகளை மட்டுமே நம்பியிருக்கும் தொலைக்காட்சிகள், கொஞ்சம் தொனியை மாற்றிக் கொண்டால் இந்தப் பிரச்னைக்கே இடமில்லை. ஓடுகிற வண்டி ஓட ஒற்றுமையாய் இரண்டு மாடும் இருப்பதே சின்னதிரை, பெரிய திரை இரண்டுக்கும் நல்லது.

● ஜி. குப்புசாமி, கள்ளக்குறிச்சி

? இலட்சிய நடிகர் எஸ்.எஸ்.ஆர். பசும்பொன் பார்வர்டு பிளாக் கட்சி என்ற அமைப்பைத் துவங்கியுள்ளாரே...?

! சரியான காமெடி நடிகராக மாறிவிட்டிருக்கிறார்.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

? 'ஆச்சி'க்கு பத்மஸ்ரீ விருது அளிப்பது குறித்து...?

! 'பெண் சிவாஜி' என்று அழைக்கப்படும் மனோரமா, சினிமாவில் பல


• நவரச முகம்!


• ஊக்கமா? ஊழலா?


• ஆச்சிஸ்ரீ!

தலைமுறை கலைஞர்களைச் சந்தித்துவிட்ட சாதனையாளர் பத்மஸ்ரீ விருதுக்குப் பெருமை!

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சாவூர்

? 'அதிக வாக்குகளைப் பெற்றுத் தரும் ஒன்றியம் மற்றும் வாக்குச்சாவடி பொறுப்பாளர்களுக்கு ஜெயலலிதா கையால் பரிசு வழங்கப்படும்' என்கிறாரே எம்.பி.தினகரன்?

! வாக்காளர்களுக்குப் பரிசுக் கூப்பன், அதிர்ஷ்ட குலுக்கல், தங்கம் பரிசு என்றெல்லாம் அறிவித்தாலும் ஆச்சரியமில்லை. நாம் வாழ்வது இந்தியாவில்தானே! தேர்தல் கமிஷன் கண்ணை மூடிக் கொள்ளும்!

❐ ரூ.100 பரிசு பெறுபவர் :
டி.எஸ்.டி. ராயன்,
197, உடையார் தெரு,
நல்லத்துக்குடி,
மயிலாடுதுறை - 609 001

✱ ரூ.50 பரிசு பெறுபவர் :
ஷ்யாமளா சுவாமிநாதன்,
42/902 (5)
செப்பில் தெரு, ஸ்ரீவராகம்,
வல்லக்கடவு அஞ்சல்,
திருவனந்தபுரம் - 695 008.

● கொ. மூர்த்தி, குட்டலாடம்பட்டி

? தங்களுக்குக் கிடைக்கும் விருது, பட்டங்களைச் சிலர் புறக்கணிப்பது குறித்து...?

! அதுவாவது பரவாயில்லை. 'பத்ம பூஷண் விருது வேண்டாம்; பாரத ரத்னா விருதுக்குக் குறைந்து எதையும் வாங்கிக் கொள்ள மாட்டேன்' என்று நடனக் கலைஞர் சித்தாரா தேவி சொல்வதுதான் ரொம்ப அநாகரிகம்.

# உணர்ந்து செயல்படுவாரா ரஜினி...?


• சுயசிந்தனை ஸ்டார்!


• வஞ்சக வாழ்த்து!


• புதிய 'டிராக்'!

● டி.எஸ்.டி. ராயன், மயிலாடுதுறை ❐

? 'காஷ்மீர் எங்கள் ரத்தத்தோடு கலந்திருக்கிறது' என்று முஷரஃப் டி.வி.யில் முழங்குவதும் நமது நட்வர் சிங் 'எங்கள் எலும்புக்குள் இருக்கிறது காஷ்மீர்!' என்று பதிலடி கொடுப்பதும்... எப்படி?

! யாரும் காஷ்மீரிகளின் உயிரோடு எங்கள் உணர்வு, கலந்திருக்கிறது என்று ஒப்புக் கொள்ளத் தயாராயில்லை. அதுதான் பிரச்னை!

● சின்னை எஸ்.ராஜமழை, சின்னமனூர்

? நடிகர் சொக்கலிங்க பாகவதர் மறைவு பற்றி..?

! பாலுமகேந்திராவின் காமெரா ரசித்த 90 வயது முகம்! 'வீடு' படத்தில் தேசிய விருது பெற்ற சோக நடிப்பாகட்டும் 'சதி லீலாவதி'யில் குஷியான நடிப்பாகட்டும்... இரண்டுமே சொக்க வைக்கும்.

● ஷ்யாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம் ✱

? அரசியல் பிரவேசத்தின் அவசியத்தை உணர்ந்து செயல்படுவாரா ரஜினி..?

! வரவேண்டும் என்று நினைத்தால் வராமலிருக்க மாட்டார், தயங்க மாட்டார்; பிறர் வற்புறுத்தலுக்காக வரவும் மாட்டார். அப்படி வருவது புத்திசாலித்தனமும் இல்லை. இன்று வரவேற்பவர்களே நாளை, காலைவாரி விடுவார்கள்! அது ரஜினிக்கும் தெரியும்.

● ஆர்.பிரகாசம், மருதாடு

? ஆண்டிப்பட்டி தேர்தலை நாடே எதிர்நோக்குகிறது. ரிசல்ட் எப்படி இருக்கும்?

! பாஸிடிவ்வி நெகடிவ்!

**நீங்கள் கேட்டவை - தராசு**

# இனி பிள்ளை வரம் வேண்டி எங்கும் அலைய வேண்டாம்

# ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

மருத்துவம்

அந்தக் காலத்தில் அங்கொருவர் இங்கொருவருக்குக் குழந்தை இருக்காது. ஆனால், இப்போது குழந்தையில்லாத தம்பதிகள் பெருகி விட்டார்கள். பத்தில் ஒரு தம்பதிக்குக் குழந்தையில்லை என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

ஏன் குழந்தையில்லை?

ஆண் அல்லது பெண்ணிடம் அல்லது இருவரிடமே குறை இருக்கக்கூடும். இருந்தாலும், பெரும்பாலும் ஆண்களிடந்தான் குறை இருக்கிறது. அதனால்தான் ''ஆண் மலடே அல்லாமல் பெண் மலடு ஏதப்பா'' என்று சித்தர்கள் பாடினார்கள்.

என்ன காரணம்?

ஆண்களிடம் என்ன குறை?

உயிரணு (விந்து) குறைந்து விட்டது.



• உலகப் புகழ்பெற்ற மருத்துவத் திலகம் டாக்டர் A. அர்ஜுனாவுடன் திருவண்ணாமலை மாவட்டத்தில், உயிரணு உற்பத்தியாகி குழந்தை பெற்ற கிருஷ்ணன் - ஜெகதாம்பாள் தம்பதியர்.

குறைந்தது ஏன்?

இப்படிக் குறைந்து விட்டது ஏன்?

அம்மை, புட்டாலம்மை, மஞ்சள் காமாலை, டைபாய்டு, பொன்னுக்கு வீங்கி போன்ற சில நோய்கள் உயிரணுக்களின் வளர்ச்சியைக் குறைக்கின்றன.

ஆண்கள் இறுக்கமாக ஜட்டி அணிவதாலும், உயிரணுக்கள் குறையும்.

அசுத்தமான சுற்றுப்புறச் சூழ்நிலையும் ஒரு காரணம்.

வெப்பம் நிறைந்த இடத்தில் வேலை பார்த்தாலும் உயிரணுக்கள் குறையும்.

கெட்ட பழக்க வழக்கங்களும் ஒரு காரணம். புகை பிடிப்பது, மது குடிப்பது, வயது முதிர்ந்த பெண்ணுடன் உறவு கொள்ளுவது பழக்கத்தாலும் ஆண்மை குறையும்.

முக்கூட்டு மருந்து

குழந்தை இல்லாதவர்கள பெருகப் பெருக, குழந்தை பெற்றுக் கொள்ள மருத்துவ முறைகளும் பெருகி விட்டன. சித்தர் (தமிழ்), ஆயுர்வேதம் (வடவர்), யுனானி (இஸ்லாமியர்), அலோபதி (ஆங்கிலம்) ஓமியோபதி (ஜெர்மனி) என்று எல்லா முறையிலும் வைத்தியம் செய்யப்படுகிறது.

சென்னை வடபழனியைச் சேர்ந்த A. அர்ஜுனா, டாக்டர் ஆண்டாள் அர்ஜுனா தம்பதிகள் இதில் புதிய முறை ஒன்றைக் கையாளுகிறார்கள். இதற்கு ''முக்கூட்டு மருத்துவம்'' என்று பெயரிட்டிருக்கிறார்கள். சித்தர், ஆயுர்வேதம், ஓமியோபதி ஆகிய மூன்று முறையையும் கலந்து, இவர்கள வைத்தியம் செய்கிறார்கள். இதில் இவர்களுக்கு 42 ஆண்டு கால அனுபவம் உண்டு.

இவர்கள் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் ஆஸ்பத்திரி நடத்தி வருகிறார்கள். திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னையில் வடபழனி 100 அடி சாலையிலும் வெற்றிகரமாக சிகிச்சை நிலையங்கள் நடத்தி வருகிறார்கள்.

கணவன் - மனைவி இருவருமே மருத்துவர்களாக இருப்பதால், தம்பதிகளை இவர்களே சோதித்து உரிய மருந்து கொடுக்க முடிகிறது. சென்னையிலும், வந்தவாசியிலும் இவர்களின் மருத்துவமனை இருக்கிறது.

''முக்கூட்டு மருத்துவம்'' எந்த அளவுக்கு வெற்றி தருகிறது? டாக்டர் அர்ஜுனா சொன்னார் -

உயிரணு பெருகியது!

''எங்கள் முக்கூட்டு வைத்தியம் நல்ல பலன் தருகிறது. பலரும் எங்களிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டு, குழந்தை பெற்றிருக்கிறார்கள்.

கோடம்பாக்கத்தைச் சேர்ந்த ஒருவருக்கு 70 இலட்சம் உயிரணு இருந்தது. எங்களிடம் வைத்தியம் செய்து கொண்டபின், அது இரண்டு மடங்காகப் பெருகியது. அதன்பின் தந்தையானார்.

சென்னை புதுப்பேட்டையைச் சேர்ந்த ஒரு முஸ்லிம் தம்பதிகளுக்கு எங்கள் வைத்தியத்துக்குப் பின், இரட்டைக் குழந்தை பிறந்தது.

வெளி மாநிலங்களைச் சேர்ந்தவர்களும் எங்களிடம் வருகிறார்கள். பாலக்காட்டைச் சேர்ந்த

ஒருவரின் உயிரணுக்களை இரட்டிப்பு ஆக்கினோம். மும்பையைச் சேர்ந்த ஒருவருக்கும் இதே பலன் கிடைத்தது.

பெண்கள்

பெண்களிடம் உள்ள முக்கியக் குறை, கருப்பை ஓவரி வளர்ச்சி இன்மை, முட்டை உற்பத்தியாகாமை, கருக்குழாய் அடைப்பு ஆகியவை.

முக்கூட்டு மருத்துவத்தால் இதைச் சரிசெய்து, குழந்தை பிறக்கச் செய்ய முடியும்.

கணவன் அல்லது மனைவி அல்லது இருவரிடமும் குறை இருக்கக்கூடும். இருவருமாக வந்து, பரிசோதனை செய்து கொண்டு முக்கூட்டு மருத்துவம் செய்து கொண்டால், குழந்தை பெற வாய்ப்பு உண்டு'' என்றார், டாக்டர் அர்ஜுனா!

இது முக்கூட்டு மருத்துவத்தில் ஒரு சாதனையாகும்.

இப்படி பல தம்பதியர் முக்கூட்டு மருத்துவத்தால் பலன் அடைந்திருக்கிறார்கள்.

திருவாரூரைச் சேர்ந்த அறிவழகனுக்கு அறவே உயிரணு இல்லை. அவர் 7 மாதம் தொடர்ந்து முக்கூட்டு மருந்து சாப்பிட்டு உயிரணு உற்பத்தி ஆகியுள்ளது.

உயிரணு குறைவாக இருந்த கேரள மாநிலம் பாலக்காட்டைச் சேர்ந்த சேதுமாதவனுக்கு 16.6.2000ல் கவுண்ட் 20 மில்லியன், மொட்டிலிட்டி 50% இருந்தது. 13.7.2001ல் கவுண்ட் 60 மில்லியன், மொட்டிலிட்டி 50% முன்னேற்றம் கண்டது.

மகாராஷ்டிர மாநிலம் நியூபாம்பே வாஷி பகுதியைச் சேர்ந்த ஜெயராமனுக்கு உயிரணு குறைவாக இருந்தது. 28.12.2000ல் இருந்த கவுண்ட் 45 மில்லியன், மொட்டிலிட்டி 50% ஒரே மாதத்திற்குள் 26.1.2001ல் கவுண்ட் 92 மில்லியன், மொட்டிலிட்டி30% என்று உயர்ந்தது.

திருமணமாகி நான்கு வருடங்களாக குழந்தை இல்லாதிருந்த சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா-அலமேலு தம்பதியருக்கு முக்கூட்டு மருத்துவ சிகிச்சையளித்ததில் அவர்களுக்கு 6.3.2001ல் ஆண் குழந்தை பிறந்துள்ளது.

சென்னை சாந்தோமைச் சேர்ந்த சுப்புலட்சுமி என்ற ஸ்டாஃப் நர்ஸுக்கு முக்கூட்டு சிகிச்சையினால் சமீபத்தில் குழந்தை பிறந்துள்ளது.

சென்னை வடபழனி கங்கையம்மன் கோவில் தெருவைச் சேர்ந்த எங்களிடம் சிகிச்சை பெற்ற ஒரு முஸ்லீம் பெண்மணி தற்போது குழந்தை பெற்றுள்ளார்.

மதுரையில் லேபர் ஆபீஸர் ஒருவருக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்தது. எங்களிடம் சிகிச்சை பெற்றதில் ஜூன் மாதம் 2000ல் பெண் குழந்தை பிறந்துள்ளது.

மதுரையில் 65 வயதுள்ள ஓய்வு பெற்ற போலீஸ் டி.எஸ்.டி. ஒருவருக்கு எங்களது சிகிச்சையால் பெண் குழந்தை பிறக்கச் செய்துள்ளோம்.

பெங்களூர் ஜெயநகரைச் சேர்ந்த வள்ளி - சேகர் தம்பதியருக்கு எங்கள் சிகிச்சை மூலம் அண்மையில் பெண் குழந்தை பிறந்துள்ளது.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல் நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு.

ஒரு ஜாதி மருந்துகளால் உருவாகும் கரு, வேறொரு ஜாதி மருந்தினால் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. அதனால் பிரசவம் ஆகும் வரை உஷாராக இருக்க வேண்டும். அப்போதுதான் சுகப் பிரசவம் ஏற்படும் என்றார்'' **டாக்டர் அர்ஜுனா.** சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திர பாக்கியம் அடைய **டாக்டர் A. அர்ஜுனா,** அவரது மனைவி **டாக்டர். V.A. ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

யமுனா நதி சற்றுத் தூரத்தில் மினுங்கித் தெரிந்தது.

அருணாவும் அம்பிகாவும் சிரித்துக் கொண்டே வெண் பளிங்குத் தரை மேல் ஓடுவது பின்னணியில் கேட்டது. தாஜ்மஹாலின் பளிங்கு வெண்மை. சுற்றிலும் வாழ்வின் வண்ணம்.

காற்றில் ஊதிப் புடைக்கும் வண்ணப் பருத்திப் புடைவைகள். நழுவி ஓடப் பார்க்கும் துப்பட்டாக்கள். ஆண்களின் வண்ணத் தலைப்பாகைகள். பளிங்குச் சுவர்களில் உறைந்திருக்கும் மொகலாய மலர்ச் சங்கிலிகள், நடமாடும் கொலுசுப் பாதங்களைத் தொடும் பாவாடை ஓரங்களிலும் பூக்கும் அதிசயம். புகைப்படத்துக்காகக் கூடி நிற்கும் குடும்பங்கள். தங்கள் தனி உலகத்துள் உறைந்திருக்கும் காதலர்கள், தேனிலவுத் தம்பதிகள். இந்தியா என்னும் மாபெரும் அனுபவத்தை ஒரே வாரத்தில், ஒரே மாதத்தில் உணரத் துடிக்கும் அயல்நாட்டுப் பயணிகள். தொடரும் மனித உயிரோட்டத்தின் ஒரு பகுதியாய்த் தாஜ்மஹால்.

விதுவால் இன்னும் நம்ப முடியவில்லை.



காஞ்சனா தாமோதரன்

இத்தனை வருடங்கள் கழித்து டெல்லிக்கு வந்திருப்பதை. தாஜ்மகால் பீடத்துத் தளத்தில் உட்கார்ந்து யமுனையைப் பார்த்துக் கொண்டிருப்பதை. அம்மாவும் பக்கத்தில் இருப்பதை. காற்று திருட முயலும் கைத்தறித் துப்பட்டாவைத் தோளைச் சுற்றி இறுக்கிக் கொண்டாள் விது.

டெல்லி மாறியிருந்தது. மாறாமலும் இருந்தது. காவல்துறையினருக்கும் மேலாக நிற்கும் இராணுவ வீரர் கூட்டங்கள் புதிது. நாடாளுமன்றத் தாக்குதலின் எதிரொலி. விமான நிலையத்தின் கண்ணைப் பறிக்கும் விளக்கொளியில், வெள்ளைச் சீருடை அணிந்த சுங்க இலாகா அதிகாரிகள் வழக்கம் போல். சுங்கப் பரிசோதனை வெறும் சடங்குதான். எல்லாமும் இங்கேயே கிடைக்கும் போது, யு.எஸ். பயணிகள் அப்படிப் புதிதாய் ஒன்றும் கொண்டு வந்து விடப் போவதில்லை.

எல்லாம் முடிந்து வெளியே வரும்போது அதிகாலை இரண்டு மணி. உறவுகளை வரவேற்கக் காத்து நிற்கும் கூட்டம். அதை வைத்துப் பீடி பிடித்துக் கொண்டு, டாக்ஸி வரிசையில் தங்கள் எண் அழைக்கப்படுவதற்காகக் காத்திருக்கும் டாக்ஸி டிரைவர்கள்.

சப்தங்கள். மனித



19

வாழ்வின் அடையாளமாய் நிறையும் சப்தங்கள். யு.எஸ்.ஸின் பெருநகரங்களில் கூட அவ்வளவாகக் கேட்காத சப்தங்கள்.

அம்மாவும் ராம்சந்த்தும் கதவுகளுக்கு வெளியே நின்றிருந்தார்கள். 'விது பேட்டி...'' ராம்சந்த்தின் குரல் நெகிழ்ந்தது. அம்மா விதுவை இறுக அணைத்துக் கொண்டாள். சரிகையில்லாத மெல்லிய பட்டுப் புடைவையும் காஷ்மீர் சால்வையும் சிறு பொட்டுமாக, முதல் பார்வைக்கு அம்மா பளிச்சென்றுதான் தெரிந்தாள். ஆனால், அம்மாவின் உடல் குறுகி, தோள்கள் வளைந்து, தலை முன்னால் சரிந்திருக்கிறதோ. அம்மாவின் வழக்கமான ஓ-டி-கொலோன், யார்ட்லி லேவண்டருடன் புதிதாய்ச் சேர்ந்த முதுமையின் மணம். விதுவினுள் ஏதோ அதிர்ந்தது. காலம் நிற்கவில்லை.

வண்டியில் சரிந்த பெட்டிகளை நிமிர்த்தும் சாக்கில் தள்ளிப் போய் அம்மாவை மீண்டும் ரகசியமாய்ப் பார்த்தாள். தயக்கத்துடன் விலகி நின்ற அருணாவையும் அம்பிகாவையும் இழுத்து அணைத்துக் கொள்ளும் இந்த அம்மா. அன்பான தாயாய், நெகிழ்ந்த பாட்டியாய்த் தெரியும் இந்த அம்மா. 'சிறு வயதிலேயே வாய் மூடிய மௌனியாகி, நான் விலகிப் போனது இந்த அம்மாவிடமிருந்தா? இத்தனை வருடமாய் ஊருக்கே வராமல் யு.எஸ்ஸில் ஒளிந்து கிடந்தது இந்தப் பெண்ணிடமிருந்தா? ஏன்?'

தெருக்கள் சுருங்கித் தெரிந்தன. டெல்லி வெயிலும், குளிரும், மழையும் அம்மாவிடம் தோற்றுப் போயிருக்க வேண்டும் – இந்திய, ஜப்பானிய அம்சங்கள் கலந்து அவள் அலங்கரித்த வீட்டின் எளிமையான அமைதிச் சூழல் மாறாமல் அப்படியே இருந்தது. அப்பாவின் மாலையிட்ட படம் புதிது.

வெற்றுப் பாதங்களின் கீழே பட்டுப் பாய்க் கம்பளங்களின் சொரசொரப்பு. சுவர்களில் நிறைந்திருக்கும் மதுபானி ஓவியங்கள். அங்கங்கே ரசனையுடன் தெளித்திருக்கும் கைவினைப் பொருட்கள். புத்தகங்கள். திறந்த ஜன்னல் வழியே நுழைந்து, குளித்த ஈரத் தலையை ஆற்றும் இளங்காலைக் காற்று. சாப்பாட்டு மேசையின் நார்ப்பின்னல் நாற்காலியில் உட்கார்ந்து, அம்மாவின் சமையலை ருசிக்கும் போதுதான் நம் நாட்டில் இருக்கிறோம் என்பது முழுதாய் உறைத்தது.

"என்ன நினைப்போ?'' அம்மா மெல்லச் சிரித்தாள். அருணாவும் அம்பிகாவும் சுவரில் சாய்ந்தபடி எதிரே தெரியும் காட்சிகளை விமரிசனம் செய்வது கேட்டது. யமுனை நதி. மரங்களின் பின்னே தெரியும் கோட்டைச் சுவர்கள்....

அம்மாவைப் பார்த்துப் புன்னகைத்தாள் விது. ''நம்ம நாட்டிலே இருக்கேன்னு நம்பவே முடியலேம்மா.''

''தாஜ் முன்னாலே உட்கார்ந்துக்கிட்டு அப்படிச் சொல்லலாமா, விது?'' அம்மா மெல்லச் சிரித்தாள்.

''இப்ப எதுவும் எழுதியிருக்கியாம்மா?''

''டைம்ஸ் ஆஃப் இந்தியா, ஹிந்துஸ்தான் டைம்ஸ் இரண்டிலேயுமே எழுதினேன். காலரி எக்ஸிபிஷனில் என்னோட 'வெளி--ஸ்பேஸ்' ஓவியத்துக்கு விருது...''

ஒன்றுமே இல்லாத வெறும் வெளி என்பது மனித அறிவையும் மனத்தையும் இயல்பாகவே ஈர்ப்பது. ஓவியம், சிற்பம் மாதிரி கலைகள் எல்லாமே மனிதர்கள் வெளியைப் புரிந்து கொள்ளும் முயற்சிகள் தாம். எங்கேயோ படித்த ஞாபகம். ''உன் 'பெயிண்ட்டிங்'கை நான் பார்க்கலாமா, அம்மா?''

அம்மா முகத்தில் ஒளி. ''நான் வரைஞ்ச சில படங்கள் வீட்டு ஸ்டூடியோவில் இருக்கு. விமர்சனம் பண்ணுவியா, விது?''

விது தலையசைத்தாள். அம்மாவிடம் பேச எவ்வளவோ இருக்கிறதாய்ப் பறந்து வந்தாயிற்று. என்ன பேசுவது. எங்கே ஆரம்பிப்பது. ''அம்மா, யு.எஸ்ஸுக்கு என்னை நீ

---

**''அந்த வெள்ளைக்காரர் கும்பிடற கடவுள் பெயர் 'ஓ'ன்னு எப்படிச் சொல்றே?''**

**''ஓ மை காட்ன்னு சொன்னாரே!''**

**– ஜோசப் காமராஜ்**



அனுப்பியிருக்கக் கூடாது."

"உன் பிரச்னைகள் எல்லாத்துக்கும் அதுதான் காரணம்னு நினைக்கிறியா, விதும்மா?"

"அதுவும் ஒரு காரணம்."

"சொல்லு, விது."

"அம்மா, நீ பெரிய பணக்காரி இல்லை. இருந்தும், உன்னோட டெல்லி 'லைஃப் ஸ்டைலில்' ஒரு பங்கைக் கூட யு.எஸ்.ஸில் என்னால் அனுபவிக்க முடியாது. இதுக்கே அங்கே ரொம்பப் பெரிய பணம் வேணும். பெரிய பணம் கொஞ்சம். படு ஏழ்மை கொஞ்சம். நிறைய நிறைய மத்திய வர்க்கம்-மொத்தத்திலே, யு.எஸ். ஒரு 'மிடில் க்ளாஸ்' நாடாத்தான் எனக்குத் தெரியுது. நீ என்னை அந்த வாழ்க்கைக்கு ஏத்த மாதிரி வளர்த்தியா? பதினேழு வருஷத்துக்கு முன்னால், ஸ்டேட்ஸ் மாப்பிள்ளை, ஸ்டேட்ஸ் மாப்பிள்ளை'ன்னு தேடும் போது இதை நினைச்சுப் பார்த்தியா?"

"இது பணம் பற்றியதா, விது?"

"இல்லை, அம்மா. ஒரு வாழ்க்கை முறை பற்றியது."

"சமையல்காரங்க, ஆயாக்கள், டிரைவர்கள், எடுபிடி ஆட்கள்_இது மட்டும்தான் வாழ்க்கை முறையா, விது?"

"இல்லை. ஆனா, ஒரு முக்கியமான பங்கு_எனக்குப் பழகியது. ரமேஷோட வேலையினால் வரக் கூடியதுக்கும், நான் எதிர்பார்த்ததுக்கும் நிறைய வித்தியாசம்."

"இதனால், ரமேஷோட உழைப்பையோ, பி.ஹெச்டி. படிப்பையோ மட்டம் தட்டியிருக்கியா? அவரைக் குறைச்சுப் பேசியிருக்கியா?"

"ம்ம்ம்." 'வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம்' என்ற உண்மையைச் சொல்ல முடியவில்லை. கேள்விகள் கேட்டுப் பதிலைத் தானாய் வரவழைக்கும் அம்மா விளையாட்டு இது. சரி, ஆடலாம்.

"அங்கே போய் எம்.பி.ஏ. படிச்சியே. உன் வேலை என்ன ஆச்சு?"

"சரிப்பட்டு வரலை."

"ஏன்?"

"அந்த வேலைகளுக்கு என்னைவிடக் குறைஞ்ச திறமை உள்ளவங்களே போதும். என் சூப்பர்வைசர்களுக்கும் எனக்கும் ஒத்து வரலை."

"பொதுவா கீழ்ப்படியில் தொடங்கி உழைச்சால்தான் மேல போக முடியுங்கிறது உனக்குத் தெரியும். இல்லையா, விது?"



**"என்னங்க, நம்ம ராப் பிச்சைக்காரன் அரசியலுக்கு வருவான் போலிருக்கு!"**

**"எப்படிச் சொல்றே?"**

**"'பிச்சை போடுங்க தாயி'ன்னு கேட்குறதுக்குப் பதில் 'நிதி நிலைமை சரியில்லை தாயி'ன்னு சொல்றான்!"**

**— ஜோசப் காமராஜ்**

---

"தெரிஞ்சதை ஒத்துக்கிறது அவ்வளவு ஈசியில்லைம்மா. அப்புறம், அருணாவையும் அம்பிகாவையும் கவனிக்கிறது, வேலையைக் கவனிக்கிறது இரண்டையும் என்னாலே ஒழுங்காச் செய்ய முடியலை. ரமேஷ் உதவி இருந்தும்."

"வேலைகளை விட்டப்புறம் அருணாவையும் அம்பிகாவையும் கவனிக்க முடிஞ்சுதா?"

"இல்லை. மனசு சரியா இல்லை. என் தோல்வி..."

"தோல்வின்னு எதை வைச்சு சொல்றே?"

"ரமேஷ், ரஞ்சி, ராஜி, மத்த இந்தியன் ஃப்ரெண்ட்ஸ். எதைச் செய்தாலும் நல்லாச் செய்றாங்க. நான்..." குரல் தழுதழுத்தது.

"மத்தவங்களைப் பற்றி நினைக்காமல், நீ என்ன செய்யணும், என்னவா இருக்கணும்னு நீயாவே என்னிக்காவது நிதானமா யோசிச்சிருக்கியா, விதும்மா?" அம்மாவின் குரலில் கனிவு.

விது தொலைவை வெறித்தாள். யமுனையின் மறுகரையில் ஒரு சிதை எரிவது தெரிந்தது. காற்றில் தீப்பிழம்புகள் திசை மாறி மாறி ஆடின. எவ்வளவு முயன்றும், குரலின் கசப்பை அடக்க முடியவில்லை.

"நான் என்ன செய்யணும், என்னவா இருக்கணும்னு நானே யோசிக்கிறதுக்கு நீ என்னிக்காவது விட்டிருக்கியா, அம்மா?"

அம்மாவின் விசாலமான ஸ்டுடியோ அறை, வீட்டு மேல்மாடியில் இருந்தது. சரிந்த கூரையில் பதித்த கண்ணாடி ஜன்னல்களின்



# வசந்தகம்

ஒவ்வொருவருக்குள்ளும்
ஒவ்வொரு மாதிரியாய்
விரிந்து கிடக்கும்
பொது உருவமில்லாத
ஓவியம்.

களிப்பு
வெற்றி
சிரிப்பு
வரவு
ஆகியவற்றை மட்டும்
கலக்கி எழுதப்படும்
கவிதை

மனிதம் செழிக்க
எதிர்பார்ப்புகளைச் செருகி
நம்பிக்கை வார்க்கும்
உயரிய உழவன்.

வீ. விஷ் குமார்

மேல் அசையும் கண்ணாடியாய் மழைநீர். சார்த்தி வைத்திருந்த ஓவியங்களைப் பார்த்துக் கொண்டிருந்தான் விது.

''அருணாவுக்கும் அம்பிகாவுக்கும் சக்குபாயின் கதைநேரம். நான் எட்டிப் பார்த்தப்போ அம்பிகாக் குட்டிக்கு அரைத் தூக்கம்.'' உள்ளே நுழைந்த அம்மாவின் குரல் கேட்டுத் திரும்பினான். ஏலக்காய் ஆவி வரும் தேநீர்க் கோப்பையை விதுவிடம் நீட்டினாள் அம்மா. தரையை ஒட்டின திண்டு மெத்தையில் உட்கார்ந்து கொண்டாள். மழை பார்த்தான். பேசினான்.

"அம்மா உனக்குப் போட்டி. எதிரி. சர்வாதிகாரி. அம்மாவுக்கு உம்மேல மரியாதை கிடையாது. சின்ன வயசிலேருந்து நீ வாய் பேசாமல் பொருமினதுக்குக் காரணம் இதுவா, விது?''

விது ஒற்றைக்கண் ஓவியம் ஒன்றைப் பார்த்துக் கொண்டிருந்தான். பேசவில்லை. வெளிக்கூரை முக்குகளிலிருந்து மழைநீர் கொட்டுவது சின்ன அருவி போல் கேட்டது.

'விது. நீ என்னை விட நல்லா இருக்கணுங்கிறதுதான் எப்பவும் என் ஆசை. எதையும் உன் கையிலேருந்து பிடுங்கிச் செய்றது தொடங்கி, நிறைய விதங்கள்ளே நான் உன் சுயமரியாதை. தன்னம்பிக்கை, நம்ம உறவு எல்லாத்தையும் கெடுத்தேன்னு நீ இப்போ சொல்றே. பிச்சைக்காரங்களைப் பார்க்கத் தாங்காமல், கார்க் கண்ணாடியை ஏத்தி ஒளிகிற மெல்லிசு மனசு உனக்கு. சின்ன வயசுக் காயங்கள்...''

அம்மாவின் குரலில் ஒரு நடுக்கம்.

கொஞ்ச நேரம் கழித்து அம்மாவே தொடர்ந்தாள். ''உன்கிட்டே உட்கார்ந்து பேசி, உன் மௌனத்தை உடைக்கணும்னு நினைப்பேன், விது. ஆனா, திரும்பத் திரும்ப என் கவலைக்குள்ளேயே முங்கிப் போவேன். ஓவியம், எழுத்துன்னு ஆறுதல் தேடி முடங்கினது என் சுயநலம்...''

கவலையா? ஓவியம் பார்க்கிற பாவனையை நிறுத்திவிட்டு, விது அம்மா பக்கம் திரும்பினான்.

'விது, என் கவலையை ஒதுக்கிட்டு உன்னைப் பத்தி நினைக்கிற பக்குவம் வர்றதுக்குள்ளே, உன் மௌனம் இறுகிப் பெரிய சுவரா மாறிப் போச்சு. அந்தச் சுவரை உடைக்கிற சக்தி எனக்கு இல்லை. அது ரமேஷுக்காவது இருக்கணும்னு நான் வேண்டாத கடவுளும் இல்லை. எங்க நிழல் படாத புது இடம். புது உறவு. உனக்குப் புது வாழ்க்கைன்னு அப்போ நம்பினேன்...''

விது அம்மா பக்கத்தில் வந்து உட்கார்ந்து, அவளது இரு கைகளையும் பிடித்துக் கொண்டான்.

'விது, தன் அப்பா-அம்மா சந்தோஷமா இல்லைன்னா அது எப்படியோ குழந்தையின் அடி மனசுக்குத் தெரிஞ்சிடும். உன் அருணாவை மாதிரி. அப்பாவுக்கும் எனக்கும் இடையிலே இருந்த மௌனம் உன்னை அறியாமலேயே உனக்குள்ளே ஊறினதில் ஆச்சரியம் இல்லை. எங்களுக்குள்ளே அப்படி இடைவெளி இருந்ததுன்னு உனக்கு இப்போ வரைக்கும் தெரியாது. அப்படித் தானே?''

'ஆமாம்' என்று விது தலையசைத்தான். அம்மா கதை சொன்னாள். வெளியே தொடர்ந்து மழை கொட்டிக் கொண்டிருந்தது.

(தொடரும்)

"உரிமம், பட்டா, பத்திரம் எதுவுமின்றி உங்கள் ஆரோக்கியத்தைக் குத்தகைக்கு எடுத்துக் கொள்வதில், ஜலதோஷத்துக்கு ஏக சந்தோஷம். 'ஜலதோஷமா? மருந்து சாப்பிட்டால் ஒரு வாரத்தில் போகும். இல்லைன்னா ஏழு நாளாகும்'னு தமாஷ்கூட பண்ணுவாங்க. அந்த அளவுக்கு அடங்காத தொந்தரவு அது"ன்னு சொல்லும் டாக்டர் அல்பனா உத்தூர், ஜலதோஷம் பற்றி மேலும் சொல்கிறார்.

சாதாரண ஜலதோஷம் என்பது சுவாச மேற்பகுதி மற்றும் மூக்கு, தொண்டையைப் பாதிக்கும், பரவக்கூடிய வைரஸ் தொற்று. சாதாரண ஜலதோஷத்தை ஏற்படுத்தும் வைரஸ்கள் பொதுவாக பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளையே அதிகம் பாதிக்கிறது. அவர்கள் வளரும்போது, இத்தகைய ஜலதோஷப் பாதிப்புகள் குறைந்து விடுகின்றன. சராசரியாக ஒரு குழந்தை, ஆண்டுக்கு எட்டு முறை ஜலதோஷத்தால் பாதிக்கப்படுகிறது. ஏனெனில் நூற்றுக் கணக்கான வித்தியாசமான வைரஸ்கள் உள்ளன. மேலும் சின்னஞ்சிறு குழந்தைகள் முதன் முறையாக ஒருவருடன் மற்றவர் சேர்ந்து பழகும்போது தொற்று சுலபமாகிறது.

ஜலதோஷம் எப்படி உண்டாகிறது?

ஜலதோஷத்தால் பாதிக்கப்பட்டுள்ள, ஒரு நபர் தும்மும்போது அல்லது இருமும்போது காற்றின் வழியாகக் கிருமி பரவுகிறது.

கதவின்பிடி, தொலைபேசி போன்றவற்றைக் கையாளும்போது அதில் ஏற்கெனவே பரவியுள்ள கிருமிகள் உடலில் தொற்றிக் கொள்கின்றன.

தொண்டையில் கரகரப்பு, மூக்கு ஒழுகுதல், மூக்கடைப்பு அல்லது தும்மல், தலைவலி, இலேசான காய்ச்சல், உடல் வலி, தலைவலி அல்லது களைப்பு, பசி உணர்வு இல்லாமை போன்றவை ஜலதோஷ அறிகுறிகள். பொதுவாக ஜலதோஷம் ஐந்து முதல் ஏழு நாட்கள் வரை நீடிக்கும். சாதாரண ஜலதோஷத்துக்குக் காரணம் வைரஸ் என்பதால் ஆன்ட்டிபயாடிக்குகளால் அதைக் குணப்படுத்த இயலாது. சிரப் மற்றும் மாத்திரைகளால் ஜலதோஷ அறிகுறிகளில் இருந்து தற்காலிக

நிவாரணம் மட்டுமே வழங்க முடியும். ஜலதோஷத்தைக் குணப்படுத்த முடியாது. எனினும், ஜலதோஷத்திலிருந்து துரிதமாக, மிக வசதியாக நிவாரணம் பெற, கீழே கொடுத்துள்ள சில ஆலோசனைக் குறிப்புகள் உதவும்.

மூக்கடைப்பால் தூக்கம் வராது அவதிப்பட்டால், நள்ளிரவிலும் சுலபமாய்க் கையாளக்கூடிய சில வழிமுறைகள் :

இயற்கையான மூலப் பொருட்களான புதினா (மெந்தால்), கற்பூரம் (சூடம்) மற்றும் நீலகிரி தைலம் (யூகலிப்டஸ் ஆயில்) போன்றவை அடங்கிய விக்ஸ் வேபோரப் போன்ற தைலங்கள் ஓரளவு இறுக்கத்தைக் குறைத்து உங்களைச் சுலபமாக மூச்சு விடச் செய்கின்றன. மேலும் இது இதமான, குளிர்ச்சியான உணர்வைத் தருகிறது. இவை குழந்தைகளுக்ுச் சிறப்பானது என்பதுடன் இரவு நேரத்தில் நன்கு தூங்கவும் உதவுகின்றன.

அடைப்பு ஏற்பட்டுள்ள மூக்குப் பகுதிகளைத் திறந்திட இது ஓர் அருமையான முறை. ஒரு பாத்திரத்தில் வெந்நீரை நிரப்புங்கள் மெந்தோலேடட் தைலம் இரண்டு டீஸ்பூன் கலந்து இதமாக உட்சுவாசியுங்கள். குழந்தைகளுக்கு இந்த சூடான ஆவியால் புண் ஏற்படும் என்பதால் நீண்ட நேரம் ஆவி பிடிக்காமல் கவனமாகக் கண்காணிக்கவும்.

இந்த ஜலதோஷ பாதிப்பின்போது உடல் இழக்கும் நீர்ச்சத்துக்களைச் சரிக்கட்ட அதிகமாக தண்ணீர், பழச்சாறு (ஆரஞ்சு, திராட்சை), தேநீர் குடியுங்கள். வைட்டமின் சி சத்து நிறைந்துள்ள பழவகைகளைச் சாப்பிடுங்கள்.

இந்த ஜலதோஷப் பாதிப்பைக் குறைத்திட உங்கள் உடலுக்குக் கூடுதலான ஓய்வு தேவை.

ஆக்கபூர்வமான சிந்தனை அவசியம். இது உங்களைக் குணப்படுத்தி நோய் எதிர்ப்பு சக்தி அதிகரிக்க உதவுகிறது.

ஜலதோஷத்துடன் காய்ச்சலும் இருக்குமானால் ஜலதோஷத்துக்குரிய மாத்திரையுடன் பாராசிடமால் மாத்திரையும் உட்கொள்ளுங்கள்.

ஜலதோஷத்துடன் அதிக காய்ச்சலும் இருக்குமானால் அல்லது ஒரு வாரத்துக்கும் மேலாக ஜலதோஷம் இருந்தால் அதற்குக் காரணம் தீவிர தொற்று நோய் பாதிப்பாக இருக்கலாம். மருத்துவர் ஆலோசனைப்படி நடக்கவும். ●



''மன்னர் மோசமா எப்படி?''

''போர்க்களம் போய் வாளைப் பிடியுங்கள் என்றால், அந்தப்புரம் சென்று வளை பிடிக்கிறார்.''

- சாயம் வெ. ராஜாராமன்

---



''போகிப் பண்டிகைக்கு, தலைவர் வீட்டு வாசல்லே என்ன கொளுத்தினாங்க?''

''வேறென்ன, தேர்தல் வாக்குறுதிகள் அச்சடிச்ச நோட்டீஸ் எல்லாம்தான்!''

- சீர்காழி வி. ரேவதி

---



''எவ்வளவோ தப்பு பண்ணி அவன் சம்பாதிச்சு என்ன பயன்? கடைசிலே ஒரு பைசாகூட கையிலே இல்லை.''

''சைபர் க்ரைம்'னு சொல்லுங்க!''

- அம்பை தேவா

"**கா**யத்ரி வந்திருந்தாடி!" அம்மா கைநிறைய மிட்டாய் கொடுத்தாள். அதைவிட அதிகம் அவள் முகத்தில் துள்ளி விளையாடிய மகிழ்ச்சி.

"அவளையே உரிச்சு வச்ச மாதிரி அவ குழந்தைடீ! என்னமா துடுக்கா பேசுது. ஒரு இடத்திலேயும் இருக்க மாட்டேங்குது. இங்க ஓடுது, அங்க ஓடுது, அந்த கட்டில் மேல ஏறுது, மாடில ஏறுது!" அம்மாவுக்கு ரொம்ப சந்தோஷம்.

"அவள் ஓடுனா இல்லியா, அவள் புள்ளையும் ஓடத்தானே செய்யும்" அப்பா குறுக்கிட்டார். அம்மா ஒளிந்து, கொண்டாள் சமையல் கட்டில்.

**அ**க்கா! காயத்திரியக்கா! திருக்குன்றன் குடி பழனிவேல் யாதவோடு திருமணமும் கையுமாய் பம்பாய் ஓடினாள். அப்பா கொதித்துப் போனார்.

"இந்த தன்ராஜ்பிள்ளை வீட்டு வாசலை இனிமேல் மிதிக்காதே! இந்த வள்ளியூர் பக்கமே வராதே!" என்றார்.

அம்மாவும் விட்டுவைக்கவில்லை, "உன்னை இன்றோடு தலைமுழுகியாகிவிட்டது" என்றாள்.

காயத்ரியக்கா திருமணத்திற்கு எங்கள் வீட்டில் இருந்து எல்லா விஷயத்திலும் துணையாய் இருந்தது எங்கள் நாங்கு நேரி அத்தான்தான். மூத்த அக்கா லக்ஷ்மியின் கணவர். அத்தான் அப்பாவையும் அம்மாவையும் சமாதானப்படுத்தினார்—

"இப்போது காலம் மாறிவிட்டது. இல்லை, நீங்கதான் அவள் படிச்ச படிப்புக்குத் தகுந்த மாதிரி மாப்பிள்ளை பார்த்து திருமணம் பண்ணி வைக்க முடியுமா?" என்றார் அத்தான். அந்த வாஸ்தவமான வார்த்தைக்கு அப்பா பதில் ஏதும் சொல்லவில்லை.

அண்ணா கலைக்கல்லூரியில் பி.காம். முடித்திருந்தாள் அக்கா. கூடவே மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக் கழகத்தில் பி.ஜி.டி.ஸி.ஏவும் பண்ணியிருந்தாள். எத்தனையோபேர் வேலை என்று ஏங்கியபோது, அவள் மட்டும் திருநெல்வேலியில் ஒரு கம்ப்யூட்டர் சென்டரில் வேலைக்குச் சேர்ந்தாள்.

அக்காவுக்கு யாரையும் பழக்கம் பிடிப்பது என்பது கைவந்த கலை. வள்ளியூர்



பாத்திமா ஸ்கூலில் படிக்கும்போது அவளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த ஸ்டெல்லா என்னும் ஆசிரியையோடு நிறைந்த மரியாதை கொண்டிருந்தாள். அவர்கள் வீட்டுக்கு அடிக்கடி போய் வருவாள். அவர்கள் வீட்டுக்கு வரும் கிறிஸ்துவ புத்தகங்களைப் படிப்பாள். பைபிள் பற்றிப் பேசுவாள். ஒரு நாளும் கிறிஸ்துவ தேவாலயத்துக்குப் போனது கிடையாது. கேட்டால் 'நான் கோவிந்தபிள்ளை பேத்தி' என்பாள்.

**தா**த்தா கோவிந்த பிள்ளைக்கு வள்ளியூரில் ரைஸ்மில் இருந்தது. நிறைய வயல்காடும் இருந்தது. அத்தனையையும் விற்றுத் தீர்த்தார் தாத்தா தன் ஒரே மகன் நோய்க்காக. அக்கா ஒவ்வொரு முறையும் சொல்லுவாள், "நான் தன்ராஜ் பிள்ளை மகள் இல்லை, கோவிந்தபிள்ளை பேத்தி" என்று. அவ்வளவு மரியாதையின்மை அப்பா மேல். அந்த அளவு கௌரவம் தாத்தாபேரில்.

அப்பா "டைப்பிங் போ" என்றால்



''15-வோட்டுலதானே தோற்றுப் போயிருக்கார் தலைவர்- 'ரீ-கௌண்ட்டிங் கேட்கலாமே...?''

''தலைவருக்கு அதுலே நம்பிக்கை இல்லையாம்... பரீட்சையிலே 15 மார்க்குல ஃபெயிலாகி 'ரீ-டோட்டல்' கேட்டப்ப அவருக்கு 30 மார்க் குறைஞ்சு போச்சாம்!''

— சீர்காழி வி. ரேவதி

"கம்ப்யூட்டர்தான் படிப்பேன்" என்று அடம் பிடித்தான். டிசம்பர் மாதம் தெப்பத்திருநாளுக்கு 'கட்டாயம் துணி எடுக்க வேண்டும்' என்று ஒற்றைக்காலில் நிற்பாள். நான் எத்தனையோ முறை, "எனக்கு வேண்டாம்பா. காயத்ரி அக்காவுக்கு எடுங்கள்" என்பேன். அப்பா கஷ்டப்பட்டார். எனக்குப் புரிந்தது.

அப்பா என்ன செய்வார்? செட்டியார் ஜவுளிக்கடை கணக்குப் பிள்ளை அவர். சில நேரங்களில் ஏதோ ஒரு வக்கீலிடம் சென்று டைப்பிங் அடித்துக் கொடுத்துவிட்டு வருவார். இந்த வருமானத்தில் தீபாவளிக்கு வெடிவாங்க காசு மிஞ்சியது கிடையாது.

இந்த கஷ்டங்களுக்கிடையேயும் தீபாவளி, திருக்கார்த்திகை, தெப்பத்திருவிழா என்று எல்லாவற்றுக்கும் அக்கா அழுதே துணிமணிகள் வாங்கி விடுவாள். அப்பாவும் வாங்கிக் கொடுத்து விட்டு 'மல்லுக்கு நிக்கிறவளுக்கு மாகாணி பங்கு அதிகம்' என்று வேதாந்தம் பாடுவார்.

பன்னிரண்டாம் வகுப்பில் அக்காளுக்கு மார்க் அதிகம். ஸ்டெல்லா டீச்சர் வீடு வந்துவிட்டார்கள். "காயத்ரியைக் கட்டாயம் படிக்க வையுங்க. உங்க கஷ்டத்தை அவள் படித்து வந்து தீர்த்து வைப்பாள்." ஸ்டெல்லா டீச்சர் சொன்னது வேதவாக்காக ஆனது அப்பாவுக்கு.

அண்ணா கல்லூரியில் சேர்த்த முதல் நாளே சொன்னாள், "தாத்தா ரைஸ்மில் வைத்து எவ்வளவு கௌரவமாக இருந்தார். அப்பாவைப் பாரு, கணக்குப்பிள்ளை. தாத்தா நாலுபேருக்குப் பிழைப்பு நடக்கிற மாதிரி தொழில் பார்த்தார். அப்பா நாலு பேர்கிட்ட கையேந்தி பிழைக்கிறார்." அப்பாவுக்கு எப்படி இருந்ததோ தெரியவில்லை. எனக்கு நெஞ்சில் தைத்தது.

காயத்ரி அக்கா எங்கள் வீட்டின் முதல் பட்டதாரி. மூத்த அக்கா லக்ஷ்மி படிக்கவில்லை. பத்துவரை மட்டுமே படித்திருந்தாள். காயத்ரி அக்காவே கடைசி பட்டதாரியுங்கூட எங்கள் வீட்டில். நானும் பன்னிரண்டாம் வகுப்புக்கு மேல் படிக்கவில்லை.

அப்பாவுக்குக் கஷ்டம். எப்படியோ லக்ஷ்மி அக்காவை தூரத்து சொந்தத்தில் கல்யாணம் செய்து கொடுத்தார். மாப்பிள்ளை வீட்டாரும் ஒரு காலத்தில் வசதியாய் வாழ்ந்த குடும்பம் என்று கல்யாணம் செய்து கொண்டனர்.

ஒருவழியாக முதல் கல்யாணம் முடிந்தது. ஆனால் காயத்ரி அக்கா கல்யாணத்துக்கு ஒரு வழியும் தெரியாது அப்பா தவித்தார். மாப்பிள்ளை வீட்டார் யாரும் வருவதாய்த் தெரியவில்லை.

பழனிவேல் அவளோடு கல்லூரியில் படித்தவன். கல்லூரிவரை அவளுக்கு நட்பு இருந்தது. அவன் பம்பாய் சென்றதும், பாண்டுப்பில் குடியேறியதும், ஒரு சிறிய கம்பெனியில் அக்கவுண்டண்ட் ஆனதும் வருடம் ஒருமுறை ஊர் வந்ததும், வரும்போதெல்லாம் அக்காவைப் பார்த்ததும் வெறும் நட்பான நிகழ்வுகள்.

அக்காவுக்குத் திருமணம் செய்து வைக்க இயலாத அப்பா, அவளது வருமானத்தில் ஓடிய குடும்பம், என்று எல்லாமுமாய்ச் சேர்ந்து 'அதையும் தாண்டிய' காதலாக்கியது அவர்களது நட்பை. நாங்குநேரி அத்தான் கல்யாணத்தை நடத்தி வைத்தார்.

அக்கா அடிக்கடி எனக்குக் கடிதம் போட்டாள். நன்றாக வசதியாக இருப்பதாகவும், தனக்கு வேலைக் கிடைத்து விட்டது என்றும் எழுதினாள். நான் என்றுமே அவளுக்குப் பதில் கடிதம் எழுதியது கிடையாது.

'நீயும் பி.காம், படி, நான் பம்பாயில் உனக்கு வேலை வாங்கித் தருவேன்' என்றும் கடிதம் எழுதுவாள். நான் பதில் எழுதாதது கண்டு மனம் நொந்து போனதாய் போனில் பேசினாள் ஒருமுறை.

'வீடு சிறை' என்றாள். அந்தச் சிறையை

விட்டு வெளியே வா என்றாள்.

நியாயங்கள் ஆளுக்கு ஆள் வித்தியாசப்படுகின்றன. நான் எண்ணிக் கொண்டேன். அவளிடம் கூறவில்லை.

அம்மாவும், அப்பாவும் மாறிமாறி காயத்ரி அக்காவை வசைபாடினாலும் நான் அவள் பக்கம் இருந்தேன் அம்மா அப்பா முன்னிலையில். அவள் சூதுவாது நிறைந்தவள். பெற்றோர் பெற்று தராத வசதியை, சௌகரியங்களை அவளே தேடிக் கொண்டாள்.

ஆனால், அப்பா ஒரு கணக்குப்பிள்ளை என்றவள் அக்கவுண்டெண்டை எப்படி மணந்தாள்?

கடைசிக் கடிதத்தில் எனக்கு இப்படி எழுதியிருந்தாள் 'தன்ராஜ்பிள்ளை நம் வீட்டு மானத்தைக் காற்றில் பறக்கவிட்டு விட்டார்' என்று. இருக்கும்வரை பிடுங்கி விட்டு, கிடைக்காத போது தூற்றும் உலகில் அவளும் ஒரு மனுஷி என்பதைச் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தாள்.

அந்த காயத்ரிதான் இன்று காலை வீட்டுக்கு வந்திருக்கிறாள். இத்தனை நாளும் வசைபாடி தீர்த்த அம்மா அவள் குழந்தையைக் கண்டதும் மனசு மாறிப்போனாள். அந்த குழந்தை சிரிப்பில் 'நேற்றை' மறந்து போனாள். அப்பாவும் அதேதான்.

அக்காவை நான் அவள் பம்பாய் செல்லும் வரையில் போய்ப் பார்க்கவே இல்லை.

'மன்னித்துவிடு அக்கா! நானும் கோவிந்த பிள்ளை பேத்தி!' ○

## புதிய காற்று!

'பூவரசம் வீடு' பத்திரிகைத் தொடர்கதை ஃபார்முலாவுக்குள் அடங்கியிருந்தும்கூட, படைப்பிலக்கியத்தில் ஒரு புதிய காற்றை சுவாசிக்க வைத்தது. கதையில் நிகழ்வுகள் குறைந்திருந்தாலும், இளைய தலைமுறையின் உலகும், காதல் உணர்வுகளும், மிகைப்படுத்தப்படாமல் இயல்பாகச் சித்திரிக்கப்பட்டிருந்தன. யதார்த்தமான உரையாடல்கள்; பெருநகரங்களின் பின்னணி இல்லாமல், சிற்றூரில் வாழும் இன்றைய இளம் சமூகத்தைச் சுற்றிப் படைக்கப்பட்ட பாஸ்கர் சக்தியின் 'பூவரசம் வீடு' சமீபத்திய தரமான படைப்பு.

சென்னை - 18, சாருகேசி.



காட்சிகளை எழுத்துக்களால் படம்பிடித்து எங்கள் மனத்தினுள் விரியவைத்த 'பாஸ்கர் சக்தி'க்கு ஒரு 'ஓ' போடுகிறோம்!"

தஞ்சாவூர்- 9, ராகவ். மகேஷ்.

பாஸ்கர் சக்தியின் தொடரோடு நான் மிகவும் ஒன்றிவிட்டேன். அதில் வந்த எல்லா பாத்திரங்களும் கதைக்குரிய பாத்திரப் படைப்பாக இல்லாமல் நிஜவாழ்வில் நம்முடன் உலாவரும் மனிதர்களாகவே தோன்றுகின்றனர். ஆர்வத்துடன் பூவரசம் வீட்டுக்குக் குடியிருக்க வந்தவர்கள் ஆற்றவொண்ணாத சோகத்துடன் பிரிந்தது மனத்தைக் கனக்கச் செய்தது.

திருநெல்வேலி - 7, வி. திலகம்.

'பூவரசம் வீடு' இறுதி காட்சியில் இறந்துபோன அம்சவேணி, எங்கே வந்தாள். ஆசிரியர் கவனிக்கவில்லையா. உருக்கத்தில் உருகிவிட்டார் போலும்.

தஞ்சாவூர்-4, கே.வி.கிருஷ்ணய்யர்.

முடிவு அற்புதம். கதையின் ஓட்டம் அரை வருடம் ஓடியதை இப்பொழுதுதான் உணர வைத்தது. இயன்றவரை 'ஆண்ட்டி-கிளைமேக்ஸ்' தொடர்கதைத் தவிர்க்கும் கல்கிக்குப் பாராட்டு!

குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

குடும்பச் சூழ்நிலைகளினூடே காதலும், காமமும் ஒரு பொருட்டே அல்ல என்பதை நிலைப்படுத்தியிருந்தது வரவேற்கத்தகுந்தது! மனோகரின் ஓவியங்கள் தொடர்கதைக்குச் சிறப்பு!

நெய்வேலி-3 சு. ஸ்ரீகாந்த்.

# காக்காய் பிடிக்காத நாடு!

''நாலு பேருக்கு நல்லது செய்யணும்னு கர்த்தரோட கட்டளை! அதற்காக கண்டம் தாண்டிப் போவதில் எனக்குத் தயக்கமே இல்லை'' என்கிறார் சிஸ்டர் பிரான்சினி. தமிழ்நாட்டிலிருந்து ஆப்ரிக்காவில் உள்ள தான்ஸேனியா நாட்டுக்குப்போய் கல்வி, மருத்துவம், சமூக சேவை வழங்கியவர். தற்போது கென்யா நாட்டில் சேவையைத் தொடருகிறார். சமீபத்தில் இந்தியா திரும்பிய அவரிடம் பேசியபோது கிடைத்த ருசிகரத் தகவல்கள்.

★ தான்ஸேனியா இயற்கை வளமிக்க நாடு. முக்கியத் தொழில் விவசாயமும், மேய்ச்சலும்தான். சோளம், நெல், தேங்காய், புகையிலை, முந்திரி, பருத்தி, காபி, வாழை போன்றவை பயிராகின்றன.

★ 'ஆப்ரிக்காவின் கூரை' என்று அழைக்கப்படும் மிக உயரமான 'கிலிமஞ்சாரோ' மலை இங்குள்ளது. கடல் மட்டத்திலிருந்து 5895 மீட்டர் உயரம்.

★ ஆண்கள், சர்வசாதாரணமாக பல பெண்களை மணக்கிறார்கள். ஒவ்வொரு மனைவிக்கும் தனித்தனி வீடு. எந்த வீட்டில் எப்போது வேண்டுமானாலும் தங்கிக் கொள்வான். அவர்களுக்குள் பொதுவாக சண்டை வருவதில்லை. குடும்பக் கட்டுப்பாடு கிடையாது என்பதால், நிறைய குழந்தைகள். 'தாங்கள் இறந்த பின்பும், தத்தம் பிள்ளைகள் மூலம் வாழ்க்கை தொடருவதாய்,

யாரும் இறப்பதேயில்லை' என்று நம்பு கிறார்கள்.

★ தான்ஸேனியா மக்களை அதிகமாகப் பாதிப்பது மலேரியாதான். காரணம், காட்டுக் கொசுக்கள். அடுத்தது காசநோய், எய்ட்ஸ்!

★ விரும்பி அருந்தப்படும் பானம் கேழ்வரகு பீர்!

★ ஏதாவது நிகழ்ச்சிக்குப் பரிசுத் தர வேண்டுமென்றால் கோழியும், சர்க்கரையும் தருவதுதான் கௌரவம்.

★ சினிமா என்பது இல்லவே இல்லை. பி.பி.சி., சௌத் ஆப்ரிக்கா, சி.என்.என். போன்ற டி.வி. சேனல்கள் பார்க்கிறார்கள். எப்போதா வது இந்தி, தமிழ்ப் படம் காட்டப்படும். எம். ஜி.ஆர்., அமிதாப் பச்சன் இருவரும் பிரபலம்.

★ பிடித்த விளையாட்டு கால் பந்தாட்டம்.



★ எல்லா கிராமத்திலும் துவக்கப்பள்ளி இருக்கின்றது. ஆனால் கல்வித் தரம் மிகக் குறைவு.

★ நாட்டில் இரண்டே இரண்டு ரயில்வே பாதைகள் தான். 'பிரிசம்' என்ற இடத்தி லிருந்து நாட்டின் வடகோடி வரை செல்கிறது. இதை நிர்வகிப்பது ஜப்பான்.

★ தான்ஸேனியா நாட்டின் தலைநகரம் 'டோடோமா'. இங்கிருந்து 'மொரோ கோரா' நகரம் வரை 186 கி.மீ. தூரம். இடைப்பட்ட தூரத்தில் எங்கும் மின்சார வசதி கிடையாது. அதற்கு அருகேதான் எங்களது ஹோலி கிராஸ் சேவை மையம் உள்ளது. ஜெனரேட்டர் பயன் படுத்துகிறோம். டீஸல் இன்ஜின், மின்கம்பி என எல்லாமே திருச்சி பொன்மலையில் இருந்து வாங்கப்பட்டவையே.

★ இரண்டாம் உலக யுத்தத்துக்கு முன் ஜெர் மனியிடம் இருந்த இந்த நாடு, பின்னர் இங்கி லாந்து வசமானது. 1961ல் சுதந்திரம் பெற்றது.

★ ஸ்வாகிலி, ஆங்கிலம் மொழிகள் பேசப் படுகின்றன.

★ 'ஜூலியஸ் நைரேரே' என்பவர், அந் நாட்டில் உள்ள 'மஸாய்', 'சாகா', 'சூகா', 'முகுகா' போன்ற பழங்குடி மக்களை ஒன்று சேர்த்து 'ஒரே நாடு, ஒரே மக்கள்' கோஷத்தை எழுப்பி, வெற்றியுடன் ஆண்டு வந்தார். காந்திஜிமீது மிகுந்த பற்று கொண்ட இவர், நெல்சன் மண்டேலாவுக்கு நெருக்கமானவரும்



கூட. 'தான்ஸேனியா நாட்டின் தந்தை' என்று அழைக்கப்பட்ட இவர், தமது 76வது வயதில் இறந்துவிட, தற்போது, சி.சி.எம்.சி. (புரட்சிக்கட்சி), யுனை டெட் டெவலப்மெண்ட் பார்ட்டி, என்.சி.சி.ஆர். இப்படி பதின்மூன்று கட்சிகள் சேர்ந்து ஆட்சிபுரிகின்றன!



• சிஸ்டர் பிரான்சினி

★ மிகவும் பின் தங்கிய நிலையி லிருந்து இந்த நாட்டு மக்களிடையே தற்போது ஓரளவு விழிப்புணர்வு ஏற் பட்டுள்ளது. 1987ல் நான் வந்து சேர்ந்த போது, 'டெய்லி நியூஸ்' என்ற ஆங்கில தினசரி மட்டுமே வெளிவந்தது. தற்போது ஆங்கிலத்தில் இரண்டும், பிராந்திய மொழி களில் சில, என எட்டு நாளிதழ்கள் வெளி வருகின்றன.

★ நம் நாட்டுக் காக்கைகள் இங்கு காணப் படுகின்றன. கப்பல் மூலம் எப்படியோ நுழைந்துவிட்ட, இந்த 'இந்தியன் குரோ' இனத்தைத் தடை செய்ய வேண்டும் என்று அவ்வப்போது குரல் கொடுக்கின்றனர்!

படம், சந்திப்பு : **செயபாலன்**





# பாவம் பா.ம.க.!

• பா.ம.கவுக்கு இது போதாத காலம். அ.இ.அ.தி.மு.க. விரித்த வலையில் தாராபுரம் எம்.எல்.ஏ. சிவகாமி வின்சென்ட் விழுந்துவிட, இப்போது கட்சியின் அச்சரப்பாக்கம் எம்.எல்.ஏ. மரணம் அடைந்துவிட்டார். கிட்டத்தட்ட பத்து எம்.எல்.ஏ.க்கள், பட்ஜெட் கூட்டத் தொடர் ஆரம்பிக்கும் முன் பிரிந்து சென்று தனி அமைப்பு நிறுவ இருக்கிறார்களாம். அதிருப்தி எம்.எல்.ஏ.க்கள் அ.இ.அ.தி.மு.க. தலைமையுடன் மிகவும் நெருங்கி விட்டார்களாம். டாக்டர்மீது ஏகப்பட்ட குற்றச் சாட்டுகளைச் சொல்கிறார்கள். "எங்களைப் பள்ளி மாணவர்கள் போல் நடத்துகிறார் டாக்டர். எங்கள் தொகுதி நிதியில் என்ன வேலைகள் நடக்க வேண்டுமென்று அவரே தீர்மானிக்கிறார். எங்கள் நடவடிக்கைகளைக் கண்காணிக்க ஆட்களைப் போட்டிருக்கிறார். சிலரது சம்பளத்தையும் கட்சி நிதிக்காக கேட்கிறார். ஏற்கெனவே ஆளும் கட்சியை எதிர்த்துக் கொண்டு விட்டோம். அரசாங்கத்தில் எங்களுக்கு எந்த வேலையும் நடக்கவில்லை. அ.இ.அ.தி.மு.க. எதிர்ப்பைக் குறைத்துக் கொண்டால் கட்சியில் பிளவைத் தடுக்கலாம்'' என்கிறார் ஓர் அதிருப்தி எம்.எல்.ஏ.

• விரைவில் காங்கிரஸுடன் இணைவதாக ஒப்புக் கொண்டு, இப்போது 'இணைப்பு இல்லை' என்று சொல்லும் வாசன்மீது ஏக கோபத்தில் இருக்கிறது காங்கிரஸ். "உ.பி. தேர்தலுக்கு அப்புறம் அவர்கள் சம்பந்தப்பட்ட விவகாரத்தைத் தீவிரமாக ஆராய இருக்கிறோம்'' என்கிறார் ஒரு காங்கிரஸ் பிரமுகர். குறிப்பாக, கோடிக் கணக்கில் சொத்துடைய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி டிரஸ்டை தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதில் தீவிர கவனம் செலுத்த இருக்கிறதாம் காங்கிரஸ்.

• இவ்வளவு காலம் பொறுமையுடன் இருந்துவிட்டு இப்போது பா.ஜ.க.வில் திருநாவுக்கரசு இணைந்ததை விமர்சிக்கிறார்கள் அவரது கட்சிக்காரர்கள். "பா.ஜ.க.வின் செல்வாக்கை அளவிடும் தெர்மா மீட்டராக உ.பி. தேர்தல் வர இருக்கிறது. அங்கு பா.ஜ.க. தோல்வியடைந்தால் தே.ஜ.மு. ஆட்சிக்கே ஆபத்து இருக்கிறது. இந்த நிலையில் இன்னமும் கொஞ்சம் பொறுமை காத்திருக்கலாம். எதிர்காலத்தில் காங்கிரஸுடன் கூட்டணி அமைத்தால் பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி நிச்சயம். அப்படி தனிக்கட்சி நடத்த முடியாவிடில் திராவிட அமைப்புகளுடன்தான் இணைந்திருக்க வேண்டும்'' என்கிறார் திருநாவுக்கரசின் தோழர் ஒருவர். தமிழக பா.ஜ.க. தலைவர் பதவியையும் திருநாவுக்கரசு குறி வைத்திருக்கிறாராம். அ.இ.அ.தி.மு.க.வுடன் உள்ள நெருக்கத்தின் அடிப்படையில் அந்த விஷயம் தீர்மானிக்கப்படுமாம்.

• சென்னை தியாகராய நகரில் உள்ள ஒரு வீட்டில் நடந்த கிரகப்பிரவேசத்துக்கு அம்மா தோழியுடன் சமீபத்தில் ஆஜரானார். யார் குடியிருக்கப் போகிறார்கள்? ரகசிய கூட்டங்கள் யுக்திகள் வகுக்க ஓர் இடமாக அந்த வீடு இருக்குமாம்.

— சஞ்சயன்

**காதில் விழுந்தவை**

'இட்லி, தோசை, சப்பாத்தி' என்று அடுக்கு மொழி வசனம் பேசி வாடிக்கையாளர்களைக் கவரும் ஓட்டல் சர்வர் ஒருவர் மாதப் பத்திரிகை நடத்துகிறார்.

மதுரை அண்ணா பேருந்து நிலையத்துக்கு எதிரே இருக்கும் ஹோட்டல் ராஜராஜேஸ்வரியில் சர்வராக இருக்கும் தேவி கணேசன் நடத்தும் பத்திரிகையின் பெயர் 'சர்வர் சுந்தரம்'



• தேவி கணேசன்

"எனக்குச் சொந்த ஊர் சிவகங்கை அருகிலுள்ள கீழப்பூங்குடி. ஏழாம் வகுப்பு வரை படிச்சிருக்கேன். ஹோட்டல் வேலைக்கு வந்து இருபத்து மூன்று வருஷமாகிறது. தொடர்ந்து படிக்காமல் போனதற்கு வறுமைதான் காரணம். காமராஜர் இறந்தபோது அவரை நினைத்து ஒரு கவிதை எழுதினேன். அதுதான் என் முதல் படைப்பு. அப்படியே எழுத்தில் ஆர்வம் பிறக்க, தொடர்ந்து எழுதினேன். அமெரிக்கன் கல்லூரி மாணவர்கள் சிலருடன் கையெழுத்துப் பிரதி ஆரம்பித்தேன். ஒவ்வொரு கால கட்டத்திலேயும் பல்வேறு வடிவங்கள் பெற்று இப்பொழுது 'சர்வர் சுந்தரம்' பெயரோடு வெளி வருகிறது. 1800 பிரதிகள் தற்போது விற்பனை ஆகின்றன" என்கிறார் தேவி கணேசன்.

# ஸ்பெஷல் மசாலேய்...!

ஹோட்டல் வேலை நேரம் முடிந்து இரவு பத்து மணி முதல் நள்ளிரவு இரண்டு மணி வரை உள்ள நேரத்தைத்தான் பத்திரிகைக்காகப் பயன்படுத்திக் கொள்கிறாராம். 'நிலவே நீ சாட்சி' என்ற கவிதை நூலையும் வெளியிட்டுள்ளார்!



"'சர்வர் சுந்தரம்' படத்தில் நாகேஷ் கஷ்டப்பட்டு முன்னேறுவார். அதுபோல தன்னம்பிக்கை வரணும் என்றுதான் 'சர்வர் சுந்தரம்'னு பெயர் வைத்தேன். வாய்ப்பு கிடைக்காமல் முடங்கிக் கிடக்கின்ற மாணவ எழுத்தாளர்களுக்கு 'சர்வர் சுந்தரத்தில்' முன்னுரிமை தரப்படுகிறது" என்கிறார் தேவி கணேசன்.

'சர்வர் சுந்தரம்' இதழுக்கு விளம்பரங்கள் கொடுத்தும், பிறரிடம் விளம்பரங்கள் தர பரிந்துரை செய்தும் தேவி கணேசனை வளர்த்து வருகின்றனர் ஹோட்டல் முதலாளிகள் உருமக் கோனாரும், சுந்தரராஜனும்.

'இன்றைய ஸ்பெஷல்' நியூஸ் : அமெரிக்கன் கல்லூரி மாணவராக இருந்த போது, 'சர்வர் சுந்தரம்' ஆசிரியர் குழுவில் பணியாற்றியவர் நடிகர் விவேக்.

தகவல்-படங்கள்:
**ஜி. சிங்காரவடிவேல்**

கறுப்பு அரைஞாண் கயிறில் திரும்பிய நாய்க்காசு. சுருள் முடி, நாவற்பழக் கண்கள். சிவந்த நிறம். இதுதான் ஜில்லுவின் அடையாளம். இந்த அழகுக் குழந்தைக் காணாமல் போய் விட்டது...!



# ஜபல்பூர்

கறுப்பு அரைஞாண் கயிறில் திரும்பிய நாய்க்காசு. அதுதான் ஜில்லுவின் அடையாளம். பாவம் குழந்தை. வயிறு பசிக்கிறதென்று சமையலறையில் சியாமளாவின் புடைவையை இழுத்தான். நேர்ந்து கொண்ட சுருள்முடி நெற்றியில் புரண்டது. கருநீல நாவற்பழக் கண்கள் கெஞ்சின. கன்னக் கதுப்பு வாடியிருந்தது. ஒரு காலை தரையில் உதைத்துச் சிணுங்கினான். சியாமளாவுக்குச் சமையலறையில் வேறு வேலையிருந்தது. சீட்டாட்ட கும்பலுக்கு டீ போடுகிற வேலை. ஆட்டத்தின் நடுவே யாரும் எழுந்து விடாமல் டிபன் சுடையும் உண்டு. "பாபிஜியின் கை மணமே தனிதான்" - சிவந்த பீடா வாயுடன் ஷைலேந்தர் கண் சிமிட்டுவான். பிடிக்கிறதோ இல்லையோ நாராயணன் கேட்கிற அத்தனை காரியங்களையும் சியாமளா செய்து கொண்டிருந்தாள். வேலை மும்முரத்தில் பசியில் புடைவையை இழுத்த ஜில்லுவின் முகத்தை அவள் சரியாகக் கூடப் பார்க்கவில்லை.

"எப்போ?" என்றான் நாராயணன்.

சியாமளாவின் நெற்றிப் பொட்டில் நரம்பு ஒன்று வெடித்தது.

சீட்டாட்டம் பாதியில் முடிந்தது. வெள்ளிக்கிழமை இரவு சேர்ந்த ஜமா, அகண்ட நாம பஜனை போல் திங்கள் கிழமை காலை வரை விடிய விடிய நடக்கும். நடுவே ஒரு குழந்தை தொலைந்து விட்டது. இடுப்பு அரைஞாண் கயிறில் காசு திரும்பிய பச்சைக் குழந்தை. மேலே நுரை தள்ளி சுழித்து ஓடுகிற சாக்கடைத் தண்ணீரை எல்லோரும் ஓடி வந்து பார்த்தார்கள். சியாமளா மயக்கமடைந்து தரையில் விழுந்தாள். யாரோ ஓடிப் போய் தண்ணீர் கொண்டு வந்தார்கள். ஆட்ட சுவாரஸ்யத்தில் நிலைமையின் தீவிரம் புரிவதற்கே சற்று நேரமாகி விட்டது. நாராயணன் அனைத்தையும் செயலற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். தெளித்த தண்ணீரில் முகம் சுளித்து மயக்கத்திலிருந்து சியாமளா வெளியே வந்தாள். சூழ்நிலை புரிந்ததும் ஜில்லுவை நினைத்து ஓவென்று குரலெடுத்து அழ ஆரம்பித்தாள்.

சீட்டாட்ட கும்பல் குழந்தையைத் தேடுகிற சாக்கில் ஆளுக்கொரு திசையில் கலைந்து போனது. அக்கம் பக்கத்து வீடுகளிலும் ஜில்லு இல்லை. மார்வாரி வீட்டில் முதல் நாளிலிருந்தே அவனைப் பார்க்கவில்லை. வழக்கமாய் எதிரே சுமன் வீட்டில் இருப்பான். அங்கே அவனுக்குத் தினுசு தினுசாய் ஏதாவது தின்பண்டங்கள் கொடுப்பார்கள். அவனுடன் விளையாட அங்கே ஒரு நாய் இருந்தது. எல்லாவற்றையும் விட சுமன் அவன் மேல் நிறைய பாசம் வைத்திருந்தாள். அவனைப் பார்க்கிறபோதெல்லாம் வாரியணைத்து தூக்கிக் கொஞ்சுவாள். அவளின் மெத்தென்ற இடுப்பில் வாயில் விரல் போட்டு ஜில்லு அப்படியே தூங்கி விடுவான்.

# 2

சுமன் வீட்டில் காலையிலிருந்தே அவன் வரவில்லை. சுமன் அதிர்ந்து தான் போய் விட்டாள். மருண்ட கண்களால் ஜில்லு தொலைந்து போன பின்னணி விவரங்களைக் கேட்டுக் கொண்டாள். இரவு உடை மேல் மெல்லிய சால்வை ஒன்றைப் போர்த்திக் கொண்டு கையில் டார்ச்சுடன் அவளும் ஜில்லுவைத் தேட புறப்பட்டு விட்டாள்.

சற்றுத் தள்ளி குடையொன்றின் கீழ் நடுங்கும் காடா விளக்கு வெளிச்சத்தில் அமர்ந்திருந்த 'மோச்சி' என்ற செருப்பு தைக்கிற பெரியவர்தான் ஜில்லுவைப் பற்றிய உருப்படியான தகவல் ஒன்றைக் கொடுத்தார். மாலை சுமார் ஆறு மணியிருக்கும். சாக்கடைப் பாலத்தை சுமன் வீட்டு நாய் கடந்த போது பின்னாலேயே ஜில்லுவும் ஓடிப் போனதை அவர் பார்த்தார். அந்தச் சமயம் ஒரு கிராக்கி வந்து விட்டதால் அதற்கு மேல்

ம.வே. சிவகுமார்

நடந்தது எதுவும் அவருக்குத் தெரியாது.

ஓட்டமும், நடையுமாய் வீடு திரும்பினார்கள். சுமன் வீட்டு வாசலில் அவர்கள் வீட்டு நாய் மட்டும் தனியே நின்று வாலை ஆட்டியது.

நாராயணன் சைக்கிளை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். சுற்றியிருக்கும் தெருக்களை ஆவேசமாய் நாற்பது ஐம்பது தடவை சுற்றி வந்தான். ஆங்காங்கே பிரும்மாண்டமான சாக்கடைகள் பயமுறுத்தின. மழை பெய்து கொண்டிருந்தது. குறுகலான தெருக்களில் சகதியடித்து பஸ்களும், கார்களுமாய் விரைந்து கொண்டிருந்தன.




'பகவானே. ஜில்லுவுக்கு ஒன்றும் ஆகியிருக்கக் கூடாது. திருப்பதி வெங்கடாசலபதி, குழந்தை பத்திரமாய் கிடைத்தால் நடந்தே உன் மலையேறி மொட்டையடித்துக் கொள்கிறேன். கும்பகோணத்துக்கு தந்தி அடிக்கலாமா? குழந்தையைக் காணோமென்றால் திருவிடைமருதூரில் என்ன ஆகும்?' ஊதல் காற்றில் பற்கள் கிடுகிடுக்க கன்டோன்மெண்ட் ஏரியா பூராவும் சைக்கிளில் சுற்றி வந்தான். தொலைவில் குழந்தையுடன் நடந்தவரைத் துரத்தினான். அது வேறு குழந்தை.

'அய்யோ! கையில் குழந்தை இல்லாமல் எப்படி வீடு திரும்புவது? துயரத்தில் சியாமளாவுக்கு என்ன பதில் சொல்வது?' நினைப்பதற்கே நாராயணனுக்குப் பகீரென்றது. கடவுள், இந்த ஒரு தடவை மட்டும் அவனுக்குக் கருணை காட்டி விட்டால் இனி ஜென்மத்துக்கும் அவன் சீட்டுக்கட்டைத் தொடமாட்டான். ஈஸ்வரா! தயவு பண்ணி ஜில்லுவைக் கண்ணில் காட்டு. இல்லையென்றால் ஆயுளுக்கும் இனி அவன் சியாமளாவின் முகத்தில் விழிக்க முடியாது.

நாராயணனுக்கு ஒரு குளிர்கால அதிகாலையில் சியாமளாவுடன், ஜில்லுவையும் அழைத்துக் கொண்டு சுற்றுலாப் போன தினம் ஞாபகத்துக்கு வந்தது. காதில் மஃப்ளர் சுற்றி சுமார் பதினெட்டு கிலோ மீட்டர் பஸ் பயணம். இறங்கி கொஞ்சம் தூரம் ரிக்ஷாவில் போக வேண்டும். நர்மதை ஆற்றில் பேடாகாட் என்கிற இடம். பளிங்குக் கற்களுக்கு பிரசித்தமானது. பளிங்கில் செதுக்கிய சிறிய பொம்மைகளை நெடுக விற்பனை செய்து கொண்டிருந்தார்கள். சியாமளாவும் அவனும் மாற்றி மாற்றி ஜில்லுவைச் சுமந்து கொண்டு உல்லாசமாய் நடந்தார்கள். கோவில் விசேஷத்துக்காக போகிற வழியில் யானையொன்றும் அன்று பேடாகாட்டில் குளித்தது. ஜில்லு பயப்படாமல் அதன் தும்பிக்கையைத் தொட்டுப் பார்த்தான். கண்களில் நீர் வழிய காதுகளை ஆட்டி அசைந்து கொண்டிருந்த அதன் பிரும்மாண்டம் அவனுக்குப் பிடித்து விட்டது. விளையாடுவதற்கு கூடவே யானை வேண்டுமென்று அவன் அடம்பிடித்து அழுதபோது சக யாத்ரீகர்கள் ஆச்சர்யமாய்ப் பார்த்தார்கள். ஜடாமுடியுடன் துறவியொருத்தர் ஜில்லுவைப் பார்த்து புன்னகை செய்தார். கிட்டே நெருங்கி தலையில் கை வைத்து 'பின்னாளில் இவன் பெரிய லட்சியம் ஒன்றுக்காக போராடுவான்' என்று ஆசீர்வதித்தார்.

**ஊ**ர் அடங்கிக் கொண்டு வந்தது. உதிரியாய் ஆட்கள் தெருவோர தாபாக்களில் இரவு உணவை முடித்துக் கொண்டிருந்தார்கள். கண்ணில்லாத கிழவன் ஒருவன் குளிருக்கு பாங்க் அடித்து விட்டு காணாமல் போன கிருஷ்ணரைப் பற்றி கரகரத்த குரலில் பாடிக் கொண்டிருந்தான். யாரிடமும் எந்தத் தகவலும் இல்லை. நாராயணன் சைக்கிளைச் சாய்த்து நிறுத்தி பாலம் ஒன்றின் கைப்பிடியில் குலுங்கிக் குலுங்கி அழுதான். குடும்பத்தைப் பாராமல் அவன் சீட்டாடியது தவறுதான். ஆனால் அதற்குக் கிடைத்த தண்டனைதான் அதிகம். குழந்தை தொலைந்த கனத்த இதயத்துடன் நாராயணன் வீடு திரும்பினான். வாசல் சாக்கடையின் குறுகிய பாலத்தில் சியாமளா

தலைவிரிகோலமாய் உட்கார்ந்திருந்தான். கன்னத்தில் கண்ணீர் காய்ந்து கீழே விரைகிற தண்ணீரில் பார்வை நிலை குத்தியிருந்தது. சைக்கிள் சப்தம் கேட்டு நிமிர்ந்தாள். வெறுங் கையில் திரும்பிய நாராயணனைப் பார்த்துத் துக்கம் மேலிட்டவளாய்ப் பெருங்குரலில் அடக்க மாட்டாமல் அழத் தொடங்கினாள்.

அன்று இரவு சியாமளாவுடன் ஒரு துணையாக எதிர் வீட்டு சுமன் இங்கேயே தங்கினான். அவளுக்கும் ராத்திரி பூராவும் தூக்கமே வரவில்லை. வீட்டின் வெளிக்கதவு ஜில்லுவுக்காக திறந்தே இருந்தது. சியாமளா உடைந்த குரலில் ஜில்லுவின் விஷமங் களைப் பற்றி அரற்றிக் கொண்டிருந்தாள். அவள் துக்கம் தாங்காமல் அழுதபோதெல் லாம் கூடவே எதிர் வீட்டு சுமனும் சால் வையில் வாய் பொத்தி விசும்பிக் கொண்டி ருந்தாள்.

முதல் நாள் பிற்பகலில் நடந்த சம்பவம். நாராயணன் அலுவலகம் போய் விட்டான். பருப்பு சாதத்தில நெய் விட்டுப் பிசைந்து வீடு பூராவும் சியாமளா ஜில்லுவைத் தேடி னாள். வாசலில் நின்று குரல் கொடுத்தாள். பதில் இல்லை. வீட்டைச் சுற்றிக் கொண்டு கொல்லைப்புறம் வந்தாள். ஜில்லு கையில் சீட்டுக்கட்டுடன் இருந்தான். சியாமளாவுக் குக் காரணமே இல்லாமல் கோபம் வந்து விட்டது. 'இனிமேல் சீட்டுக் கட்டைத் தொடுவியா? தொடுவியா?' என்று வெறும் உடம்பில் விரல் பதிய குழந்தையை அடித்து விட்டாள். அழுது கொண்டே எவ்வளவு நம்பிக்கையுடன் ஜில்லு அவளிடமே அர வணைப்பும் தேடினான்?

அய்யோ! மடியில் அந்தப் பஞ்சுப் பொதி இல்லாமல் அவள் இனி என்ன செய்வாள்? காலனி பூராவும் தினமான அந்த அழுகைக் குரல் ஒலித்தது. 'ஜில்லு... நீ எங்கேடா இருக்கிறாய் என் தங்கமே!'

ரயில்வே ஸ்டேஷன் மேம்பாலத்தின் அடியில் கொஞ்ச நாட்களாகவே ஒரு நாடோடி லம்பாடிக் கூட்டம் முகாமிட்டி ருந்தது. உலகம் பூராவுமே இதுபோன்ற கூட்டம் எப்போதுமே இருந்திருக்கிறது. தமிழில் குறவர்கள். ஆங்கிலத்தில் ஜிப்ஸிக் கள். பல வர்ணத் துணிகளால் ஆன கூடா ரங்களில் வசித்து வந்தார்கள். நெடுஞ் சாலையின் இடைவிடாத போக்குவரத்தில் கூடாரங்கள் புழுதியில் செம்மண் நிறத்துக்கு மாறியிருந்தன. சுமார் நூறு பேர் கொண்ட

## விதை வாழை!

சாதாரணமாக வாழை மரங்கள் வாழையடி வாழையாக வளரும் இயல்புடை



யவை. சென்னை ஷெனாய் நகரில் உள்ள எம்.சம்பந்தம் என்பவர் தமது வீட்டு மொட்டை மாடியில் கற்பூர வல்லி வாழைப் பழத்தின் விதையை முளைக்க வைத்து வளர்த்து வருகிறார். தற்போது அட்டைப் பெட்டியில் வளரும் இச்செடியை விரைவில் பூமியில் நட்டு பராமரிக்க விருக்கிறாராம்.

படம் : யோகா

நான்கு தலைமுறைக் குடும்பம் ஒன்று ஜபல்பூரில் தங்கியிருந்தது.

காக்ரே, பூக்ரேயென்று தங்களுக்குள் பேச ஒரு மொழியும் வைத்திருந்தார்கள். கழைக் கூத்தாடிகள், நடனமாடிப் பிழைப்பவர்கள். கொக்கு, நாரை, புறாக்கள பறவைகளைச் சுடுவதற்கு, துப்பாக்கிகளை வைத்திருப்பார் கள். சுத்தமான மலைத்தேன் விற்பனைக்குக் கிடைக்கும். புலி நகம், நரிக் கொம்பு, பாடம் செய்த கிளி, பாம்பு, அணில், உடும்பு, ஆமை ஓட்டில் செய்த அலங்காரப் பொருட்கள், பாசி மணி. தையல் ஊசி என விற்பார்கள்.

பழைய டயர்களைக் கொளுத்தி லம் பாடிக் கூட்டம் சுற்றிலும் உட்கார்ந்திருந்தது. பெண்கள் சிறிய குழந்தைகளுக்கு மார்போடு தூளி கட்டியிருந்தார்கள். தகரம் ஒலிக்கிற மேளத்தைத் தட்டி இரண்டு பேர் ஆணும், பெண்ணுமாய் வேகமாய் ஆடி நின்றார்கள். வியர்வையில் உடல் மினுமினுக்க அடுத்த ஆட்டம் தொடங்கியது. சுற்றிய சந்தோஷ முகங்களில் தீ வெளிச்சம் கூடச் சேர்ந்து நாட்டியம் தொடர்ந்தது. யார்டில் தனியே இன்ஜின் ஒன்று பின்னால் நகர்கிற சப்தம். ரயில் வண்டிகள் தண்ணீர் பிடிக்கிற உயர மான குழாயில் சாயிரா நசுங்கிய பாத்தி ரத்தில் நீர் பிடித்தாள். செடிகள் நடுவே ஒற்றையடிப் பாதையில் மேடேறி மேம் பாலத்தடி வந்தது. அவள் தகப்பன் வீடு திரும்பியிருந்தான்.

காக்ரே பூக்ரே காக்ரே பூக்ரே.

"என்ன இத்தனை நேரம்?"

"இந்தா பிடி."

சாயிராவின் தகப்பன் அவள் கையில் கசங்கிய ரூபாய் நோட்டுகளைத் திணித்தான்.

"இது எதுக்கு?"

"வைச்சுக்க."

"அய்யே. இந் நேரத்துக்கு துட்டைக் குடுத்தா என்ன செய்ய? ராத்திரி குழம்பு வைக்க ஒரு பூனையாவது பிடிச்சுட்டு வந்திருக்கலாமில்லே?"

"கொண்டாந்திருக்கேன். வெள்ளைப் பூனை."

சாயிராவின் தகப்பனின் கண்கள் இருட்டில் மின்னின.

"வெள்ளைப் பூனையா? எங்கே?"

"இதோ பாரு."

சாயிராவின் தகப்பன் சாக்கு சுருளைப் பிரித்த போது உள்ளே ஜில்லு கண்களைக் கசக்கியபடி உட்கார்ந்திருந்தான்.

"ஹை. ஏது இது?"

"உனக்குத்தான். வைச்சுக்க."

"ஐயோ. இது யார் வீட்டுக் குழந் தையோ?"

ஜில்லுவை லம்பாடிக் கூட்டம் சுற்றிக் கொண்டது. ஆளுக்குக் கொஞ்சம் கிள்ளிய போதும் குழந்தை வலி காட்டாமல் சிரித்துக் கொண்டிருந்தான். ஒருவித வாடையுடன் லம்பாடிப் பெண்கள் அவனைக் கொஞ்சித் தீர்த்தார்கள். முகம் முழுக்க சுருக்கத்துடன் கிழவியொருத்தி கைகள் நடுங்க அரைய ணாக்கயிறு நாய்க் காசைத் திருப்பி உற்றுப் பார்த்தாள்.

"மதராஸி" என்று வெடித்த உதடுகளில் ஒரு தடவை உச்சரித்தாள்.

"பிரச்னை எதுவும் வரப் போவுது."

"இது இருந்தாத்தானே?"

சிறிய பாக்கு வெட்டியில் சாயிராவின் தகப்பன் அரைஞாண் கயிறை வெட்டி எறிந் தான். காவிப் பற்கள் தெரிய கடகட வென்று சிரித்துச் சொன்னான்.

"இனி, இது நம்ம குழந்தை."

(தொடரும்)





# பெயர்த்துக் கட்டுங்க சாமி!

**மாநிலங்களவையில் தமிழ் — ஆங்கில உரை மொழி பெயர்ப்பவராக இருப்பவர் கடலூரைச் சேர்ந்த த. நாகசாமி. இவர் கடந்த பதினைந்து வருடங்களாகப் பணியாற்றுகிறார். அவருடைய அனுபவங்களில் சில:**

தமிழில் 'திரு' என்பது போல் மேல் சபையில் ஒருவரைக் குறிப்பிட 'ஜீ' சேர்த்து சொல்வது வழக்கம். துணைத் தலைவர் நஜ்மா ஹெப்துல்லா சபையை நடத்திக் கொண்டிருக்கும்போது அப்போதைய அ.இ.அ.தி.மு.க. எம்.பி. தஞ்சாவூர் ஜி. சுவாமி நாதனைப் பேச அழைப்பதற்காக 'சுவாமி நாதன் ஜீ' என்று கூற, சுவாமிநாதன் எழுந்து, "ஐயம் நாட் சுவாமிநாதன்ஜி. ஐயாம் ஜி. சுவாமிநாதன்" என்றார். உடனே நஜ்மா ஹெப்துல்லா "அது உங்கள் இன்ஷியல் அல்ல. ஜீ' என்பது மரியாதை நிமித்தமானது" என்று சொல்ல சபையே சிரிப்பொலியால் அதிர்ந்தது.

ராஜீவ்காந்தி பிரதமர். ராஜேஷ் பைலட் போக்குவரத்துத் துறை அமைச்சர். டில்லி கார்ப்பரேஷன் பேருந்தில் 'மோனிஷா வர்மா' என்ற பெண் பலாத்காரம் செய்யப்பட்டதால் பெரும் பிரச்னை. இது பற்றி சிறப்பு தீர்மானம் கொண்டு வந்ததும், ராஜேஷ் பைலட் ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினார். இந்தியில்தான் பேச வேண்டும் என சிலர் குரல் கொடுக்க, வைகோ (அப்போது தி.மு.க. எம்.பி) எழுந்து அமைச்சர் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்று கேட்க, பலத்த விவாதமாகியது. சபையை நடத்தியவர், 'எந்த மொழியில் வேண்டுமானாலும் பேசலாம்' என்று முடிவு சொல்ல ராஜேஷ் பைலட் இந்தியில் பேசினார். உடனே, வைகோ எழுந்து தமிழ் தெரியாதவர்களுக்குப் புரியக் கூடாது என்பதற்காக, 'மாண்பு மிகு பேரவைத் தலைவர் அவர்களே' என்று பேச ஆரம்பித்தார். நான் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்ததும் என்னைத் திரும்பிப் பார்த்துவிட்டு சுமார் முப்பது நிமிடம் தமிழிலேயே தொடர்ந்து பேச, அதைத் தொடர்ந்து ஜெயந்தி நடராஜனும் தமிழில் பேசினார். ஜெயந்தி நடராஜன் தமிழில் பேசியது அந்த ஒரு தடவை என்றே சொல்லலாம். பிராந்திய மொழிகளில் பேச வேண்டும் எனில் ஒரு மணி நேரம் முன்பே அச் செய்தியை எம்.பி. அவைக்குத் தெரிவிக்க வேண்டும். வைகோ தெரிவிக்கவில்லை

என்றாலும் நான் அந்த நேரத்தில் மொழி பெயர்ப்பு அறையில் இருந்ததால் உடனே மொழி பெயர்த்தேன். இல்லையெனில் பிரச்னையாகியிருக்கும். பேசி முடித்த பிறகு வைகோ "அமைச்சரை இந்தியில் பேச வைத்ததற்காக வேண்டுமென்றே நானும் அவர்களுக்குப் புரியாவிட்டாலும், தமிழிலேயே பேச முடிவு செய்தேன். அதனால்தான் முன் கூட்டியே தெரிவிக்கவில்லை. நீங்கள் என் பேச்சை மொழி பெயர்த்து விட்டதால் பிரச்னையாகாமல் போய்விட்டது'' என சிரித்துக் கொண்டே கூறினார்.

தமிழ் நாட்டில் நடந்த பிரச்னை ஒன்றுக்காக அ.இ.அ.தி.மு.க.வும், தி.மு.க.வும் காரசாரமாகப் பேசினர். நஜ்மா ஹெப்துல்லா "தமிழ்நாட்டு மாநிலப் பிரச்னையைத் தமிழ் நாட்டில் பேசுங்கள். இது தமிழ்நாடு சட்ட மன்றம் அல்ல. இங்கே பேச வேண்டாம்" என்றதும், ''மாநிலங்கள் பிரச்னையை மாநிலங்கள் அவையில் பேசாமல் வேறு எங்கு பேசுவது" என இரு தரப்பினரும் திருப்பிக் கேட்டதும் அவையில் அமைதி.

பொதுவாக தமிழ் நாட்டுக்கோ தமிழ் மொழிக்கோ இழுக்கு அல்லது அவமரியாதை என்றால் எந்தக் கட்சியினரும் விட்டுக் கொடுப்பதில்லை.

சமீபத்தில் நடந்த குளிர்கால கூட்டத் தொடர்.

கேள்வி நேரம் முடிந்ததும், எஸ்.எஸ். சந்திரன் பேச அழைக்கப்பட்டார். நான் மொழி பெயர்ப்பு அறையில் இருந்தேன். தமிழில் பேசப் போவதாக தகவல் வராததால் ஆங்கிலத்தில் பேசப் போகிறார் என்று எண்ணி இருந்தபோது தமிழிலேயே பேச்சைத் தொடங்கினார். முன்னறிவிப்பு இல்லையென்றாலும் நான் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கத் தொடங்கி விட்டேன்.

எஸ்.எஸ்.சந்திரன் தமிழில் பேசுவதாக முன் கூட்டியே தெரிவிக்காததால் அவரை தமிழில் பேச அனுமதிக்கக் கூடாது என்று அவை செயலகத்தினர், அவைத் தலைவரிடம் (குடியரசு துணைத் தலைவர் திரு. கிருஷ்ணகாந்த்) கூறினர். அவைத் தலைவர் உடனே எஸ்.எஸ். சந்திரனை ஆங்கிலத்தில் பேசுமாறு கூறினார். நான் மொழி பெயர்ப்பை முன்பே தொடங்கிவிட்டதால் பா.ஜ.க.எம்.பி. அலுவாலியா, தெலுங்கு தேச எம்.பி. டாக்டர் அல்லடி ராஜ்குமார் போன்றோர் தமிழில் பேச அனுமதிக்க வேண்டும் என்றனர். அ.இ.அ.தி.மு.க. எம்.பி. நிறைகுளத்தான், "அவர் தமிழில் பேசுவதைத் தடுப்பது ஜனநாயக விரோதம்'' என்றார். மத்திய அமைச்சர் முரசொலி மாறன் (தி.மு.க.) 'மொழி பெயர்ப்பு வருகிறதே பிறகு என்ன பிரச்னை' என்றார். உடனே எஸ்.எஸ் சந்திரன் நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் காட்டி "இந்த ரூபாய் நோட்டில் தமிழ் உள்ளது. தமிழ் இருக்கும் இந்த ரூபாய் நோட்டு செல்லும், என்றால் என் பேச்சும் செல்லும்' என்றார்.

அவையில் ஒருமித்த கருத்து ஏற்பட்டதும் ஊட்டியில் இருக்கும் ஹோமியோபதி மருந்துவக் கழகத்தைப் புனரமைப்பது தொடர்பாகப் பேசினார்.

— ஆர். ஜெ. பாலன்

---

''யாரோ ஒரு கிழவருக்கு உடம்பு சரியில்லேனு கேள்விப்பட்டதும் டாக்டரை அழைச்சுக்கிட்டு சுகாதார மந்திரியே ஓடோடி வந்துட்டாரா, எந்த ஊரிலே இந்த அதிசயம்?!"

''ஆண்டிப்பட்டியிலேதான்!"

— கபிஸ்தலம் எஸ். இரா





''தலைவர் திடீர்னு பாதயாத்திரையை ஒத்திவச்சட்டாரா...ஏன்?''

''வண்டலூர் ஜூவிலிருந்து தப்பிய சிங்கம் பிடிபடுகிற வரைக்கும் பாதயாத்திரை கிடையாதாம்!''

— தஞ்சை தாமு



• வாக்கிங் சுவாமிஜியுடன்

# திருப்புமுனை!

முப்பது வயது ஜெயசங்கருக்கு அமிர் தாஞ்சன் நிறுவனத்தில் வேலை. அதுவும் நல்ல எதிர்காலம் கொண்ட பேக்கேஜிங் துறையில் 'டெவலப்மெண்ட் ஆபீசர்'. கைநிறைய ஊதியம், கண்கவர் கம்பெனிக் கார் என்று மகிழ்ச்சியான வாழ்க்கை. ஆனால் தமது வேலையை திடீரென்று ஒரு நாள் ராஜினாமா செய்துவிட்டு வீட்டுக்கு வந்தார். பெற்றோருக்கும் உற்றாருக்கும் இவரது திடாலடி செய்கை கொஞ்சம் நெருடவே செய்தது. வேறு பெரிய நிறுவனத்தில் ஜெயசங்கர் பொறுப்பேற்கக் கூடும் என்று அவரது அடுத்த நடவடிக்கையைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள். ஜெயசங்கரோ மிகத் தெளிவாக மும்பை மெயிலைப் பிடித்தார். மும்பையிலிருந்து நூற்று எட்டு கிலோ மீட்டர் தொலைவில், இயற்கை அன்னை ஆட்சி செய்து கொண்டிருந்த 'மலவ்லி' மலையடிவாரத்திற்குப் போய்ச் சேர்ந்தார். அங்கேதான் இருக்கிறது எழுபத்தி இரண்டு வயது இளைஞர், சுவாமி பார்த்தசாரதி நடத்திவரும் வேதாந்தா அகாடமி. மூன்றாண்டுகாலம் இங்கே படித்து திரும்பிய ஜெயசங்கர் இன்று முற்றிலும் புதிய மனிதர்.

சென்னையில் பொறியியல் படித்துக் கொண்டிருந்த அரவிந்தனும் கூட, திடீரென வேதாந்தா அகாடமியில் ஐக்கியமானவர் தான். இந்த இருவரிடமும் இன்று நிறைய பேர் 'ஆன்ம அறிதல்' பயிற்சி பெறுகிறார்கள். மன அழுத்தத்தோடு வருகிற எவருக்கும், வெகு எளிய முறையில் அமைதி தரும் கல்வியை இனிமையாகக் கற்பிக்கிறார்கள்.



• மலைவில் ஆஸ்ரமம்



• சுவாமிஜியின் லெக்சர்



• ஜெயசங்கர்



• அரவிந்தன்

காவி அணியாத இவ்விரு இளம் சுவாமிகள் வாழ்க்கையில் எப்படி நிகழ்ந்தது இந்த எதிர்பாரா திருப்பம். ஜெயசங்கர் தான் முதலில் பேசினார்.

''சிறுவயது முதலே எனக்கு நானே பல கேள்விகளைக் கேட்டுக் கொள்வேன். ஆனால் அவற்றுக்குப் பதில் தேட வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாக எழுந்ததில்லை. ஆனாலும் கேள்விகள் எனக்குள் திரும்பத் திரும்ப எதிரொலித்தபடி இருக்கும். இதுபோன்ற தருணத்தில்தான், சென்னையில் நடைபெற்று வந்த வேதாந்தா இன்ஸ்டிட்யூட் நடத்தும் வகுப்புகளுக்குப் போகும் வாய்ப்பு கிடைத்தது. வாரத்தில் ஒரு மணி நேரம் வகுப்பு. சில வாரங்கள்தான் சென்றிருப்பேன். அதற்குள்ளாகவே எனக்குள் பெரிய மாற்றம். மனம் முழுக்க சாந்தியும் சந்தோஷமும் நிரம்பி வழிந்தது. ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம் இவற்றை அடைய, காவி அணிந்து, முடி வளர்த்து, இமயமலை அடிவாரத்துக்குப் போக வேண்டும் என்ற அவசியம் ஏதுமில்லை. இம்மூன்றும் நமது அன்றாட வாழ்க்கையிலேயே இருக்கிறது. நாம் எங்கே இருக்கிறோமோ, அங்கேயிருந்து கொண்டே இவற்றில் தேர்ந்து விளங்க முடியும் என்பதை இந்த வகுப்புகள் மூலம் உணர்ந்து கொண்டேன்.

வேதாந்தா அகாடமியில் சுவாமிஜி அவர்கள் நடத்தி வரும் மூன்று வருட பயிற்சியில் சேர்ந்தால், இன்னும் தெளிவு பெற முடியும் என்று புரிந்தபோது எனது குடும்பத்தினரே முன்னின்று அங்கே என்னை அனுப்பி வைத்தனர். எனது எதிர்பார்ப்பைக் காட்டிலும் பல மடங்கு என்னைத் தெளிவாக்கியது சுவாமிஜியின் வேதாந்தக் கல்வி'' என்கிறார்.

வேதாந்தா அகாடமியில், அரவிந்தன் சேர்ந்திடக் காரணமாக இருந்தது என்ன? அவரே சொல்கிறார்:

"நான் சென்னையில் படித்துக் கொண்டிருந்தபோது நாரதகான சபாவில் சுவாமிஜியின் உரையைக் கேட்டேன். கூட்டம் முடிந்து அரங்கத்தை விட்டு வெளியே வந்தபோது நிர்மல வானம்போல மனம் இலேசானது. தெளிவு கிடைத்தது. 1991-ல் வேதாந்தா அகாதெமியில் சேர்ந்தேன்.



• தோட்டக்கலை

முதலில் மூன்றாண்டுகள் பயின்று முடித்தாலும் மேலும் மூன்றாண்டுகள் பயில வேண்டும் என்ற எண்ணம் எழ மறுபடியும் அங்கேயே பயின்றேன்'' என்ற அரவிந்தன் சுவாமிஜி பார்த்தசாரதி பற்றி ஒரு சின்ன முன்னுரை தந்தார்.

"சுவாமி பார்த்தசாரதி, தன்னை சுவாமி என்று அழைப்பதையே விரும்பாதவர். சுவாமிஜி இருக்கிறாரா என்று தொலைபேசியில் யாரேனும் கேட்டால் 'நான் பார்த்தசாரதி பேசுகிறேன்' என்று பதில் சொல்வார். வேதாந்தா அகாடமி ஓர் ஆஸ்ரமம் போல தோற்றமளித்தாலும் அது ஆஸ்ரமம் அல்ல. அதை விடவும் உயர்ந்த ஓர் இடமாக உருவாக்கியிருக்கிறார் சுவாமிஜி. லண்டனில் முதுகலை பட்டம் பெற்று பன்னாட்டு நிறுவனத்தில் சில காலம் பணியாற்றித் திரும்பியவர், வாழ்நாளின் மூன்றில் ஒரு பகுதியை வேதாந்த ஆராய்ச்சியில் செலவிட்டார். நடைமுறை வாழ்க்கையில் ஒவ்வொருவரும் தமக்குள்ளிருக்கும் மிருகத் தன்மையை ஒழித்து, கடவுள் தன்மையை உயர்த்திக் கொள்வதற்கான வழிமுறைகள் நமது வேதாந்தக் களஞ்சியங்களிலேயே நிரம்பியிருப்பதை தமது ஆராய்ச்சியின் முடிவில் கண்டு கொண்டார். இதன் பலன் 'வேதாந்தா ட்ரீட்டீஸ் (Vedanta Treatise) என்ற அவரது நூல். பழைய உபநிஷத்துகள் சுவாமிஜியின் பார்வையில் அளப்பரிய புதிய நிர்வாகக் கோணத்தைக் காட்டும் அற்புத வாழ்க்கை நூல். சுவாமிஜி, ஸ்ரீமத் பகவத் கீதையை ஒவ்வொருவரையும் சுயபரிசோதனை செய்யச் சொல்லும் அற்புத மேலாண்மை நூலாகப் பார்த்தார். இப்படித்தான் வேதாந்த அகாடமி பிறந்தது.

"பதினெட்டு முதல் முப்பது வயதிற்கு உட்பட்ட இருபால் இளைஞர்களுக்காக மட்டும் மூன்று வருட முழுநேர வேதாந்தக் கல்வியை இங்கே உருவாக்கியிருக்கிறார். 1988-ல் பதினொரு மாணவர்களோடு சுவாமி வகுப்புகளைத் தொடங்கினார். இன்று வேதாந்தா அகாடமியிலிருந்து எங்களைப் போன்று விதைகளாய்ப் பலர் வெளி வருகிறோம்" என்கிறார் அரவிந்தன்.

வேதாந்தா அகாடமி காட்டும் வாழ்க்கை முறைதான் என்ன? ஜெயசங்கர் தொடர்ந்து சொன்னார்-

"சுவாமிஜி தரும் கல்வியைப் பற்றிப் பேசும் முன்பு, அகாடமியில் ஒரு நாள் வாழ்க்கை எப்படித் தொடங்கி எப்படி முடிகிறது என்பதைச் சொல்ல வேண்டும். அதிகாலை நான்கு மணிக்கு எழுகிறோம். நான்கு பத்துக்கு பிரார்த்தனை. நான்கு பதினைந்து முதல் ஐந்து பதினைந்து வரை இன்டிவிஜுவல் ஸ்டடி. ஐந்து நாற்பத்தைந்துக்கு தேநீர். ஆறு முதல் ஆறு இருபது வரை அறையைத் தூய்மையாக்குதல். ஆறு ஐம்பது வரை யோகா. ஆறு ஐம்பத்தைந்துக்கு காயத்ரி மந்திரம். ஏழு முதல் ஏழு முப்பது வரை நடை மற்றும் மெல்லோட்டப் பயிற்சி. எட்டு முதல் எட்டு முப்பதுவரை நீராடல், காலைச் சிற்றுண்டி. ஒன்பது முப்பது முதல் பத்து நாற்பத்தைந்து வரை சுவாமிஜியின் லெக்சர். பத்து ஐம்பது முதல் மதியம் ஒன்று பத்து வரை வளாகப் பணிகள். ஒன்று பதினைந்துக்கு மதிய உணவு... இரண்டு பதினைந்து வரை சிறு ஓய்வு. மூன்று பதினைந்து முதல் நான்கு முப்பது வரை இன்டிவிஜுவல் ஸ்டடி. நான்கு நாற்பத்து ஐந்துக்கு தேநீர். ஐந்து முதல் ஐந்து நாற்பத்து ஐந்து வரை சமஸ்கிருத வகுப்பு. ஐந்து ஐம்பத்தைந்துக்கு காயத்ரி மந்திரம். ஆறுமுதல் ஏழு பதினைந்து வரை சுவாமிஜியின் லெக்சர் மற்றும் குழு விவாதம். பிறகு எட்டு மணிவரை பக்திப்பாடல்கள், இசைத்தல் மற்றும் தியானம். எட்டு ஐந்துக்கு இரவு உணவு. ஒன்பது மணிக்கு உறக்கம். இப்படி நன்கு திட்டமிடப்பட்ட அற்புதக்

## சென்னையில் சுவாமிஜி

பன்னாட்டு நிறுவனத் தலைவர்கள் சங்கத்தில் தொடர்ந்து உரை நிகழ்த்தும் ஒரே இந்தியரான சுவாமிஜிக்கு ஆன்மிக வழிகாட்டி, அறிவியல் அறிஞர், தத்துவஞானி, எழுத்தாளர், நல்ல பேச்சாளர் என்று பல முகங்கள். சென்னை வாசிகளின் அதீத எதிர்பார்ப்பை நிறைவு செய்யும் விதமாக எதிர் வரும் பிப்ரவரி பதினொன்று முதல் பதினைந்தாம் தேதி வரை தினசரி மாலை 6.30 மணி தொடங்கி இரவு எட்டுமணி வரை சுவாமிஜி பகவத் கீதையின் எட்டாவது அத்தியாயத்தை அடியொற்றி சென்னை காமராஜர் அரங்கில் பேசுகிறார். இது தவிர, ஜனவரி ஒன்பதாம் தேதி, 'வேல்யூ சிஸ்டம்' என்ற ஒரு நாள் கருத்தரங்கையும் பார்க் ஷெராட்டன் ஓட்டலில் நடத்துகிறார்.

கல்வியை மூன்றாண்டுகள், முன்னூற்று அறுபத்தைந்து நாளும் அங்கே பயின்றோம்.

"சமயம் என்பது சம்பிரதாயமான விஷயமல்ல. அது அடிப்படை தேவை! குடும்ப வாழ்க்கையில் இருந்து கொண்டே, ஆன்மிக வாழ்வில் ஒவ்வொருவரும் ஒரு ரோல் மாடலாகத் திகழ முடியும் என்பதுதான் சுவாமிஜியின் வேதாந்தக் கல்வி தரும் யதார்த்தப் படிப்பினை. மன அழுத்தம் இல்லாமல் நடைமுறை வாழ்க்கையை எதிர்கொள்வதே வேதாந்தம் என்று சொல்லித் தருகிறார் சுவாமிஜி. மன அழுத்தம் இல்லையெனில் ஆக்க பூர்வ செயல்வளமும், அதைத் தொடர்ந்து பொருள் வளம் எனப்படும் தரமான உற்பத்தியும் உறுதி! பொருள் வளம் உறுதியென்றால் அதையொட்டியே கவனம் சிதறாமை நமக்குள் குடிகொண்டு விடும் என்கிறார் சுவாமிஜி. இவையே ஞான யோகம், கர்மம் யோகம் பக்தியோகம் என்பது சுவாமிஜியின் வேதாந்தம், சுய மேலாண்மை எல்லாம்.

"நாங்கள் அங்கே கற்றுக் கொள்வதைச் செயல்பாட்டு ரீதியாக அகடெமியிலேயே செய்து பார்க்கும் விதமாக அமைந்திருக்கிறது வளாக வாழ்க்கை முறை. அகாடெமிக்கு என்று நிர்வாகிகள் யாரும் கிடையாது. பயில வரும் மாணவர்களே அவரவர் திறமைக்கேற்ப அகாடெமி வேலைகளைச் செய்கிறார்கள். மாணவர் சார்டர்ட் அக்கவுண்டண்ட் என்றால், அவர் அகாடெமியின் கணக்குகளைப் பார்க்கவேண்டும். மருத்துவர் எனறால் மருத்துவத் தேவைகளை கவனிக்கலாம். டிசைனர் என்றால் அகாடெமியின் புரோஷர்களை டிசைன் செய்யலாம் இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்.

"சுவாமிஜி சொல்லித்தரும் இந்த ஆத்ம அறிதல் கல்வியை, ஒவ்வொரு இளைஞனும் கல்விக்காக ஒதுக்குகிற இளமைக் காலத்திலேயே பயின்றால், அவன் ஒரு முழுமையான மனிதனாகவும் சிறந்த நிர்வாகியாகவும் நல்ல வழிகாட்டியாகவும் ஆக முடியும். எனவே அனைவருக்கும் இந்தக் கல்வியை எடுத்துச் செல்ல வேண்டும் என்ற குறிக்கோளோடு, முழு மூச்சாக எங்களை இந்தப் பணியில் இணைத்துக் கொண்டோம்! வேதாந்தா மேலாண் கல்வியை விரைவில் தமிழிலும் கற்றுத்தர இருக்கிறோம்" என்கிறார்கள் பிரகாசமான வெள்ளுடைத் தோற்றத்தில் இருந்த ஜெயசங்கர், அரவிந்தன் இருவரும்.

— ஜெயந்த்

படங்கள்: ரமேஷ்

'தேவேந்திரன் தனது வெற்றி விழாவின்போது தசரதரை அழைத்துக் கௌரவித்தான். இந்திர சபைக்கு எல்லாரும் வந்திருந்தார்கள் - சனீஸ்வரரைத் தவிர. தன் பார்வை தசரதர்மீது படக் கூடாதென்று ஜாக்கிரதையாக ஒதுங்கியிருந்தார் அவர். அப்படியும் தசரதர் விடாமல் அவருடைய மாளிகைக்குச் சென்று பார்த்தார். சனீஸ்வரன் முகத்தைத் திருப்பாமல், 'உங்களைப் பார்க்க மாட்டேன். போய்விடுங்கள்!' என்று வற்புறுத்திச் சொன்னார். புறப்பட்ட தசரதர் வாசற்படியில் நின்று ஒருமுறை திரும்பிப் பார்க்க, அதே சமயம், அவர் போய்விட்டாரா என்று சனீஸ்வரர் திருப்பிப் பார்க்க, ஒரு வினாடி சனி பகவானின் பார்வை தசரதர்மீது விழுந்து விட்டது. 'சக்ரவர்த்தி! உங்களுக்கு நான்கு பிள்ளைகள் பிறப்பார்கள். ஆனால் மூத்த பிள்ளை உங்களுக்குக் கொள்ளி போடமாட்டான். காரணம் என் பார்வை உங்களின்மீது பட்டது தான்!' எனறார் சனீஸ்வரர்.

'சனி பார்வை கூடாது என்கிறார்களே, அது உண்மை தானே?' என்று ஒருவர் கேட்கவே, என் சோதிடர் அசோக் பாரதி மேற்கண்ட கதையைக் கூறினார். ('எங்கள் நமது கண்கள்' - ராஜு). சரியோ தவறோ, ஒன்னாம் நம்பர் பயமுறுத்தலாக இருந்தது.

விளம்பரம் போல நடைபெற்று வருகிற இந்தத் தொடர் நிகழ்ச்சியில் பலர் பலவிதமான கேள்விகள் கேட்கிறார்கள். 'அயோத்தியில் ராமர் கோவில் கட்டப்படுமா?' என்று ஒருவர் கேட்டார். 'அடுத்த வாரம் சொல்கிறேன்' என்றார் சோதிடர்! அயோத்திப் பிரச்னைக்கு

வினோத்



# ர்கை ஒன்றே போதுமே!



ஒரு வாரத்தில் விடிவு கிடைத்து விடும் என்று நம்புகிறார் போதும். You have to know a lot to know how little you know.

குடியரசு விழா நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்ட அதே தினத்தில், குஜராத் பூகம்பத்தின் பயங்கரத்தையும் நினைவு கொள்ள நேரிட்டது. செய்திகளில் பார்த்தபோது, அந்த இடிபாடுகள் அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமல் அப்படியே குவிந்து கிடந்தன. (ஆனால் ஊர் மொத்தமும் அப்படி இருக்கும்போது எங்கேதான் கொண்டு போய்க் கொட்டுவார்கள்?)

இல்லங்களை இழந்த துரதிருஷ்டக்காரர்களுக்காக வரிசை வரிசையாய் 'ஷெட்' கட்டிக் கொடுத்திருக்கிறது அரசு. ஒரு பெண்மணி வாசலுக்கு வந்து துணி உலர்த்துகிறார், அமைதியாக. இன்னும் சில பெண்மணிகள் தீபம் ஏற்றி நதியில் மிதக்க விடுகிறார்கள், மௌனமாக. எந்தப் பூகம்பத்தாலும் இவர்களுடைய பொறுமையை இடித்துத் தகர்க்க முடியாது. Misery generates hate. நேராதது தேசத்தின் பாக்கியம்.

திரைப்படத் தொழிலாளர்களின் நலனுக்காக நிதி திரட்டுவதாகக் கூறி 'ஒளி உத்ஸவ்' நடத்தியது ஜெயா. ரோஜா என்ன, மும்தாஜ் என்ன, எஸ்.பி.பி. என்ன என்று ஏகப்பட்ட பேர் மேடையில் தோன்றிக் கொண்டிருந்தார்கள். குலுகுலுகுலு மலே மலேக்குக் குறைச்சல் இருக்கவில்லை.

'வணக்கம் தமில் ரசிகர்களே!' என்று அவையினரை நோக்கிக் கைவீசிக் குரல் கொடுத்தார் ஹ்ருத்திக் ரோஷன். தாம் தமிழில் மூன்று வார்த்தை பேசிய அதிசயத்தை யாரும் கவனிக்காமல் இருந்துவிடப் போகிறார்களே என்று மேலும் இரண்டு தடவை 'வணக்கம் தமில் ரசிகர்களே!' என்றார். பின்னர் ஆங்கிலத்தில் ஒரு சிற்றுரை ஆற்றி, 'ஏ மேரே தில்' என்று ஒரு இந்திப் பாட்டைக் கடித்துத் துப்பி, நாலு குமரிகளுடன் நடனம் (?) ஆடிவிட்டு மறைந்தார். The worse I do, the more I get popular என்று கென்னடி சொன்னது ஞாபகம் வந்தது.

பூப்பூவான புகையும் வண்ண வண்ணமான பொடியும் மேடையில் பரவி அரங்கத்தை நிரப்பின. (எத்தனை பேர் தும்மினார்களோ, பாவம்.) சிவகாசி மத்தாப்புப் பெட்டி மாதிரி கச்சாமுச்சா கலர்களில், கலை நயம் பலி. ஆனால், கடைசியில் டைட்டில்கள் வந்தபோது மியூசிக்கும் சரி, காமெராவும் சரி அற்புதமான கவிதை. That is one consolation.

'ஒரு ரேஸுக்காகக் கல்கத்தா போகணும். ட்ரெயின் டிக்கெட் கன்ஃபார்ம் ஆகலை. ஃப்ளைட் பிடிச்ச அங்கே போய்க் கலந்துகொண்டேன்.'

'கோகார்ட்' சூரனாகத் திகழும் எஸ்.சரவணன், தன் மறக்க முடியாத அனுபவம் என்று 'காலை வணக்கம்' (சன்) பேட்டியில் இதைச் சொன்னான். 'வேறே மறக்க முடியாத சம்பவம்?' என்று ரமேஷ் பிரபா திரும்பத் திரும்பக் கேட்டார். இதுபோன்ற சாதாரணமான பதில்களாகவே வந்தன.

கார் ரேஸ்களைப் பற்றியும், ரேஸ் பாதைகளைப் பற்றியும் நிறையத் தெரிந்து வைத்திருக்கிறான் இந்தப் பதினொரு வயதுச் சிறுவன். ஆனால் ரொம்பவும் கூச்சம். பேச்சில் பெரும்பாலும் 'வந்து... வந்து... வந்து'தான். முன்னதாகப் பேசி, சரியானபடி ஒத்திகை செய்து கொள்ளாதது ரமேஷ் பிரபாவின் குற்றம். A boss says, 'get going!'; A leader says, 'let us go!' என்பது ஒரு பொன்னான மொழி.

பரவாயில்லை. பையனின் களையான முகத்தையும், குழந்தைத்தனமான பேச்சையும் சிறிது நேரம் ரசிக்க முடிந்தது. அது ஒரு சுகமான அனுபவம்.

uண்டான விபரீதத்தைத் தொடர்ந்து சென்னை கீழ்ப்பாக்கத்தில் உள்ள மன நலக் காப்பகத்தில் சில முன்னேற் றங்கள் தென்படுகின்றன. அறுபத் தைந்து லட்சரூபாய் செலவில் இந்தக் காப்பகத்தில் பலவித ரிப்பேர் வேலைகளைச் செய்ய அரசு ஒப்பு தல் அளித்திருக்கிறது.

முதல் கட்டமாக சமையலறை நவீனப்படுத்தப்பட்டிருக்கிறது. 150 லிட்டர் கொள்ளளவு கொண்ட நான்கு அரிசி குக்கர்கள், 240 இட்லிகளை ஒரே சமயத்தில் செய்யக்கூடிய இட்லிதட்டு யூனிட், 15 லிட்டர் கிரைண் டர்கள் நான்கு – இவற்றுடன் வேறுபல சமையலறை அயிட் டங்களையும் நன்கொடை யாக அளித்திருக்கிறது 'சென்னை ஹோட்டல் காரர்கள் சங்கம்.'



• சுகாதார அமைச்சர் செம்மலை, ஏ. ராமதாஸ்

# ஓசையில்லாமல் ஓர் உதவி!

சில சமயங்களில் அதிர்ச்சி வைத்தியம் தான் தேவைப்படுகிறது.

ஏர்வாடி மனநலக் காப்பகங்களில்

இந்த சங்கத்தின் தலைவர் ராமதாஸ் ராவை சந்தித்தோம்.

"சுமார் ஐந்து லட்சம் ரூபாய் செலவில் எங்கள் சங்கம் இதைச் செய்திருக்கிறது. கடந்த காலத்தில்கூட வெள்ளம் மற்றும் புயலால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு இலவச உணவுப் பொட்டலங்களை அளிப்

பதுபோன்ற சமூக சேவைகளைச் செய் திருக்கிறோம். காது கேளாத மற்றும் பேச முடியாதோர் பள்ளிகளுக்கு இதுபோன்ற சில நல்ல காரியங்களை ஓசையில்லாமல் செய்திருக்கிறோம். என்றாலும் ஒரே சமயத்தில் குறிப்பிடத் தக்க அளவு தொகையைச் செலவழித்து இப்படி ஓர் உதவியைச் செய்தது இப்போதுதான்.

"நவீனப்படுத்துவதற்கு முன் சிதிலமடைந்திருந்தது கீழ்ப்பாக்க மருத்துவமனையின் சமையலறை. முதலில் சென்று பார்வையிட்டபோது நூற்றுக்கணக்கானவர்கள் அங்கு சிகிச்சை பெறுகிறார்கள் என்பதை அறிந்து வியப்பாக இருந்தது. அதைவிட ஆச்சரியத்தை இன்னொரு செய்தி ஏற்படுத்தியது. அங்கு தங்கியுள்ளவர்கள் எல்லோருமே நோயாளிகள் இல்லையாம். அவர்களில் பலர் குணமாகியும்கூட சுற்றத்தாரால் அழைத்துக் கொள்ளப்படாதவர்கள் என்பதை அறிந்தபோது வேதனையாக இருந்தது. நம்மாலான உதவி என்று எங்கள் சங்கத்தின் மூலம் இதைச் செய்திருக்கிறோம்.

''இதேபோல இன்னொரு இட்லித் தட்டு யூனிட் வேண்டுமென்று கேட்டிருக்கிறார்கள். கொடுப்பதாக இருக்கிறோம்'' என்றார்.

டயமஷியன் பெண்மணி ஒருவரும், பதினோரு சமையற் கலைஞர்களும் கீழ்ப்பாக்கம் மனநலக் காப்பகத்தில் உள்ள சமையலறையில், ஷிஃப்ட் முறையில் பணிபுரிகிறார்கள்.

நல்ல விஷயம்தான். அப்படியே சென்னையில் உள்ள சில ஹோட்டல்களின் சமையலறைகளையும் நவீனப்படுத்தினால் உடல் ஆரோக்கியம் கெடாமல் இருக்குமே என்ற யோசனையை முன் வைத்தோம். "சப்பாத்தி மாவைப் பிசைவதற்குக் கூட இயந்திரங்கள் வந்து விட்டன. சமையல் கலைஞர்களின் கைவிரல் கூடப் படாமல் உணவு வகைகளைச் சமைக்கும் நிலை விரைவில் சென்னையில் உள்ள எல்லா ஹோட்டல்களிலும் தோன்றிவிட வாய்ப்பு உண்டு. இது ஒரு விதத்தில் காலத்தின் கட்டாயமும்கூட. தொடர்ந்து உழைக்க பிரியப்படாததாலோ, ஹோட்டல் வேலை செய்வதை அகௌரவமாக நினைக்கும் எண்ணம் இன்னமும் இருக்கிறது என்பதாலோ, ஹோட்டல்களில் பணியாற்ற போதிய நபர்கள் கிடைப்பதில்லை'' என்கிறார்.

லயன்ஸ் க்ளப் இந்த மனநலக் காப்பகத்திலுள்ள லாண்டரியை நவீனப் படுத்த முன்வந்திருக்கிறது. நல்லது தானே. நடக்கட்டும்!

— குல்லூ

படங்கள்: யோகா



## அருள்வாக்கு

ஸரீயான காரணம் காட்டி க்ரிடிஸைஸ் செய்கிறதில் தப்பேயில்லை. விதண்டாவாதமாகப் பண்ணினால்தான் தப்பு. நியாயமான காரணங்கள், பாயின்ட்கள் தோன்றும்போது நாமும் மற்றவர்களை க்ரிடிஸைஸ் செய்ய வேண்டியதுதான். அதே மாதிரி அவர்களும் நம்மைச் செய்ய வேண்டியது தான்.

(கண்டனம் செய்வதில்) தப்பு இரண்டு விதத்தில் தான் இருக்கிறது. ஒன்று, ஸரியாகக் காரணம் காட்டாமல் விதண்டை பண்ணுவது. இன்னொன்று, நம் மனஸில் த்வேஷத்தோடு க்ரிடிஸைஸ் பண்ணப்போவது. மாற்று அபிப்ராயமுள்ளவர்களிடமும் த்வேஷம் என்பதேயில்லாமல் ப்ரேமையோடு, அபிப்ராயங்களை மட்டும் க்ரிடிஸைஸ் செய்ய வேண்டும். 'அவர்கள் புத்திக்கு அப்படித் தோன்றுகிறது. நமக்குத் தோன்றுவதை அவர்களுக்கு எடுத்துச் சொல்வோம். அவர்களுக்குத் தோன்றுவதையும் கேட்டுக் கொள்வோம். இரண்டு பேரும் இரண்டையும் அலசி ஆலோசித்துப் பார்ப்போம்' என்ற மனோபாவத்தோடு நடக்க வேண்டும். இந்த ப்ரேமையில்தான் ஸமரஸம் இருக்க வேண்டுமே தவிர கொள்கையில் இல்லை. கொள்கையில் அப்படி (ஸமரஸம்) என்று சும்மாயிருந்தால், மற்றவர்கள் நம் தலையில் ஏறி உட்கார்ந்து கொண்டு நம்மை ஏமாந்த சோணகிரிகளாக்குவதில்தான் முடியும். மனஸில் அன்போடு, நமக்கு ஸத்யமாகத் தெரியும் கொள்கைகளுக்காகப் போராட வேண்டுமென்பதே முறை.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# வில்லுண்டு, பயமில்லை!

**குருஜி. ஏ.எஸ். ராகவன்**

**வே**தங்கள், ஸ்ம்ருதிகள், உபநிஷத், சாத்திரங்கள், புராண - இதிஹாசங்கள் என ஒன்றுவிடாமல் அத்தனையிலும் முருகப் பெருமானைப் பற்றிய உயர்வான குறிப்புகள் இடம் பெற்றிருக்கின்றன. வடமொழி நூலான ஸ்காந்தம், தமிழில் கந்த புராணம் - இவையிரண்டும் முழுக்க முழுக்க முருகன் பெருமைகளையே பேசுகின்றன. வால்மீகி ராமாயணத்தில் விச்வாமித்ர மஹரிஷி 'குமார சம்பவ' கதையை ராம-லக்ஷ்மணர்களுக்கு விவரிப்பதாக ஒரு காட்சி வருகிறது! 'கந்தனின் கதையைக் கேட்பவர்கள் செல்வமும் கீர்த்தியும் அடைந்து, இக வாழ்வில் நீண்ட ஆயுளும், இறுதியில் ஸ்கந்தலோக அமர வாழ்வும் பெறுவர்' என்று சொல்லி முடிக்கிறார் விச்வாமித்ரர்!

**கி**.மு. காலத்திலேயே வட இந்தியாவில் முருகனை கார்த்திகேயா, சுப்ரமண்யா என்ற பெயர்களில் பிரதான தேவதையாக வழிபட்டு வந்ததற்கான ஆதாரங்கள் இருக்கின்றன. தற்போதைய ஹரியானா மாநிலம் உள்ள பகுதியில் கிடைத்த பழைய நாணயங்களில் ஆறு முகங்களுடனான கார்த்திகேயன் உருவம் காணப்படுகிறது. 'பாகவத ஸ்வாமினோ பிரம்மண்யதேவஸ்ய' என்ற வாசகம் அதில் பொறிக்கப்பட்டிருக்கிறது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டு நாணயங்கள் சிலவற்றில் வேல் பிடித்த கரத்தனாக மயிலோடு காணப்படுகிறான் குமாரக் கடவுள். குமார குப்த மன்னர் காலத்து தங்க நாணயங்கள், அவனை மயில் மீதமர்ந்த வீரனாகச் சித்திரித்து 'மகேந்திர குமாரா' என்றழைக்கிறது. ஆந்திராவிலும் மஹாராஷ்டிராவிலும், வடக்கே ஜம்முவிலும் வடகிழக்கே வங்காளத்திலும் முருகன் வழிபாடு நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகிறது.

ஆனால் அந்த பழைய திருவுருவங்களிலெல்லாம் முருகனை வில் ஏந்திய வீரனாகக் காணக் கிடைப்பதில்லை. இந்த அரிய, அற்புதத் தோற்றத்துடன் தமிழகத்தில் மட்டுமே அவனைப் பார்க்கிறோம். 'வில்லுடையான்பட்டு' என்று ஊர்ப் பெயரிலேயே அவன் வித்தியாசமான ஆயுதத்தைப் பறைசாற்றுகிற தலம் தவிர, திருவண்ணாமலை கம்பத்திளையனார் கோயில், திருவையாறு, திருவிடைக்கழி, சாயக்காடு, வின நகர், அனந்தமங்கலம், திருவேற்காடு, திருமயிலாடி ஆகிய தலங்களிலும் இத்தோற்றத்தில் முருகன் காணக் கிடைக்கிறான்.

ராமனுக்கேயுரிய வில் அல்லது விஜயனுக்கே உரிய வில், முருகனின் கைக்கு மாறியது ஏன்...? எப்படி...?

மணிவண்ணனான திருமாலை வாயார பாடிய கோதை நாச்சியார், ஒரு கட்டத்தில் அவன் கையில் முருகனுக்கேயுரிய வேலைக் கொடுத்து அழகு பார்த்திருக்கிறாள்:

"வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி..."

( )

**இ**ஷ்ட தெய்வத்திடம் உரிமை எடுத்துக் கொள்ளும் மரபு கவிஞர்களோடு நின்று விடாமல் சிலை, சிற்பம் வடித்தவர்களிடமும் தொடர்ந்திருக்கிறது. இதன் வெளிப்பாடுதான் வில்லேந்திய வேலன் திருக்கோலம்.

அம்பும் வில்லும் ஏந்தி முருகன் வில்லுடையான்பட்டில் நிற்கிற அருள் வடிவம் சோழ நாட்டுச் சிற்பிகளின் கற்பனையாக இருக்கலாம்.

திருமுருகாற்றுப்படையிலும் கந்த புராணத்திலும்கூட இத்தோற்றம் வர்ணிக்கப்படுகிறது.

"வானோர் வணங்கும் விற்தானைத் தலைவன்" என்கிறார் நக்கீரர் திருமுருகாற்றுப்படையில்.

கந்தபுராணமோ, 'மாலைத் தோளினன் வரிவில் வாளியன்' என்று அவனை வர்ணிக்கிறது.

கம்பராமாயணத்தைப் படித்த பிறகு தமிழர்களுக்கு முருகன் கையில் வில்லைக் கொடுத்தே பார்த்து விட வேண்டும் என்று தோன்றியிருக்கிறது போலும்! 'துனுஷ் சுப்ரமண்யனாக' அவனைச் சமைத்திருக்கிறார்கள்.

வில்லுடையான்பட்டு, தென்னாற்காடு மாவட்டம் நெய்வேலி புது நகரின் கிழ்ப்புரத்தில் அமைந்திருக்கிறது.



வடலூர் ரயில் நிலையத்திலிருந்து வடக்கே சுமார் நான்கு மைல் தூரம். கடலூர், விருத்தாசலம், சிதம்பரம் ஆகிய இடங்களிலிருந்து பேருந்தில் வரலாம்.

சிவசுப்ரமண்யசுவாமி ஆலயம் கிழக்கு நோக்கி அமைந்திருக்கிறது. கோவிலுக்கு எதிரே அரச மரமும் வேம்பும் உள்ளன.

மரத்தடியில் விநாயகர், நாகர் தேவதைகள். கோவிலுக்குப் பின்னே வன்னி மரமும் நவக்கிரஹங்களின் சன்னிதியும் வன்னி மரமும் திருக்குளமும் காணப்படுகின்றன.

உள்ளே நுழைந்ததும் கொடி மரத்துக்கு முன்பாக வேல் கம்பங்கள் பூமியில் ஊன்றியிருப்பதைப் பார்க்கலாம். ஒன்றல்ல, இரண்டல்ல... ஏழு வேல்கள்! நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிட்ட ஏழு வேல்கள் நினைவுக்கு வருகின்றன.

***வீரவேல், தாரை வேல், விண்ணோர்***
***சிறை மீட்ட தீர வேல்***
***செவ்வேள் திருக்கை வேல், வாரி***
***குளித்தவேல், கொற்றவேல்***
***சூர்மார்பும் குன்றும் தொளைத்த***
***வேலுண்டே துணை***

ஏழு வேல்களையும் நாம் வணங்க நிறுத்திவிட்டு வில்லேந்தி நிற்கிறான் வேலன்!

வேல்களை அடுத்து மிகப் பெரிய மயில் உருவமொன்று முருகனை நோக்கியவாறு நிற்கிறது. நீண்ட தோகை; கால்களில் பிணைந்து நெளியும் அரவுடன் அரிய கலைச் சிற்பம்.

இவற்றைக் கடந்து, அடுத்த திருச்சுற்றுக்குள் நுழையும் முன் இடது பக்கம் சித்தி விநாயகரும் ஆதி லிங்கமும் உள்ளன. வலப்புறம் பால தண்டாயுதபாணி காட்சி தருகிறார். உள்ளே, பிராகாரத்தில் ஹனுமான், நர்த்தன விநாயகர், அஷ்டபுஜ ஜலதுர்காதேவி, சண்டிகேசுவரர், சனிபகவான் ஆகியோரின் கலை நுட்பம் நிறைந்த திருவடிவங்கள்.

இரு புறங்களிலும் எட்டடி உயர துவாரபாலகர்கள் காவலிருக்க, மூலவரான ஸ்ரீ சிவசுப்ரமண்ய சுவாமி, வள்ளி - தேவயானையுடன் திருக்கைகளில் வில்லும் அம்பும் ஏந்தி நிற்கிறான்! விரிசடையனாயிருக்கிறான்! இடுப்பில் சல்லடம் கட்டியிருக்கிறது. வேடன் திருவுருவம்!

இந்த மூலஸ்தான சிற்பம் ஒரே கல்லில் உருவாக்கப்பட்டது என்கிறார்கள்.

ராகவனின் வில்லை மருமகன் ஏந்தியிருப்பது சைவ - வைணவ ஒற்றுமைக்கு முன்னோடி போல் தோன்றுகிறது.

வள்ளியைத் தேடிச் சென்ற முருகன், அவள் தன்னை ஏறெடுத்துப் பார்க்காததால் வியாகுலம் அடைந்தானாம். பின்னர் வில்லேந்தி வேடன் உருவம் தரித்துப் போய் அவளை வென்றான் என்ற புராணம் உண்டு.

***வேடுவர்பு னத்திலுரு மாதிமுனி***
***சொற்படிவி***
***யாகுலம னத்தினொடு போம்வில்***
***காரனும்***

என்று திருவேளைக்காரன் வகுப்பில் வில்லேந்திய வேலனைச் சித்திரிக்கிறார் அருணகிரி நாதர்.

பல ஆயிரம் வரு






டங்களுக்கு முன்பு கானகமாய் இருந்த இடம் வேலுடையான்பட்டு. தேவர்களும் முனிவர்களும் வேண்டிக்கொண்டதன் பேரில் இங்கே கந்தன் கானக நடுவில் முதலில் ஜோதியாகவும் பின்னர் வில்லும் அம்பும் ஏந்திய வீரனாகவும் காட்சியளித்தான் என்பர்.

இப்போதுள்ள திருவுருவத்தை, தெய்வீகத் திருக்குறிப்புப்படி பூமியிலிருந்து வெளியே கொண்டு வந்து கோவில் அமைத்து வழிபட்டனராம். பதின்மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த சித்திரக்காடவன் என்ற பல்லவ மன்னன் இக் கைங்கர்யத்தைச் செய்தான் என்பர். அகழ்ந்து எடுக்கையில் மண்வெட்டி தட்டியதால் மூர்த்தி மீது சிறு வடு (இடது தோளில்) ஏற்பட்டதாம். இப்போதும் இது புலப்படுகிறது என்கிறார்கள்.

உத்ஸவமூர்த்தி வில்லும் அம்பும் ஏந்தி பாதங்களில் குறடு அணிந்து காணப்படுகிறார்! அருகில் தேவியரும் இருக்கின்றனர்.

இவ்வூரில் பாதக் குறடுகளைக் காணிக்கை செலுத்தும் பிரார்த்தனையும் வழக்கத்திலிருக்கிறது.

சுவாமி வளையாபதி சாந்தயோகி என்பவர் இத்தலத்தைப் பற்றிய நூல் எழுதியிருக்கிறார்.

அருணகிரிநாதர் இத் தலத்தைப் பாடாவிட்டாலும் வில்லேந்திய வேலனைப் பாடியிருக்கிறார்:

**'சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமுஞ்**
**சூடுதோ ளுந்தடந் திருமார்பும்**
**தூயதாள் தண்டையுங் காண ஆர்வஞ்செயுந்**
**தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்**

சூலம், வாளோடு, கோதண்டமும் இருக்கிறது அவன் கரங்களில்!

**'வே**லுண்டு வினையில்லை' என்பதோடு 'வில்லுண்டு பயமில்லை' என்ற புதிய நம்பிக்கை வாக்கியத்தையும் சேர்த்து உச்சரிக்கலாம் இனி.

(அடுத்த வாரம்:
திருப்போரூர்)

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Y[illegible]ly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

கர்ப்பத்திற்கு பிறகு,
ஸ்ட்ரெச் மார்க்குகள்
உங்களை இவ்வாறு
விளங்கச் செய்கிறது... ஸ்ட்ரெச்நில் கொண்டு
நீங்கள் அவைகளைத்
தவிர்த்தாலே தவிர

- ஸ்ட்ரெச்மார்க் என்றாலே, உங்கள் சருமத்தின் மீது விகாரமான, **நிரந்தர** தழும்புகள்.
- கர்ப்பத்தின் **நான்காவது மாதத்திலிருந்து,** பிரசவம் வரை, தினமும் இருமுறை ஸ்ட்ரெச்நில் தடவுங்கள்.
- அரிப்பை கட்டுப்படுத்தி, எலாஸ்டிசிடியை அதிகரிக்க, ஸ்ட்ரெச்நில்லில் ஆறு **இயற்கை உட்பொருட்கள்** உள்ளன.
- ஸ்ட்ரெச்நில் உங்களுக்கும் உங்கள் குழந்தைக்கும் **பாதுகாப்பானது** என்று மருத்துவக் குறிப்பீடுகள் தெரிவிக்கின்றன.

SKINCLINIQ
STRETCH NIL
CLINICALLY PROVEN

STRETCH NIL
ஸ்ட்ரெச் மார்க்குகளைத்
தவிர்ப்பதற்கான ஹெர்பல் லோஷன்

தாயாகப் போகிறவர்களின் சருமம்
என்றும் இளமையுடன் விளங்க.

எச்சரிக்கை: ஒரு முறை ஸ்ட்ரெச் மார்க் வந்துவிட்டால், அதை குணப்படுத்த முடியாது.

ஜூஃபிக் லைஃபோசயன்ஸஸ் லிமிடெட் வழங்கும் ஒரு தரம்வாய்ந்த தயாரிப்பு